திலே ஸூவிஷ்டவித்து திவ்யப்ரபந்தமயதீபத்தையேற்றி லோகத்தில் அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கி வாழ்வித்தபடியைச் சொல்லுகிறது- இதில்.

முதலியாண்டானருளிச்செய்த தனியன்.

கைதைசேர்பூம்பொழில்சூழ் கச்சிநகர்வந்துதித்த* பொய்கைப்பிரான்கவிஞர்போரேறு* வையத்தடியவர்கள்வாழவருந்தமிழ் நூற்றந்தாதி* படிவிளங்கச்செய்தான் பரிந்து.

வ்யா— (கைதைசேர்பூம்பொழில்சூழ் கச்சிநகர்வந்துதித்த பொய்கைப்பிரான்) இத்தால் இவர் ஜந்மவைபவஞ்சொல்லுகிறது. கைதை- கேதகை, தாழை. 'கைதைவேலிமங்கை' என்றும் 'கொக்கலர்தடந்தாழைவேலி' என்றும் சொல்லுமாப்போலே அது தான் நீர்நிலங்களிலேயாய்த்துநிற்பது. 'தாழைதண்ணாம்பல் தடம்பெரும்பொய்கைவாய்' என்னும்படி அம்பூந்தேனிளஞ்சோலைசூழ்ந்த கச்சிவெஃகாவில் பொய்கையிலே எம்பெருமான்பொன்வயிற்றிற் பூவைபோன்ற பொற்றாமரைப்பூவிலே ஐப்பசியில் திருவோணநாளாய்த்து இவரவதரித்தது. பத்மஜனன் பூவிலேப்போலேயாய்த்துப் பொய்கையாரான இவர்பிறப்பும். 'வந்துதித்த' என்கையாலே ஸூர்யோதயம்போலேயாய்த்து இவருதயமும். 'வருத்தும்புறவிருள்மாய்த்த பொய்கைப்பிரான்' என்னக்கடவதிறே. பொய்கையிலே அவதரிக்கையாலே அதுவே நிரூபகமாயிருக்கை, அதுதான் ஸரஸ்வதி பயஸ்விநியாய்ப்ப்ரவஹித்ததாய்த்து; தத்தீரமான பொய்கையென்கை. (பொய்கைப்பிரான்) மருஸ்தலியில் பொய்கைபோலேஎல்லார்க்குமுபகாரகராயிருக்கை, தீர்த்தகரராய்த்திரியுமவரிறே. கவிஞர்போரேறாகையாவது:— கவிச்ரேஷ்டரென்றபடி. முதலாழ்வார்கள் மூவரிலும் முதலானவராகையாலே 'ஆதிகவி' என்னும்படியான அதிசயத்தையுடையராயிருப்பர். படைத்தான் கவியாரும், பரகாலகவியாரும் 'செஞ்சொற்கவிகாள்' என்றும் 'செந்தமிழ்பாடுவார்' என்றும் கொண்டாடப்படுமவருமாய் நாட்டிற் கவிகளுக்கும் விலக்ஷணகவியாயிருப்பர். இதுபொய்கை

யார்வாக்கினிற்கண்டுகொள்க' என்றிறே தமிழ்கூறுவது. அந்த வேற்றமெல்லாவற்றையும்பற்ற 'கவிஞர்போரேறு' என்கிறது. ஸர்வவிஷயவைலக்ஷண்யத்தையுடையவர் வைஷ்ணவர்கள் வாழும்படி ஸ்நேஹத்தாலே விலக்ஷணவ்யாபாரநிர்வாணம் பண்ணினபடி சொல்லுகிறது (வையத்தடியவர்கள்வாழ வருந்தமிழ் நூற்றந்தாதி படிவிளங்கச்செய்தான் பரிந்து) என்று வையத்தடியவர்களாகிறார் ஸம்ஸாரரான ஸ்ரீவைஷ்ணவர்கள். அவர்கட்கேயிறே வாழவேண்டுவது. வானத்தணியமரர்க்கு வாழ்வு நித்யமாயிறேயிருக்கிறது; இத்தாலே இவர்கள் வாழ்கையாவது- சேஷத்வஸ்வபாவத்தை ஸ்வாநுஸந்தானத்தாலே யுண்டாக்குமதானத்யவஸாயமென்கை. 'நின்தாளிணைக்கீழ்வாழ்ச்சி' என்னக்கடவதிறே. இவ்வநுஸந்தானமே வாழ்வாகவுமாம் அருந்தமிழ் நூற்றந்தாதியாவது— ஸம்ஸ்க்ருதநிர்ணயத்தில்வந்தால் அரிதாய், தமிழானவ்யாகாரத்தாலே ஸுலபமாய், அதுதான் நூறுபாட்டாய், அந்தாதியாயிருக்கை. உடையவர் நூற்றந்தாதிக்கேற்றம் எட்டுப்பாட்டாயிருக்கும். (அருந்தமிழ்நூற்றந்தாதி) அதுதான் வெளிறாயிருக்கையன்றிக்கே அரிதாய், ஸம்ஸ்க்ருதமாயிருக்கையன்றிக்கே ஸுஸம்ஸ்க்ருதமான த்ராவிடமாய், ஆயிரமைந்நூறாயிருக்கையன்றிக்கே நூறாயிருக்கை. அன்றிக்கே வையத்தடியவர்கள்வாழ வரும் தமிழ்நூற்றந்தாதி என்று ஆகவுமாம். அப்போது வையத்தடியவர்கள் வாழவருமதான தமிழ்நூற்றந்தாதி என்று நிர்வஹிக்கக்கடவது. நூற்றந்தாதிபடிவிளங்கச்செய்கையாவது— 'வையந்தகளியா' என்றுதொடங்கி ஓரடியைமுடிவாகவருளிச்செய்த திவ்யப்ரபந்தத்தாலே ஸம்ஸாரமெங்கும் நிர்வாஹமாம்படி நிர்வஹித்தாரென்கை. வருத்தும்புறவிருள்மாற்ற வெம்பொய்கைப்பிரான் மறையின் கருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையுங்கூட்டி ஒன்றத்திரித்தன்றெரித்த திருவிளக்காகையாலே படியிலே ஸம்ஸ்ருதியிலே, ப்ரகாசிக்கும்படி செய்தருளினாரென்றாகவுமாம். அன்றிக்கே 'படி' என்று உபாதானமாய் த்ராவிடவேதத்துக்குப்படி சந்தமாயிருக்

கும்படி செய்தருளினரென்னவுமாம். விளக்கம்- ப்ரகாசம், 'படி' என்று விக்ரஹமாய் 'திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன்' என்னும்படி கண்டறியும்படி செய்தாரென்றாகவுமாம். புரிவுடனே செய்கையாவது— சேர்ந்தவிஷய ஸ்நேஹத்தாலே யென்னுதல் பரவிஷயஸ்நேஹத்தாலே யென்னுதல் 'செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன்சொன்மாலை' என்றாரிறே. ஸ்நேஹத்தாலேயிறே விளக்கெரிவது. இத்தால் அவர் நிர்வ்யபேக்ஷயோபகாரகத்வத்தால்வந்த உபகாரமளவஞ்சொல்லி யீடுபட்டதாய்த்து.

தனியன்வ்யாக்யானம்முற்றிற்று.

---

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

இயற்பா

# முதற்றிருவந்தாதி.

அப்பிள்ளையுரையின் அவதாரிகை.

ஸ்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனான ஸர்வேஶ்வரன் நித்யவிபூதியிலே நித்ய ஸங்கோசரஹிதஜ்ஞாநரான நித்யஸூரிகளை நித்யகைங்கர்யங்கொண்டு நித்யாநந்தியாயிருக்கச்செய்தேயும் அவர்களைப்போலே கைங்கர்யநிரதராய் வாழுகைக்கு இட்டுப்பிறந்துவைத்து அதுக்கசலாய் அவித்யாகர்மவாஸநாருசி ப்ரக்ருதி பரவசராய்ப் பரிப்ரமிக்கிற ஸம்ஸாரிசேதநரைத் திருத்திப் பண்ணிக்கொள்ளுகைக்காக, இவர்கள் அழிந்துகிடக்கிற தசையிலே ஸ்வாராதனோபகரணமான கரணகளேபரங்களைத் தன்கருணையாலே கொடுத்தருளி அவற்றைக்கொண்டு வ்யபிசரியாதே நல்வழிநடக்கைக்குடலாக ஶாஸ்த்ராதிஶாஸ்த்ரங்களைப் ப்ரவர்த்திப்பிக்க, அவற்றை திரஸ்கரித்து ஸ்வைரம் ஸஞ்சரி

க்கிறதசையிலே ராமக்ருஷ்ணாதிரூபேண வந்தவதரித்தரு
ளி உபதேசாநுஷ்டாநங்களாலும் ரூபௌதார்ய மாநு
சேஷ்டிதங்களாலும் வசீகரித்து இவர்களைத் திருத்தப்பார்த்தவி
டத்தில் அவற்றுக்கு வசப்படாதபடி ஐஹிகவிஷயங்களிலேம
ண்டி இவர்கள் நஷ்டகல்பராய்ப் போகக்கண்டபடியாலே ஆழ்
வார்களைக்கொண்டு இவர்களைச் சேர்த்துக்கொள்வானாக, ஆமு
தல்வரான முதலாழ்வார்களை ப்ரதமாவதரிப்பித்தருளினன்.
இவர்களாகிறார்- பகவதாகஸ்மிக கடாக்ஷவிசேஷ லப்தமான
ஜ்ஞாநவைராக்யங்களைக் குறைவறவுடையராய் நித்யஸூரிகளை
ப்போலே பிறப்பேபிடித்து பகவதநுபவத்திலே பழுத்து ஸம்
ஸாரயாத்ரையிற் கண்ணற்று 'இன்கவி பாடும் பரமகவிகள்'
என்றும் 'செந்தமிழ்பாடுவார்' என்றும் நாவீறுடைய பெருமா
ளும் நாலுகவிப்பெருமாளும் கொண்டாடும்படியான வேண்ட
ப்பாடுடையராய் பரத்வாதிகளைந்தையும் ஒருக்காலேகண்டும
ண்டி அநுபவிக்கும் சதிரையுடையராயிருக்கச்செய்தே ஆ
றுபெருக்கெடுத்து எங்குமொத்துப்போகாநிற்கநீர்க்கு நோக்கு
ஓரிடத்திலேயாயிருக்குமாப்போலே திருவுலகளந்தருளினவிட
த்திலும் திருமலையிலும் கால்தாழ்ந்து அநுபவித்துப்போரு
மவர்களாய் அறிவுண்டாயிருக்க பகவத்விஷயத்தைக் காற்க
டைக்கொண்டு ஐஹிகவிஷயங்களிலே மண்டித்திரிகிற ஸம்ஸா
ரிகளோட்டை ஸஹவாஸம் துஸ்ஸஹமாய் அவர்கள்வஸிக்
கிற நாட்டைவிட்டு அறிவுக்கு அடைவில்லாத ஸ்தாவரங்கள்வ
ஸிக்கிற காட்டைவிரும்பி அவ்விடத்திலும் யத்ருச்சாஸஞ்சா
ரராய் ஒருவரையொருவர் அறியாதபடி மறைந்து வஸித்
தார் சில ஜ்ஞாநவ்ருத்தர்களாய்த்து, இப்படிவஸிக்கிற இவர்
கள்மூவரும் யாத்ருச்சிகமாக ஒருநாள் திருக்கோவலூர்ப்ரதேச
த்திலே வந்துஸங்கதராக அவ்வளவிலே பெருமழையும் பெ
ருங்காற்றும் ப்ரவ்ருத்தமாக அதைக்கண்டு மழைக்கு ஒதுங்கி
ஓரிடைகழியிலே ஒருவர்புக்குக்கிடக்க; மற்றையவர்வந்து 'திறக்
கவேணும்?' என்ன; ஒருவர்கிடக்க இடம்போரு மத்தனையென்ன;

'ஒருவர் கிடந்தவிடம் இருவர்க்கு இருக்கலாங்காணும் திறவும்?'
என்ன; 'ஒருவர்மூச்சு ஒருவர் பொருத ஸம்ஸாரத்திலே இப்
படிசொன்ன இவர் கேவலரல்லர்' என்றுதிறக்க அவரும்புகுந்து
இவ்விருவருமாக இருக்கிறவளவிலே மற்றையவரும்வந்து திற
க்கச்சொல்ல; 'எங்களிருவர்க்கும் இருக்கவிடம் போருமத்தனை'
என்ன 'இருவரிருந்தவிடம் மூவர்க்குநிற்கலாம் திறவும்' என்ன
இவரும்கேவலரல்லர் என்றுதிறக்க; இவர்கள்மூவரும்கூடி நிற்
கச்செய்தே ஸர்வேஶ்வரன் தானும்பிராட்டியுமாகவந்து தனித்த
னியேஇவர்களைப் பின்பற்றித்திரிந்த நெஞ்சாறல்தீர இவர்கள்
மூவர்க்கும் நடுவேபுக்குநெருக்க நம்மூவரையுமொழிய வேறு
புக்கு நெருக்குகிறவர்கள்யார்? என்று விளக்கேற்றிப்பார்க்கவே
ணும் என்ன; அவர்களிலேயொருவரான பொய்கையார் லீலா
விபூதியில் கார்யகாரணரூபமான ஸமஸ்தவஸ்துக்களும்
ஸ்வாதீநமாயிருக்கிறபடியை பரபக்திரூபாபந்நஜ்ஞானத்
தாலே தர்ஶித்து அத்தை ஒருவிளக்காகரூபித்துக்கொண்டு
அநுபவபரீவாஹரூபமாக வையந்தகளி யருளிச்செய்தார்.
அநந்தரம் ஸ்ரீபூதத்தார் வையந்தகளிகேட்கையாலே அந்த
பரபக்திரூபாபந்நஜ்ஞானம்முற்றி பரதத்வத்தை விஶத
மாக தர்ஶிக்கைக்கு உபகரணமான பரஜ்ஞானமாகிற உஜ்ஜ்வ
லதீபத்தை ஏற்றுகிறவழியாலே அன்பேதகளியருளிச்செய்
தார். அநந்தரம் மூன்றுமாழ்வார்- அவனை அநுபவிக்கப்பெ
றில் தரித்தும் பெறாவிடில் மூச்சடங்கும்படியான பரமபக்தி
யையுடையராய்க்கொண்டு அவன்படிகளைக் கட்டடங்கக்கண்டு
மண்டி அநுபவிக்கிறவழியாலே திருக்கண்டேனருளிச்செய்தார்.

ஜ்ஞானபக்திஸாக்ஷாத்காரங்கள் மூன்றும் ப்ரபந்தத்ரயத்
துக்கும் தாத்பர்யமாக ஆசார்யர்களருளிச்செய்திருக்க, விபர்ய
யமாக விங்ஙனே சொல்லலாமோ? வென்னில்; அதுக்குக்கு
றையில்லை. அங்கு ஜ்ஞானமென்கிறது- பரபக்திரூபாபந்ந
ஜ்ஞானத்தை, பக்தியென்கிறது- பரஜ்ஞானதஶாபந்நமானப்ரே
மத்தை, ஸாக்ஷாத்காரமென்கிறது- பரஜ்ஞான விபாகரூ

ரூபையான பரபக்தியை, கடாக்ஷாநாசமாக ஜ்ஞாநஜ-
நித்து அது ஸ்வாநுபவாநுகுணஸ்வரூபமாய் முற்றி அந்-
ஜ்ஞாநம் 'த்ரஷ்டவ்ய:' என்னும்படி ஸாக்ஷாத்காரரூபமாய் அந்-
ஜ்ஞாநம் விஷயவைலக்ஷண்யத்தை அவகாஹித்து ஸக்ரமமாவி-
வேணமாய், பின்னை பரபக்த்யாதிகளாக பரிணமிக்குமாம். ப்ரா-
மாணிகர்படியில் இவர்களுக்கு முதலிலே அந்வயமில்லையிறே. கடா-
க்ஷஜ்ஞாநாநுரூப ஸீமையான பக்தியினுடைய ஸ்தாநத்திலே ஸ-
மவச்ச்ரவணமாம்நின்று அநுஸந்தாநமடைந்த பரபக்தியாய்த்து
இவரது, என்றிறே ப்ரதமாசார்யரான ஆழ்வாருக்கு ஆசா-
ர்யர்களருளிச்செய்வது; அது அல்லாத ஆழ்வார்களுக்கும் ஒக்-
குமிறே. அல்லாதபோது ஆழ்வார்களெல்லாரும் ஸாதகப்ரக்ருதி-
களென்னப்போகாதே; ஆகையால் விரோதமில்லை.

பரபக்த்யாதிகள் மூன்றும் ஒரொருவர்க்கே குறைவறவுண்-
டாயிருக்கச்செய்தேயும் ஒரொருத்தர்க்கு ஒவ்வொன்றிலே ஊ-
ற்றமாயிருக்கும். ஸமஸ்தகல்யாணாதிகளெல்லாம் எல்லார்க்கும்
அநுபாவ்யமாகாநிற்கச்செய்தே ஒரொன்றில் ஒவ்வொருத்தர்-
க்கு ஊற்றம்சொல்லுகிறபோலே அநுபவாபிநிவேசமா-
த்ரையான. பரபக்த்யாத்யவஸ்தைகளிலும் தனித்தனியே ஊற்-
றஞ்சொல்லக் குறையில்லை. ஸர்வஸாம்யமுண்டாயிருந்ததேயா-
கிலும் ஒருவனுக்கே க்ரமத்தாலே பிறக்கக்கடவ பரபக்த்யாத்ய-
வஸ்தாத்ரயமும் தளமாக ப்ராப்யத்ரயமும் அவதரிக்கையாலே
அவஸ்தைப்பார்த்தால் ஸாத்யமாய்த் தலைக்கட்டக்கட-
வது. ஸர்வேச்வர ஸம்பந்திகளுக்கு ஸர்வஸாம்யமுண்-
டாயிருக்கச்செய்தே வேதாந்தவ்ருத்த ப்ராப்யப்ராபக-
வமாகையாலே ப்ராப்யமென்றும் கொள்ளுகிறபோல் இங்-
கும் ப்ராப்யமென்றும் கொள்ளத் தட்டில்லை.

## முதற்பாட்டு.

விசித்ரகார்யமான ஜகத்துக்குக் காரணமாம்போது
விசித்ரஜ்ஞாநசக்தியுக்தனைப் ஸம்பந்தக்ராதி ஜிஜ்ஞாஸாஸ்யான
ஸர்வஜ்ஞனே காரணமாகவேணும் என்னும் அநுமாநத்-

மூ— வையந்தகளியாவார்கடலேநெய்யாக* வெய்யகதிரோன்விளக்காக* செய்யசுடராழியானடிக்கே சூட்டினேன்சொன்மாலை* இடராழிநீங்குகவேயென்று.

தாலே · ஜகத்காரணவஸ்துவை நிர்ணயித்து நின்றுகொண்(டு) ஸர்வேச்வரனை ஸர்வேச்வரன்றிருவடிகளிலே ஸ்வரூப அநுரூபமான வாசிககைங்கர்யம் பண்ணப்பெற்றேனென்று க்ருதார்த்தராகிறார்.

'காரியவாந்யோர்வித்தி' என்கிறபடியே ஸர்வஜ்ஞ ஸாத்யமான கார்யத்தைப்படைத்தான, (வையம்) ப்ருதிவியானது, மேல்நெய்யுந்திரியுமாக ரக்ஷிக்கப்படுகிற வஸ்துக்களுக்காதாரமான, (தகளியா) தகளியாகவும், (வார்) அந்தப்ருதிவியைச்சுற்றுஞ்சூழ்ந்து த்ரவஸ்வபாவமாய், 'தேநவக்ருத்ஸீமாநாஜலராசய:' என்கிறபடியே ஸர்வஜ்ஞாஜ்ஞையாலே கரையை அதிக்ரமியாமல் அதுக்குள்ளே யடங்கிக்கிடக்கிற (கடல்) கடலின்நீரான ஸம்ஸமானது, மேலேற்றப்போகிற விளக்கை உத்போதநம் ஒளிவிட்டெரிக்கும்படிபண்ணும், (நெய்யாக) நெய்யாகவும், கிரணங்களைக்கொண்டு த்ரவிக்கப்பட்ட ஜலத்தாலே ஸவிஸ்ருதமாய், (வெய்ய) உத்தாபகமான, (கதிரோன்) கிரணங்களையுடையனாய், 'பீஷோதேதி ஸூர்ய:' என்கிறபடியே ஸர்வஜ்ஞாஜ்ஞைக்கு நடுங்கி முப்பதுவட்டம் உதிப்பதும் அஸ்தமிப்பதுமாய்த் திரியக்கடவ ஆதித்யன், (விளக்காக) அப்ரகாசகமான விளக்காகவும், இருளன்னமாமேனிக்கு விளக்கேற்றினாப்போலே பசைத்தொடையாக, (செய்ய) சிவந்த, (சுடர்) ஒளியையுடைய, (ஆழியான்) திருவாழியாழ்வானை நிரூபகமாகவுடைய ஸர்வேச்வரனுடைய, (அடிக்கே) திருவடிகளிலே, (இடராழி) நித்யகைங்கர்யம் பண்ணப்பெறாதவென்னுடைய துக்கஸாகரமானது, (நீங்குகஎன்று) விட்டுநீங்கும்படியாக, தத்வஜ்ஞாநவைசிஷ்ட்யங்களை உள்ளீடாகவைத்துத் தொடுத்த நிரதிசயபோக்யமான, (சொல்மாலை) சப்தஸந்தர்ப்பங்களை, (சூட்டினேன்) அவற்றுக்கு அலங்காரமாம்படி

மூ— என்று கடல்கடைந்த தெவ்வுலகம்நீரேற்றது * ஒன்று மதனையுணரேன்நான் * அன்றதடைத்துடைத்துக்கண்படுத்த ஆழி * இதுநீபடைத்திடந்துண்டுமிழ்ந்தபார். (௨)

---

உ- தன்னை ஆச்ரயித்த தேவர்கள் விஷயத்தில் செய்கைக்காக 'அண்ணல்செய்தலைகடல்கடைந்து' என்னும்படி தன் ஸர்வேச்வரத்வத்தைத் தோற்ற, (கடல் கடைந்தது) கடல்கடைந்தருளிற்று, (என்று) எத்தனை நாளுண்டு என்றும், ஸநகஸநந்தநாதிகளான ப்ரஹ்மாதிகளும் திருவடிவிளக்குவார், விளக்கின் தீர்த்தத்தை சிரஸாவஹித்து பவித்ராம்படி ஐச்வர்யத்தினையை ஸாபேக்ஷமாக்கும்படி ஆச்ரயிப்பாக்கொண்டு, (நீரேற்றது) உதார வேஷமாக்கலிலே நீரேற்றளந்துகொண்டது, எ- எந்த, (உலகம்) லோகமென்றும், அவ்வோ செயல்களிலே குமிழ்நீருண்ணக்கடவதான, (அதனை) அந்த திவ்யசேஷ்டிதத்தை, (ஒன்றும்) ஏக தேசமும், (நான்) யான், (உணரேன்) ஸாக்ஷாத்கரிக்க மாட்டுகிறிலேன், (அன்று) ராவணன் திருவினைப்பிரித்தவன்று, 'ஸீதாம்வேதேவேஹி ஸாகரே ஸேது' என்கிறபடியே ஸமுத்ரவ்யாபாரமாக ஸஜாதீயமான ஸமுத்ரத்தை- (அடைத்து) மலைகளாலேயடைத்து, (உடைத்து) அங்குள்ளவர்கள் இங்குவந்து நலியாதபடி பாணவிஷ்டியாலேயுடைத்து, எழுப்பிக்காயக்கொள்ளலாம்படி- (கண்படுத்த) கண்வளர்ந்த, (ஆழி) கடலாகும், (அது) அந்தக்கடல், (நீ) ரக்ஷ்யவர்க்கஸம்ரக்ஷணத்திலே தீக்ஷிதனையிருக்கிற நீ, (படைத்து) அழிந்தவன்று ஸ்ருஷ்டித்து, (இடந்து) ஸ்வாஜ்ஞாப்ரளய த்திலே இடந்தெடுத்து, (உண்டு) மேல்ப்ரளயத்தில் அழியாதபடி திருவயிற்றிலேவைத்து, (உமிழ்ந்த) வெளிநாடுகாணப்புறப்படவிட்டு, இப்படிஉன்கையிலே பட்டிபட்ட பண்ணிரண்டும் பட்டுக்கிடக்கிற, (பார்) ஸ்ருஷ்டியாக்கும், (இது) இந்தஸ்ருஷ்டி.

'கண்டவாற்றால் தனதேயுலகெனநின்றான்' என்கிறபடியே இவ்வோதிய சேஷ்டிதங்கள் தானே அவனே ஸர்வாதிகனென்னுமிடத்தைக் காட்டுகிறதல்லயோ? வென்கை. 'என்று' என்கை

மூ— பாரளவு மோரடிவைத் தோரடியும் பாருடுத்த* நீர ளவுஞ்செல்லநிமிர்ந்ததே* சூருருவின்பேயளவுகண்டபெருமான் அறிகிலேன்* நீயளவுகண்டநெறி. (௩)

---

உ- யாலே திரையும் நரையும் இப்போதும் மாறிற்றில்லையென்கை. 'எவ்வுலகம்' என்கையாலே அளந்தஅடிச்சுவடு இப்போதும் அப்படியே எடுக்கலாயிருக்கை. (௨)

மூன்றாம்பாட்டு.

அ— 'எவ்வுலகம்நீரேற்றது' என்றுசொன்ன திருவுலகளந்தருளின திவ்யசேஷ்டிதத்திலே திருவுள்ளஞ்சென்று அத்தை அநுஸந்திக்கப்புக்கவிடத்தில் நிலைகொள்ளமாட்டாமல் அதிலேகிடந்தலைகிறார்.

(ஓரடி) அதிமோகமான அழகையுடைய ஒருதிருவடியை, 'படிக்களவாகநிமிர்த்த' என்கிறபடியே (பாரளவும்) ஸர்வபூமியுள்ளவளவேகிற்கும்படி, (வைத்து) குறைசாங்கிவைத்து, (ஓரடியும்) அத்தோடு ஸாத்ருஶ்யவிகல்பம்பண்ணலாம்படியான மேலேயெடுத்த மற்றொருதிருவடியும், (பார்) அண்டகடாஹத்தை (உடுத்த) சூழ்ந்த, (நீரளவும்செல்ல) ஆவரணஜலத்தளவும்செல்ல (நிமிர்ந்தது) வளர்ந்ததிறே, தன்வடிவைமறைத்து; (சூர்உருவின்) தெய்வநங்கையான யஶோதை வடிவுகொண்டுவந்து, (பேய்) பூதனையை, அவள்நினைவு அவளோடேபோம்படி, (அளவுகண்ட) அளவிட்டுமுடித்தசெயலாலே (பெருமான்) ஜகத்துக்குஶேஷியானவுன்னை நோக்கித்தந்தவனே, (நீ) நீ, (அளவுகண்ட) அளந்துகொண்ட, (நெறி) வழியை, (அறிகிலேன்) நான்இன்னபடியென்று அறியமாட்டுகிறிலேன்.

இச்செயலை அநுஸந்தித்தால் அதிலே ஆழங்காற்படுமதொழிய அளவிட்டு அநுஸந்திக்கமாட்டுகிறிலேனென்று கருத்து. 'சூர்மணங்குந்தெய்வப் பெண்பெயர்' என்கிறபடியே திவ்யாகாரையான பேயென்றபடி. 'பேயளவுகண்ட" என்றவித்தால் ஸ்வயத்நத்தாலே அவனையறியப்புகில் பூதனைபட்டது படுவரென்றுகருத்து. 'அறிகிலேன்நீயளவுகண்டநெறி' என்கிறது

மூ— நெறி வாசல்தானேயாய் நின்றானை* ஐந்து பொறிவாசற்போர்க்கதவஞ்சாத்தி*- அறிவானும் ஆலமரநீழலறம்நால்வர்க்கன்றுரைத்த*ஆலமமர்கண்டத்தரன். (௪)

நீ என்கிறத்தில் நினைக்கிறோமதும் என்னவென்று அறிகிறிலேனென்றுமாம். (௩)

நாலாம்பாட்டு.

அ— அவனருளடியாகவந்ததெளிவால் குறைவற்றநானுமுட்பட நீஞ்சிக்கரையேறமாட்டாமல் கிடந்தலையாநிற்க ஸ்வயத்நத்தாலேவந்த ஜ்ஞாநஶக்திகளைப் போரப்பொலியநினைத்து ஒருவனையறிய ஒருப்படுவதே! என்னமதிகேடனோ! என்று ருத்ரனைக்ஷேபிக்கிறார்.

(ஆலமரநிழல்) வடவ்ருக்ஷச்சாயையிலே, (அறம்) ஸமஸ்தஸாஸ்த்ரமய சிவமானயகோத்தை, (நால்வர்க்கு) ஸநகஸநந்தநாதிகளாகிற நாலுஶிஷ்யர்களுக்கும், (அன்று) ஸமவிஷயத்தில் உவக்குழியிட இழிந்தவன்று, (உரைத்த) ஸமவிஷயத்தை மறுபாடுருவும்படி உபதேசித்துச் சொல்லவல்ல பேரளவுடையார் பண்ணக்கடவ உபதேசத்தைப்பண்ணி க்ருதார்த்தம் நிர்வஹித்தோம் என்றிருக்கும் பெரிசறிவாளனாய் க்ஷீராப்திமதநவேளையிற்பிறந்த (ஆலம்) 'ஹாலாஹலம்' என்கிறவிஷத்தை, (அமர்) நாராயணனுடைய ஆஜ்ஞையாலே கழுத்திலேயடக்கி, (கண்டத்து) நீலகண்டனென்று விருதுபிடித்துத்திரியும் பெருமிடுக்கனாய், (அரன்) ஸம்ஹாரகர்த்ருத்வ ஶக்தியாலுகை நிஹிதனமித்திருக்கிற ருத்ரன், (ஐந்து) ஶ்ரோத்ராதிரூபேண ஐந்துவகைப்பட்டிருப்பதாய், விஷயங்களாகிற வரைநாற்றத்தைக்காட்டித் தன்னுடன்சேர்ந்தாரை முடிக்கும்- (பொறி) யந்த்ரரூபமான, (வாசல்) இந்த்ரியத்வாரங்களில், (போர்) அடைக்கப்புக்கவர்கள் தேவத்திலே அறைந்து போருகிற, (கதவம்) கதவை, (சாத்தி) வருத்தத்தோடேயடைத்து, (நெறி) உபாயமும், (வாசல்) தத்ஸாத்யமானவுபேயமும், (தானேயாய்) ஸ்வதந்த்ரனான தானேயாய்க்கொண்டு

மூ— அரன்நாரணன்நாமம் ஆன்விடைபுள்ளூர்தி*உரைநூல்
மறைஉறையுங்கோயில்*வரைநீர் கருமமழிப்பளிப்பு

(நின்றானை) நின்ற ஸர்வேஸ்வரனை, (அறிவானும்) ஸ்வயத்நஸாத்யமான தன் ஜ்ஞாநஸக்த்யாதிகளைக்கொண்டு அறிவதாக இருக்கிறானும்.

என்ன அஜ்ஞனோவென்று ஹஸிக்கிறார் 'நெறிவாசல்' என்று ஸாத்விகாநுஷ்டாநமான உபாயமென்னவுமாம். (௪)

அஞ்சாம்பாட்டு.

அ— நாட்டங்க ருத்ரனே ஸர்வநாயகன் என்று அறுதியிட்டு அவன்காற்கீழ்த்தலை மடுத்துப்போற்றுவது புகழுவதாயன்றோ போருகிறது நீர் அவனை ஸேவிக்கக்கடவீரோ?வென்ன; ருத்ரனுடைய ஈஸ்வரத்வமும் எம்பெருமானுடைய ஸர்வேஸ்வரத்வமும் தத்த்வஜ்ஞாநோபாதாநாதி ஸாதநங்கள்கொண்டே அறுதியிடலாமென்கிறார்-

பிணஞ்சுடு தடிபோலே கண்டதடைய அழிக்கையேதொழிலாகவுடையவனென்னுமிடத்தைத் தெரிவிக்கிற- (அரன்) ஹரனென்று, (நாமம்) ஒருவனுக்குப்பேர், ஸத்த்வாஸத்த்வங்களையும் உள்ளும்புறம்புமொக்க வ்யாபித்து ஸத்தையை நோக்குமென்று அறிவிக்கிற- (நாரணன்) நாராயணனென்று, (நாமம்) ஒருவனுக்குப்பேர், (ஆன்விடை) அழிவுகேட்டுக்கு நிதர்ஸநமாகச்சொல்லப்படும் ரிஷபமே, (ஊர்தி) ஒருவனுக்கு வாஹநம், (புள்) 'த்ரயீமய:' என்றுசொல்லப்படுகிற வேதாத்மாவான பெரியதிருவடி, (ஊர்தி) ஒருவனுக்குவாஹநம், (உரை) ஒருவனைச்சொல்லும்ப்ரமாணம், (நூல்) வேதவிருத்தார்த்தத்தைச்சொல்லும் பௌருஷேயமான ஆகமம், (உரை) ஒருவனைச்சொல்லும்ப்ரமாணம், (மறை) நித்யநிர்தோஷமாய் அபௌருஷேயமாய் யதார்த்தவாதியாய் ஸ்வத:ப்ரமாணமான வேதம், (உறையும்கோயில்) ஒருவன் நித்யவாஸம்பண்ணும் ஸ்தாநம், (வரை) கடிநப்ரக்ருதியான தன்படிக்குச்சேர்ந்த கைலாஸம், (உறையும்கோயில்) ஒருவனுக்குவஸிக்கும் ஸ்தாநம், (நீர்)

மூ— கையதுவேல்நேமி* உருவமெரிகார் மேனியொன்று. (ரு)
ஒன்றுமறந்தறியேனோதநீர் வண்ணனைநான்*

தன்னளிபண்ணிரக்ஷிக்கும் தன்படிக்குச்சேர்ந்த க்ஷீராணவம் (கருமம்) ஒருவன்செய்யுந்தொழில், (அழிப்பு) கண்டதெல்லா வற்றையும் கண்ணற்று அழிக்கை, (கருமம்) ஒருவன்செய்யும் தொழில். (அளிப்பு) ஸகலவஸ்துக்களையும் தண்ணளிபண்ணி ரக்ஷிக்கை, (கையது) ஒருவன்கையிலேற்றுமாயுதம், (வேல்) கொலைக்குவரிகாரமான மூவிலைவேல், (கையது) ஒரு + ம்(நேமி) ரக்ஷணத்துக்கு வரிகாரமான அறமுயலாழி, (உருவம்) ஒரு வன்ரூபம், (எரி) நெருப்புப்போலே ஏறிட்டுப்பார்க்கவொண்ணாதபடி காலாக்நிஸத்ருஶமாயிருக்கும், (உருவம்) ஒருவன்வடிவு, (கார்) கண்டவர்கள் கண்குளிரும்படி காளமேகம்போலேயிருக்கும், இப்படி பரஸ்பரவிஸத்ருஶமான இரண்டுவஸ்துக்களில், (ஒன்று) ஒன்று, (மேனி) ஶரீரமாயிருக்கும்.

ஒன்று ஶரீரியாயிருக்குமென்னுமிடம் ஸுப்ரஸித்தம், ஸர்வாத்மா என்றால் ஸர்வஶரீரம் என்று ஶ்ருதிகோஷிக்கிறப்போலே அன்றிக்கே இவர்கள்ரூபம்பார்த்தால் எரிமேனியொன்று கார்மேனியொன்றென்னவுமாம். (ரு)

ஆறும்பாட்டு.

அ— 'அரன் அறிவானும்' என்றுருத்ரனை அறிவுகேடனென்று கோஷித்துச்சொன்னீர்? நீர்தாம் அவனையறிந்து பிறர்க்குவதேஶிக்கும்படி எங்ஙனே?யென்ன, ஸகலம் தலைபெடுத்தபோது ஸ்வயத்தாலே சிறிதறிந்தானும் ராஜஸதாமஸக்கள் தலையெடுத்த போது 'ஶிவோஹம்' என்றிருக்கு மவனைப்போலேயோ? நான் நிர்ஹேதுகமாக அவன்றானே காட்டக்கண்டவனு கையாலே எனக்கொருக்காலும் விபரீதப்ரஸங்கமில்லையென்கிறார்—

(அன்று) அறிவுநடையாடுகைக்கு யோக்யதையில்லாத வன்று, (கருவரங்கத்துள்) மஹாஸ்தானத்திலே, (கிடந்து) கிடந்து, ஜாயமான காலத்திலே இத்தலையில் ப்ரதிஷேமே பற்று

மூ—இன்றாமறப்பனோ ஏழைகாள்* அன்று கருவரங்கத்துட்கி டந்துகைதொழுதேன் கண்டேன்* திருவரங்கமேயான் திசை (சு)

திசையுந்திசையுறுதெய்வமும்* தெய்வத்திசையுங்கருமங்க ளெல்லாம்* அசைவில்சீர்க்கண்ணன் நெடுமால்

உ— சாகக் குளிரக்கடாக்ஷித்துத் தன்படிகளைக் காட்டித்தருகை யாலே ஸம்ஸாரிகளைத் தன்னைப்பண்ணிரக்ஷிக்கைக்காக, (தி ருவரங்கமேயான்) தானே கோயிலிலேவந்து பள்ளிகொண்டரு ளுகிற பெரியபெருமாளுடைய, (திசை) ஸ்வாமித்வம ஞ்ாதி ஸௌஶீல்யஸ்வபாவங்களையும், (கண்டேன்) ஸாக்ஷாத்கரித்த நுபவித்தேன், (கைதொழுதேன்) கர்ப்பநரகமான ஸஞ் ஜீவம்பமுதலான வ்ருத்தியிலேயும் ஆஶ்ரயிக்கப்பெற்றேன், மறு க்கஇடமறும்படி தன்பக்கலிலே இழுத்துக்கொள்ளவற்றாய்- (ஓதம்) ஓதங்கிளர்ந்த, (நீர்) ஸமுத்ரஜலம்போலே யிருண்டுகு ளிர்ந்த, (வண்ணனை) வடிவழகையுடையவனை, (என்றும்) ஸர்வ தேசமும், (மறந்தறியேன்) மறந்தறியேன், (ஏழைகாள்) உக்ஷ ரவிஷயங்களிலே மண்டித்திரிகிற அறிவுகேட்டர்காள்? (நான்) மறைக்கைக்கு ஹேதுவுள்ளவிடத்தில் மறவாதநான், (இன்று) நினைக்கைக்கு ஹேதுவுள்ள இன்று, (மறப்பேனோ) மறப்பனோ?

ஏழாம் பாட்டு.

அ— இப்படியாகில் நாட்டங்க எம்பெருமானைவிட்டு க்ஷுத்ரதே வதைகள் காற்கீழே தலையெடுத்துத்திரிகைக்கடி யெ ன்னென்னில்? உதவாதார் தன்னைவந்து கிட்டாமைக்கு அவன் பண்ணினமயக்குக்காணென்கிறார்-

(திசையும்) திக்பாலகதேவதையான ஸ்ருஷ்டியும், (திசை) அவ்வவதிக்குக்களிலே, (உறு) வர்த்திக்கிற, (தெய்வமும்) தேவ தைகளும், (தெய்வத்து) அத்தேவதைகளுக்கு, (இசையும்) சேர்ந்த, (கருமங்கள்) ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களும், (எல்லாம்) யாவும், (அசைவு) க்ஷயாதிதோஷங்கள், (இல்) இன்றிக்கே (சீர்) நித்யமானகல்யாணகுணங்களையுடையனாய், அக்குணங்கள் ப்ரகாசிக்கவந்து- (கண்ணன்) க்ருஷ்ணனாய்வந்துபிறந்த ஸௌல

மூ— கடல்கடைந்த* காரோத வண்ணன்படைத்தமயக்கு. (எ)

மயங்கவலம்புரி வாய்வைத்து* வானத் தியங்குமெறிகதி
ரோன்றன்னை*முயங்குமருள் தேராழியால்மறைத்த தென்னீதிரு
மாலே* போராழிக் கையால்பொருது. (அ)

ஸர்வஜ்ஞத்தையுடையனாய், (நெடு) ஸர்வஜ்ஞனானவிடத்திலும் அளவி
டவொண்ணாத, (மால்) பெருமையை யுடையனாய், தம்பெரு
மைபாராதே ஶரணம்புக்க தேவர்களுக்காக- (கடல்கடைந்த)
உடம்புநோவக் கடலைக்கடைந்து அபேக்ஷிதஸம்விதானம் பண்
ணுமவனாய், ரக்ஷியாதே யழியச்செய்யிலும் விடவொண்ணாதப
டி, (கார்) கறுத்த, (ஓதம்) கடல்போலே யிருண்டுகுளிர்ந்த (வண்
ணன்) வடிவையுடையனானவன், தன்பக்கல்வாராதாரை அகற்
றுகைக்கு: (படைத்த) உண்டாக்கின, (மயக்கு) ஞாநஸங்கோசஹேதுக்
களாயிருக்கும், (மயக்கு) மயங்கப்பண்ணும் வஸ்துக்
கள். (எ)

எட்டாம்பாட்டு.

அ—இப்படி அநாஶ்ரிதரை மயங்கப்பண்ணுகிற வளவன்றிக்கே
ஆஶ்ரிதவிஷயத்தில் ஸத்வஸம்ஶ்லேஷனா தன்னிலைகுலைந்தும் வ
க்ஷவாதித்து ரக்ஷிக்குமென்கிறார்-

(மயங்க) ஊடுவியாய் நாசிகள் ஶ்ருதிப்ரயத்தாலே அ
றிவழியும்படியாக, (வலம்புரி) ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, (வாய்)
திருப்பவளத்திலே, (வைத்து) மடுத்துஊதி, (வானத்து) மறை
க்கவொண்ணாத தன்னிலமான ஆகாஶத்திலே, (இயங்கும்)
குறிக்கவொண்ணாதபடி உதயாஸ்தமனாநுபவிக்குமவனாய்; (எறி) ஸ்வ
தேஜஸ்ஸாலே ஸகலரையும் அபிபவிக்கிற, (கதிரோன்றன்னை)
கிரணங்களையுடையனான ஆதித்யனை, ஆஶ்ரிதவிஷயத்தில் ஓரந்
துக்குவாத்தான- (திரு) பிராட்டியார்பக்கல், (மாலே) பெரு
ம்பிச்சனானவனே, ஸகலப்ராணிகளும் யுத்தஶ்ரத்தையாவந்து
(முயங்கு) நெருங்கிக்கிடக்கிற, (அமருள்) ஸங்க்ராமபூமியிலே,
(போர்) போருகைக்குவசீகரமான, (ஆழி) திருவாழியோடே
கூடின, (கைபால்) திருக்கையாலே, (பொருது) ஶீக்ஷாஷீகளை

மூ—பொருகோட்டோரேனமாய்ப் புக்கிடந்தாய்க்கு* அன்றுன்
ஒருகோட்டின்மேற்கிடந்ததன்றே* விரிதோட்ட சேவடியைநீட்
டித்திசைநடுங்க விண்துளங்க* மாவடிவின் நீயளந்தமண். ௯

---

த்துரத்திப்பொருது, (நீ) ஸர்வஜ்ஞனானநீ, அத்தைக்குலைத்து- (தேராழியால்) திருவாழியாலே, (மறைத்தது) மறைத்தருளிற்று (என்?) ஏதுக்காக.

ஸர்வஸாதாரணமான உறவுக்குச்சேருமோ? ஸர்வஜ்ஞனாயிருக்கிற இருப்புக்குச்சேருமோ? உன்பெருமைக்குப் போருமோ? இவையெல்லாவற்றையும் காற்கடைக்கொண்டு இங்ஙனேசெய்தருளிற்று எதுக்காக? ஆச்ரிதவிஷயத்தில் ஓரமாகாதே என்று விஷண்ணராகிறார், (தேராழி) ஸமாப்தம். (௮)

ஒன்பதாம்பாட்டு.

அ— இவ்வளவன்றிக்கே ஆபத்துமுதிர்ந்தவளவில் 'ஆச்ரிதர் அநாச்ரிதர்' என்றுதரம்பாராதே இருந்ததேகுடியாகத் தன்னையழியமாறிநோக்கும் ஸ்வபாவனென்கிறார்.

(விரி) விகஸிதமான, (தோட்ட) இதழையுடைய தாமரைபோலே, (சே) சிவந்த, (அடியை) திருவடிகளை, (நீட்டி) வளர்த்து, (திசை) திக்வலக்ஷிதையான பூமியிலுள்ளார், (நடுங்க) நடுங்கவும், (விண்) உபரிதநலோகத்திலுள்ளார், (துளங்க) நடுங்கவும், (மா) பெரிய, (வடிவின்) வடிவையுடையையாய்க்கொண்டு, (நீ) நீ, (அளந்த) அளந்துகாற்கீழிட்டுக்கொண்ட, (மண்) பூமியானது, நிலமகள்முலையில் குங்குமத்தோடு நிலத்தோடுவாசியற எங்கும் ஜாத்யுசிதமான செருக்காலே, (பொரு) பொருதுகொடுவருகிற, (கோடு) கொம்புகளையுடைத்தாய், (ஓர்) அழகுக்கு அத்விதீயமான, (ஏனமாய்) வராஹவேஷத்தையுடையனாய்க்கொண்டு, (புக்கு) ப்ரளய ஜலத்திலேமுழுகி, (இடந்தாய்க்கு) அண்டபித்தியினின்றும் இடந்தெடுத்துக்கொண்டேறினவுனக்கு, (அன்று) அக்காலத்தில், (உன்ஒருகோட்டின்மேல்) உன்னெயிற்றின் ஏகதேசத்திலே, ஒருமறுப்போலே, (கிடந்ததன்றே) கிடந்ததொன்றன்றோ;

மூ— மண்ணும்மலையும்மறிகடலும்மாருதமும்* விண்ணும்விழுங்கியதுமெய்யென்பர்*- எண்ணில் அலகளவுகண்டசீராழியாய்க்கு* அன்றிவ்வுலகளவுமுண்டோ! உன்வாய். க0

சூவத்துவந்தால் தலையாலே சுமந்துநோக்குதல், தலையிலேகாலைவைத்து நோக்குதல் செய்யுமவனன்றோ நீ, ரக்ஷ்யவஸ்த்தைநோக்குமளவில் உனக்கொரு நியதியுண்டோவென்று உகந்தநுஸந்திக்கிருர், 'விரிதோட்ட' என்று விஸ்த்ருதமாய்ப்ரகாஶிக்கிற திருத்தோடுகளையுடையவனே? யென்று ஸம்போதநமாகவுமாம். (கூ)

பத்தாம்பாட்டு.

அ—இப்படி பெரியவடிவைக்கொண்டு சிறியசெயலைச்செய்து நோக்குமளவன்றிக்கே சிறியவடிவைக்கொண்டு பெரியசெயலைச்செய்து நோக்கிலும் நோக்குமென்கிருர்-

(மண்ணும்) ஸர்வாதாரமான ப்ருதிவியும், (மலையும்) அதுக்குதாரகமான குலபர்வதங்களும், அத்தைச்சூழ்ந்துகிடந்து, (மறி) அலையெறிகிற, (கடலும்) ஸமுத்ரங்களும், ஸர்வஜந்துக்களுக்கும் உஜ்ஜீவநஹேதுவான- (மாருதமும்)காற்றும், (விண்ணும்) அதுக்கு அவகாஶப்ரதமான ஆகாஶமும், இவற்றைபடையத் திருவயிற்றிலே ஒருபுடையிலே யடங்கும்படி- (விழுங்கியது) அமுதுசெய்தருளினவித்தை, (மெய்யென்பர்) பரமார்த்தமென்று உன்பக்திஸாம்ராஜ்யத்தைத் தறைகாணவல்ல வைதிகபுருஷர்கள் சொல்லாநின்ருர்கள், (எண்ணில்) உன்படியைப் பரிச்சேதிக்குமளவில், (அலகு) அளவிடுகைக்கு பரிகரமான ஆயுதங்களையும், (அளவுகண்ட) பரிச்சேதித்து, எல்லைகண்டிருக்கிற அஸம்க்யாதமான- (சீர்) கல்யாணகுணங்களையும், (ஆழியாய்க்கு) திருவாழியையுமுடையையானவுனக்கு, (அன்று) இவற்றையெடுத்துத் திருவயிற்றிலேவைத்தருளினவன்று, (இவ்வுலகம்) இஜ்ஜகத்தோபாதியும், (அளவுண்டோ) பெருமையுடைத்தோ, (உன்) உன்னுடைய, (வாய்) திருப்பவளமானது,

மூ— வாயவனையல்லதுவாழ்த்தாது* கை யுலகம் தாயவனையல்லதுதாந்தொழா*- பேய்முலைநஞ்சூணாக வுண்டானுருவொடு பேரல்லால்* காணாகண் கேளாசெவி. கக

செவி வாய் கண் மூக் குடலெ ன்றைம்புலனுஞ்

இந்தச்சிறியதிருப்பவளத்தைக்கொண்டு பெரியஜலத்தை அமுதுசெயதருளின இவ்வாஸ்சர்யமென்னெபிருக்கிறதோ! என்று ஈடு படுகிறார். (கO)

பதினோராம்பாட்டு.

அ—இப்படி அவன்படிகளையநுஸந்தித்துக்கொண்டு போருகிறவழியாலே தமக்கு அவன்பக்கலுண்டான ஸந்நிவேசத்தைப்பேசினார் கீழ்; இப்போதுகரணியான தம்மிலுங்காட்டில் தம்முடையகரணங்களுக்கு அவன்பக்கலுண்டான ஸந்நிவேசாதிசயத்தைப் பேசுகிறார்-

என்னிலுங்காட்டில் 'அவனெங்குற்றான்' என்றுபார்க்கிற (வாய்) என்னுடையவாகிந்த்ரியமானது, (அவனையல்லது) அவனையொழிய (வாழ்த்தாது) புகழாது, (கை) கைகளானவை, தாதவிவாகம்பாராதே இருந்ததேகுடியாக- (உலகம்) லோகத்தைபடைய, (தாயவனையல்லது) ஸநாயாஸேந அளந்துகொண்ட ஸ்ரீவாமநனவனையொழிய, (தாம்தொழா) தாம் தொழப்பாராது, (பேய்முலை) பூதனையுடையமுலையில், (நஞ்சு) விஷத்தை, (ஊணாக) யாகமாக, (உண்டான்) விரும்பிய முதுசெய்தவனுடைய, (உருவல்லால்) வடிவையொழிய, (கண் காணா) கண்காணாது, (பேரல்லால்) குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களையொழிய, (செவிகேளா) செவி கேளாது. (கக)

பன்னிரண்டாம்பாட்டு.

அ—கீழ் ஸ்ராயணீயனைச் சொன்னவவனை ஸூஸ்ரூயிக்குமிடத்தில் ததநுரூபமான ஸாதநம் ஸக்தியென்கிறார்-

(செவிவாய்கண்மூக்குடலென்றைம்புலனும்) ஸ்ரோத்ரஜிஹ்வாசக்ஷுர்க்ராணத்வக்குக்களாகிற ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும்

மூ—செந்தீ* புவிகால்நீர்விண்பூதமைந்தும்* அழியாத ஞானமும்
வேள்வியும் நல்லறமுமென்பரே* ஏனமாய்நின்றார்க்கியல்வு. கஉ

(செந்தீபுவிகால்நீர்விண்பூதமைந்தும்) தேஜ: ப்ருதிவீ வாயு ஜலாகாசங்களாகிற பஞ்சபூதங்களும், தத்கார்யபூதமான சரீரமும், இந்த கரணகளேபரங்களாலே ஸாதிக்கப்படுமதாய்- (அழியாத) அவிச்சின்னஸம்ப்ரதாயஸந்தானரூபமான, (ஞானமும்) பக்திரூபாபந்நஜ்ஞானமும், (வேள்வியும்) பக்த்யுத்பத்திவ்ருத்திஹேதுவாக ஸமஸ்தகர்மங்களை ஸாங்கமாகப்பண்ணும் யாகாதிகர்மங்களும், நாள்தோறும் பக்தியை வளர்க்கக்கடவ விவேகவிமோகாதிகளும் ஸத்யஸம்வாதநாதிகளுமாகிற, (நல்லறமும்) விஹிதவர்ணாஶ்ரமதர்மமும், (ஏனமாய்நின்றார்க்கு) ஸம்ஸாரஸாகரமக்னையான பூமியை எடுத்த ஸர்வேஶ்வரனுக்கு, (இயல்வு) ஸமாராதநம், (என்பர்) என்று வேதவைதிகஸார்வஜ்ஞர்கள் சொல்லாநின்றார்கள்.

'பக்தி:' என்றும் "ஸத்யாவ்ருந்த்யாஸக்த:" என்றும் சொல்லக்கடவதிறே; அங்ஙனன்றிக்கே தமக்கு ஸாமோபாய காரணமான பக்தியை உபாஸகர் உபாயமாகவநுஷ்டிக்கும் கட்டளையைச்சொல்லி பக்தியை க்ஷேபித்து ப்ரபத்தியையருளிச்செய்கிறாராகவுமாம், அப்போதைக்கு ஏனமாய்நின்றார்க்கு- நல்லறமானவிவை- இயல்வு- என்பர், தானேவந்துஸம்ஹித னைப் ரக்ஷிக்குமவனைப்பெறுகைக்கு இவற்றை ஸாதநமென்றுசொல்லாநிற்பர்கள், என்னவறிவிலிகளோ! என்று க்ஷேபமாகக்கடவது, 'ஞானப்பிரானையல்லாவில்லை நான்கண்ட நல்லது' என்றிறே? தம்முடையஸித்தாந்தம். (கஉ)

பதின்மூன்றாம்பாட்டு.

அ—அவனை நேர்கொடுநேரேகிட்டிப் பரிமாறுகைக்கு அதி காரிகள் நித்யஸூரிகளே, இப்படியிருக்கச்செய்தேயும் ஸம்ஸாரிகளான நம்போல்வார்க்கும் ஆஶ்ரயிக்கலாம்படி தன்னை ஸமாராதனைக்கெளியனாக்கு மென்கிறார்.

மூ— இயல்வாகவீன் துழாயானடிக்கேசெல்ல* முடல்வார் இய
லமரர்முன்னம்*- இயல்வாக நீதியாலோதி நியமங்களாற்பரவ*
ஆதியாய் நின்றார் அவர்- சரு

வைஸ்வ-ஸேவகமான, (ஈன்) அழகிய, (துழாயா
னடிக்கேசெல்ல) திருத்துழாயையுடையனான ஸர்வேஶ்வரன்றி
ருவடிகளிலேகிட்ட, (இயல்வாக) ஸ்வபாவமாக, (முடல்வார்)
உத்யோகிப்பார், (முன்னம்) முந்துறமுன்னம், (இடல்) அது
க்கிடான யோக்யதையுடையரான, (அமரர்) நித்யஸூரி
கள்; அல்லாதநம்போல்வாரும் ஸாவர்ணிகளுக்கு நழுவுத
ல்வாராதபடி- (இயல்வாக) அழகிதாகக்கொண்டு, (நீதியால்)
ஸாங்கமான வ்ருதநியமாதிக்ருஷங்களோடே, (ஓதி) அத்யா
யநத்தைப்பண்ணி, அர்த்தமான வேதத்தின ஸாரத்தை ஆசா
ர்யன்பக்கலிலேகேட்டு மநநம்பண்ணி அநுஷ்டாநாதிகளோடே
நாதிகளோடேகூட அநவரதமாவஹித்து பண்ணுகையாகிற-
(நியமங்களால்) நியமங்களாலே, (பரவ) ஸக்தவாஸராய்ப்
பரவும்படிக்கிடாக, (அவர்) அப்படிப்பட்ட பெருமையையு
டையரானவர், 'ஸேவ்ய' என்கிறபடியே ஸேவ்யதாகராய்க்
கொண்டு- (ஆதியாய்நின்றார்) முற்பாடராய்நின்றார்; ஆகையாலே
நமக்கெல்லாம் ஆஶ்ரயிக்கக்குறைபில்லையென்றுகருத்து.

(இயலமரர்) இயற்றியையுடையரான, யோக்யதையை
யுடையரான நித்யஸூரிகளென்றபடி. (சரு)

பதினைலாம்பாட்டு.

அ—இப்படி ஸேவ்யதாகனைக்கொண்டு முற்பாடனாய் நிற்கிற
வனைவிட்டு ஸம்ஸாரிகள் க்ஷுத்ரதேவதா ஸமாஶ்ரயணம்பண்
ணுகின்றார்களேயென்னில்? அவர்கள் அப்படிசெய்தார்களேயாகி
லும் அந்த ஆஶ்ரயணீயரான தேவதைகளுக்கும் ஆஶ்ரயணீய
னவனேயென்கிறார்—

(அவரவர்) ரஜஸ்தமோகுணவஶராய் விஸஜாதிகளான அ
வ்வவ்வதிகாரிகள், ஸாவஸரவத்தாலன்றிக்கே மனோரதம

மூ— அவரவர்தாந்தாமறிந்தவாறேத்தி* இவரிவரெம்பெரு
மானென்று சுவர்மிசைச்* சாத்தியும்வைத்துந் தொழுவார்*
உலகளந்தமூர்த்தியுருவேமுதல். கச

முதலாவார்மூவரே அம்மூவருள்ளும்*

ணமாக- (தாந்தாமறிந்தவாறு) தாந்தாமறிந்தவாகாரங்களாலே (ஏத்தி) வாய்விட்டுப்புகழ்ந்து, (இவரிவர்) தாங்களுகந்த ம ணங்களையுடைய ஐயன் உ தொடக்கமாக ன்மு டிவாகவுண்டான இவர்கள், (எம்) நமக்கு, (பெருமானென்று) ஸமாச்ரயணீயரான ஸ்வாமிகளென்று ஸ்வீகரித்துக்கொண்டு, ஒவ்வொருதேவதைகளை- (சுவர்மிசை) ஓரோர்பித்திகளிலே, (சாத்தியும்) வித்ராரூபேண எழுதியும், (வைத்தும்) ஹந்தொடக்கமான வேறொருவிடங்களிலே ப்ரதிமாரூபேண ப்ரதிஷ்டித்துவைத்தும், (தொழுவர்) ஸமாச்ரயியாநிற்பர்கள், இவர்கள் இப்படிசெய்தாலும் ஸமாச்ரயிக்கிறவர்களோடு ஸமாச்ரயணீயராக இவர்கள்விரும்புகிற அத்தேவதைகளோடு வாசியற எல்லாரும் தன்காற்கீழேதுகை யுண்ணும்படி, (உலகு) ஜகத்தையடைய, (அளந்த) அளந்துகொண்ட, (மூர்த்தியுருவே) ஸர்வேச்வரன்திருமேனியே, (முதல்) ப்ரதாநம். (கச)

பதினஞ்சாம்பாட்டு.

அ—நீர் அவனையே ப்ரதாநனாகச்சொல்லாநின்றீர் புறம்பே ஸமாச்ரயிப்பார்சிலரும் ஸமாச்ரயித்தார்க்கு பலங்கொடுப்பார்சிலருமாயன்றோ? நாட்டில்நடந்துபோருகிறதென்ன அவையடங்கலும் வ்யர்த்தமென்கிறார்-

இவர்இவர் 'என்று' இருந்ததேகுடியாக ஸமாச்ரயணீயரென்றுஅறியாதே ஸங்க்ராமிகாயங்களை அதுக்கடைத்த வடிவெடுத்து நடத்திக்கொண்டுபோருகிற- (மூவரே) ப்ரஹ்மாவிஷ்ணுருத்ரர்களாகிற மூவருமே, (முதலாவார்) ஜகத்துக்குப்ரதாநராவார், (அம்மூவருள்ளும்) அம்மூவர்தம்மில் ஸமரென்றும் மூவருங்கூடவொன்றென்றும் மூவர்க்குமவ்வருகே ஒருவன் ப்ரதாநனென்றும் அறியாதே ... வைத்துக்

ளும் — முதலாவான் மூரிநீர்வண்ணன்* முதலாய நல்லானருளல்லால் நாமநீர்வையகத்துப்* பல்லாரருளும்பழுது. ௧௫

பழுதேபலபகலும்போயினவென்றஞ்சி அழுதேன்* அரவணைமேற் கண்டுதொழுதேன்* கடலோதங்காலலைப்பக்கண் வளருங்

---

கொண்டு, [முதலாவான்] ப்ரதானனாவான். ப்ரஹ்மாதிகளையிட்டு ஸ்ருஷ்ட்யாதிகளை நிர்வஹித்தும் தானான நிலையிலே நின்று ஜகத்தை நிர்வஹித்தும் போருமவனாய். [மூரி] ஸஞ்சரியாநின்றுள்ள, [நீர்] கடல்போலேயிருக்கிற, (வண்ணன்) வடிவையுமுடையனானவன், [முதலாய] ஜகத்காரணபூதனுமாய், [நல்லான்] ஸர்வவிஷயமான வாத்ஸல்யத்தையுமுடையனானவனுடைய, [அருளல்லால்] க்ருபையொழிய, [நாமம்] ப்ரஸித்தமான, [நீர்] நீரையுடைத்தான, [வையகத்து] ஜகத்திலுள்ள, [பல்லார்] பலருடைய, [அருளும்] ப்ரஸாதமும், [பழுது] வ்யர்த்தம்.

இவனையொழிந்த மற்றவிருவருடைய அருளோடு கீழ்ச்சொன்னவர்களருளோடு வாசியற ஸர்வமும்வ்யர்த்தம், அன்றிக்கே நீர்சூழ்ந்தபூமியில் நாநாதேசமான 'பல்லாருளும்பழுது' என்னவுமாம். தான்வரியாதவளவன்றிக்கே ஸர்வஸ்வதந்த்ரத்தையும் விலக்குகையாலே 'பழுது' என்கிறார். (௧௫)

பதினாறும்பாட்டு.

அ—க்ஷுத்ரதேவதைகளைப்பற்றி இவ்விஷயத்தையிழந்த நாட்டாரிழவை ஸ்வநிஷ்டத்வத்தாலே பரிஹரித்தவர் அநந்தரம் க்ஷுத்ரதேவதைகளையும் க்ஷுத்ரஸாதநங்களையும்பற்றி இவ்விஷயத்தை அகன்று திரிந்த தம்மிழவைநினைத்து சோகிக்கிறார்-

ஸஹகாரிநிரபேக்ஷமாக- [கடலோதம்] கடலின் சிறுதிவலைகளானவை, துடைகுத்துவாரைப்போலே அநாயாஸமாக- [காலலைப்ப] திருவடிகளை ஸ்பர்சிக்க, அத்தாலே [கண்வளரும்] பள்ளிகொண்டருளுமவனாய், வாத்ஸல்யத்தாலும் ஸௌசீல்யத்தாலும்- [செம்] குதறிச்சிவந்து, [கண்] திருக்கண்களை

மூ—செங்க* ணடலோதவண்ணரடி. (கசு)

அடியும்படிகடப்பத் தோள்திசைமேற்செல்ல* முடியும்விசும்பளந்ததென்பர்* வடியுகிராலீர்ந்தான் இரணியனதாக* மிருஞ்

---

யுடையனுமாய், [அடல்] ஸம்ஹரிக்கப்புக்கவர்களை ஸம்ஹரித்து எழவீசுகிற, [ஓதம்] ஸமுத்ரதரங்கங்களோடுகூடின, [வண்ணர்] வடிவையுடையனுமானவனுடைய, [அடி] திருவடிகளை- வெளுத்தநிறத்தையுடையனான, [அரவு] திருவனந்தாழ்வானாகிற [அணைமேல்] படுக்கையின்மேலே ஜ்ஞாநஸாக்ஷாத்காரதசையிலே, [கண்டு] கண்டநுஸந்தித்து, [தொழுதேன்] தத்ஜ்ஞாநஸாத்யமான தொழுகையிலே மநபிக்கப்பெற்றேன், இப்படி ஸந்தோஷத்தோடே அடிக்கழஞ்சுபெற்றுச் செல்லுகைக்குறுப்பான- [பலபகலும்] கீழ்க்கழிந்தகாலமெல்லாம் ஒன்றொழியாதபடி, [பழுதே] வ்யர்த்தமே, [போயினவென்று] போய்விட்டதேயென்று, [அஞ்சி] கண்ணநீர் வெள்ளமிடவிருந்து, [அழுதேன்] சோகித்தேன்.

கீழிழவுக்கடியான நம்முடையகர்மம் இப்போதும் குறியழியாதேகிடக்கையாலே மேலுள்ளகாலத்திலும் இவ்வநுபவத்துக்குக் குறைத்தல்வரிற் செய்வதென்னென்று பயப்பட்டு அழுதேன். [கசு]

பதினேழாம்பாட்டு.

அ—திருப்பாற்கடலிலேசென்று கிட்டவேண்டும்படி தூரமாய்நானிழந்தேனோ அவன்றானே எல்லார்தலையிலும் திருவடிகளைவைத்து ஸ்பர்சநம் பண்ணுநிற்கச்செய்தே கிடீர் நானிழந்தேனென்கிறார்-

[வடி] கூர்மையான, [உகிரால்] திருநகத்தாலே, [இரணியனது] ஹிரண்யாஸுரனுடைய, தேவர்கள்வரபலத்தாலே மிடியற வளர்ந்த, [ஆகம்] முரட்டுடலை, [ஈர்ந்தான்] ஸநாயாஸேந கிழித்துப்பொகட்டவனாய் [இரு] பெரிய, [சிறை] சிறகையுடையவனான, [புள்ளூர்ந்தான்] பெரியதிருவடியைமேற்கொண்டு ஸ்வைரமாக நடத்தியருளினவன், ஸ்ரீதனன் [illegible]

ரூ— சிறைப்புள் ளூர்ந்தா னுலகளந்தநான்று. (கஎ)

நான்ற முலைத்தலை நஞ்சுண்டு* உறிவெண்ணெய் தோன்ற
வுண்டான் வென்றிசூழ் களிற்றை* யூன்றிப் பொருது

---

செய்கைக்காக- [உலகளந்தநான்று] திருவுலகளந்தருளினகாலத்திலே 'கோலமாமென்சென்னிக்கு' என்கிறபடியே என்தலைக்கு அலங்காரமாக நினைக்கப்பட்டிருக்கும்- [அடி] திருவடிகள், [படி] காடும் ஓடையுமான பூமியை, [கடப்ப] அளந்துகொள்ள, [தோள்] பிராட்டியை வரிஷ்டமிக்கக்கடவ திருத்தோள்களானவை, இடமடையும்படி- [திசைமேற்செல்ல] திக்குகளின்மேலே வளர்ந்துசெல்ல, [முடியும்] திருவபிஷேகமும், அவயவிஷ்டமான- [விசும்பு] ஆகாசத்தை, முசிவறநிமிர்ந்து- [அளந்தது] அளவுபடுத்திக்கொண்டது, [என்பர்] என்றுதத்வவித்துக்களான ரிஷிகள் சொல்லாநிற்பர்கள். முசிவு- வருத்தம்.

தானேவந்து தலையிலேயிருந்தவன்று இழந்து இன்றுகேட்டார்வாய்கேட்பதேநான் என்றுவெறுக்கிறார். (கஎ)

பதினெட்டாம்பாட்டு.

அ— கடலிற்கிடையிலும் அங்குநின்றும்வந்து ஞாலத்தூடே நடந்தவிடத்திலும் இழந்தவளவேர இடக்கை வலக்கை யறியாதாரும் வாழும்படி இடைக்குலத்திலேவந்து பிறந்தவிடத்திலும் இழந்தேனிறே! என்றுஶோகிக்கிறார்—

பேய்வடிவைமறைத்துத் தாய்வடிவுகொண்டுவந்த பூதனையினுடைய, [நான்ற] பாலின்வருத்தாலே சரிந்துநாலுகிற, [முலைத்தலை] முலையினுண்டான, [நஞ்சு] நஞ்சை, அவள்பிணமாய்விழும்படி- [உண்டு] அமுதுசெய்து, [உறி] உறிகளிலேசேமித்துவைத்த, [வெண்ணெய்] வெண்ணெயை, ஸ்ரீநந்தகோபாதிகள் மொஷியிலும்- [தோன்ற] ப்ரஸித்தமாம்படி [உண்டான்] அமுதுசெய்தருளினவனும், [வென்றி] வெற்றியையுடைத்தாய், [சூழ்] எதிர்த்தவர்களைத்தப்பாமல் சூழ்ந்துக்கொள்ளவல்ல, [களிற்றை] குவலயாபீடத்தை, கஜயுத்தத்துக்கு தேஶிகரானவர்களைப்போலே. [ஊன்றிப்பொருது] உறைக்கநின்று பொருது,

மூ—டைவுகண்டானும் புள்ளின்வாய்கீண்டானும்* மருதிடை போய் மண்ணளந்த மால். (௧௮)

மாலுங்கருங்கடலே என்னோற்றாய்* வையகமுண்டாலினிலைத்துயின்றவாழியான்*- கோலக்கருமேனிச் செங்கண்மால்

---

[உடைவுகண்டானும்] தலையெடுக்கமாட்டாமல் உருவழிந்து உருக்காம்படி பண்ணினவனும், [புள்ளின்வாய்] தன்னைவிழுங்கவந்த பகாஸுரன்வாயை, [கீண்டானும்] கிழித்துப் பொகட்டவனும், [மருதிடை] யமளார்ஜுநங்களின் நடுவே, அவை வேர்பறிந்துவிழும்படி- [போய்] தவழ்ந்துபோய், [மண்] பூமி முதலான லோகங்களை, [அளந்த] அளந்துகொண்ட, [மால்] ஸர்வாதிகன்கிடீர்.

வரையாதேதீண்டுகையும் அழகும் ஆனைத்தொழில்முதலான லீலாவிலாஸத்தாலே க்ருஷ்ணனோடே த்ரிவிக்ரமனைச்சேர்க்கிறார் இவள்முலையைப்பற்றி அமுதுசெய்தவாறே பழையபேய் வடிவோடே நான்றுமுலையுந் தானுமாய் விழுந்தாளென்னளவுமாம் 'பொருதிடைவுகண்டானும்' என்றுமாமாய் திடைந்து ருக்காம்படி கண்டவனென்றுமாம். (௧௮)

பத்தொன்பதாம்பாட்டு.

அ—வதாரத்திற்குமான ஸந்தோஷமும் கிடையாமையால் நான் கண்ணீர்விழவிடாநிற்க, அவனைமடியிலேசாயவிட்டு முழுநோக்குச்செய்து நித்ராநுஸந்தானம்பண்ணிவாழுகிற நீ என்னஸாதனம் பண்ணினாயென்கிறார்-

[வையகம்] ஜகத்தையடைய, ப்ரளயத்தில் அழியாதபடி- [உண்டு] திருவயிற்றிலேயெடுத்துவைத்து, [ஆலினிலை] ஓராலந்தளிரிலே, [துயின்ற] கண்வளர்ந்தருளினவனாய், ப்ரளயம்வரில் இருதுண்டமாகவிடுகைக்குப் பரிகரமான- (ஆழியான்) திருவாழியையுடையனுமாய், (கோலம்) அழகிய, (கரு) கறுத்தநிறத்தையுடைய, (மேனி) திருமேனியையும், அதுக்குப்பகைத்தொடையாம்படி- (செம்) வாத்ஸல்யத்தாலே குதறிச்சிவந்த, (கண்) திருக்கண்களையுமுடையனாய், (மால்) ஆச்ரிதவ்யாமோஹனானவன்,

மூ—கண்படையு* ளென்றுந்திருமேனிநீதீண்டப்பெற்று. (௧௯)

பெற்றார்தளைகழலப் பேர்ந்தோர்குறளுருவாய்ச்* செற்றார்படிகடந்தசெங்கண்மால்*- நற்றாமரைமலர்சேவடியை வானவர்

---

(கண்படையுள்) கண்வளர்ந்தருளுகிறவிடத்தில், (என்றும்) ஸர்வகாலத்திலும், திருமேனி அவன்திருமேனியை- நீதீண்டப்பெற்று, நீஸ்பர்சிக்கப்பெற்று, அந்த ஸம்ஸ்பர்சத்தாலே- மாலும் மயங்காநிற்பதாய், அவன்வடிவின் நிழலீட்டாலே- (கருங்கடலே) கறுத்தநிறத்தையுடையகடலே, இப்பேறுபெறுகைக்கு- (என்நோற்றாய்) என்னவாய நாநுஷ்டாநம் பண்ணினாய் அத்தைச்சொல்லமாட்டாயோ நாலுமநுஷ்டித்துப் பார்க்கைக்கு என்று கருத்து.

மால் என்று பெருமையைச்சொல்லுகிறதென்னவுமாம்(௧௯)

இருபதாம்பாட்டு.

அ—கடல் அவனைப்பெற்றுக் களித்தவளவேயோ அப்படுக்கையைவிட்டு இங்கேவந்து அவதரித்த விடத்திலும் சிலஸாத்விகர்கிட்டிஸ்பர்சிக்கப்பெற்றார்கள் கிடீ?ரென்கிறார்—

(பெற்றார்) தன்னைப்பிள்ளையாகப் பெற்ற ஸ்ரீவஸுதேவர், தேவகியாருடைய காலிலிட்ட- (தளை) விலங்கு, (கழல) நீங்கும்படியாக, (பேர்ந்து) பரமபதத்தினின்றும் பேர்ந்து இங்கே க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, அவ்வளவில்நில்லாமல்- (ஓர்) அழகுக்குஅத்வீதீயமாய், கண்ணாலேமுகந் தநுபவிக்கலாம்படியான- (குறளுருவாய்) வாமநவேஷத்தை யுடையனாய், ஆச்ரிதனை இந்த்ரனை நெருக்குகையாலே- (செற்றார்) தனக்குசத்ருவான மஹாபலிபோல்வார், என்னதென்று அபிமாநித்திருந்த- (படி) ப்ருதிவியை, (கடந்த) அநாயாஸேந அளந்துகொண்டவனாய்- அத்தால்வந்த ஸ்ரீதிவ்யகடாக்ஷத்தாலே- (செம்) சிவந்த, (கண்) திருக்கண்களை யுடையனாய், (மால்) ஆச்ரிதவ்யாமோஹனானவனுடைய, (நல்) அழகிய (தாமரைமலர்) தாமரைப்பூப்போலேயிருக்கிற, (சே) சிவந்த, (அடியை) திருவடிகளை, இன்னீர்மையேறிப்பாயாத, (வானவர்) ஸ்வர்க்கத்திலேவதிக்கிற இந்த்ராதிதேவ

மூ—கைகூப்பி* நிரைமலர்கொண்டேத்துவராம்நின்று. (உ०)

நின்றுநிலமங்கை நீரேற்றுமூவடியால்* சென்றுதிசையளந்த
செங்கண்மாற்கு* - என்றும்படையாழிபுள்ளூர்தி பாம்பணையான்
பாதம்* அடையாழி நெஞ்சே அறி. (உக)

---

வைதிகள், இச்செயலுக்குத்தோற்று. (கைகூப்பிநின்று) அஞ்ஜலி பந்தத்தைப்பண்ணி, (நிரை) தொடைவாய்த்திருந்துள்ள, (மலர்கொண்டு) செவ்விப்பூக்களைப் பணிமாறிக்கொண்டு, (ஏத்துவராம்) ஸ்தோத்ரம்பண்ணி ஆஶ்ரயிக்கப்பெறுவர்களாம்.

பாவியேன்நாமே இழப்போம்! மென்று வெறுக்கிறார். (உ०)

இருபத்தோராம்பாட்டு.

அ—அவன்பெருமையைப்பார்த்துப் பிற்காலியாதே ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகஸ்வபாவன் என்றறிந்து அவன்றிருவடிகளைக்கிட்டப்பாரிடாய் நெஞ்சே? யென்கிறார்-

(சென்று) மஹாபலியஜ்ஞவாடத்தளவும் நடந்துசென்று அவன்முன்னே 'அர்த்திதம்பெற்றன்றிப்போகேன்' என்றுமலையாளர்வளைப்புப்போலே, (நின்று) அர்த்தித்வந்தோற்றநின்று, எல்லார்க்கும் குறைவறக்கொடுத்துப்போந்த (அம்கை) அழகியதிருக்கையிலே (நிலம்) பூமியை, (நீரேற்று) நீரேற்றுவாங்கிக்கொண்டு, ஓரடிக்கு அவனைச் சிறையிட்டுவைப்பதாக- (மூவடியால்) மூன்றுதிருவடிகளாலே, (திசை) திக்குக்களோடேகூடின ஸகலலோகங்களையும், (அளந்த) அளந்துகொண்டவனும், அத்தால்வந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே, (செம்) சிவந்த (கண்) திருக்கண்களையுடையனுமான, (மாற்கு) ஸர்வாதிகனுக்கு, (என்றும்) ஸர்வகாலத்திலும், (படை) ரக்ஷணபரிகரமானதிவ்யாயுதம், (ஆழி) திருவாழி, (ஊர்தி) மேற்கொண்டுநடத்துகிற வாஹநம், (புள்) பெரியதிருவடி, (பாம்பு) திருவனந்தாழ்வானை, (அணையான்) படுக்கையாகவுடையவனுகையாலே ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகஸ்வபாவனானவனுடைய, (பாதம்) திருவடிகளை, (அடை) கிட்டியநுபவிக்கப்பார், (ஆழி நெஞ்சே) கம்பீரஸ்வபாவமான நெஞ்சே? இத்தைஓலக்கவார்த்தையென்றிராதே- (அறி) நன்றாக ப்ரதிபத்திபண்ணு. (உக)

மூ—அறியுமுலகெல்லாம் யானேயுமல்லேன்* பொறிகொள்சி றைபுவணமூர்ந்தாய்*- வெறிகமழும் காம்பேய்மென்தோளி கடை வெண்ணெயுண்டாயைத்*தாம்பேகொண்டார்த்ததழும்பு (உஉ)

தழும்பிருந்த சார்ங்க

## இருபத்திரண்டாம்பாட்டு.

அ—நீர்நம்மை 'ஸ்ரீதவஸ்ரீ ஸவிஷகஷஹாவன்' என்றறிந்தபடியெங்ஙனேயென்ன; நானொருவனுமேயோ லோகமடைய அறியாதோ வென்கிறார்-

வி-த்ருவடிம்போலே- (பொறிகொள்) நாநாவர்ணமான (சிறை) சிறகையுடைய, (உவணம்) பெரியதிருவடியை, (ஊர்ந்தாய்) நடத்தும்ஸ்வாமியை, பிள்ளை அனுங்காதபடி ஸமஂ ஸ்வாத்தாலே சுமஂகரித்துக் கொண்டிருக்கையாலே, (வெறி) பரிமளம், (கமழும்) அலையெறியாநிற்பாளாய், பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் ஒழுகுநீக்ஷிக்கும்- (காம்புஏய்மெல்) வேய் போலேயாய் அதில் வ்யாவ்ருத்தமான ஸௌகுமார்யத்தையுடைய, (தோளி) தோளையுடையளுமான யஶோதைப்பிராட்டி, (கடை) உடம்புநோவக்கடைந்து திரட்டிவைத்த, (வெண்ணெய்) வெண்ணெயை, (உண்டாயை) அமுதுசெய்தருளினவுன்னை, (தாம்பேகொண்டு) கைக்கெட்டிற்றொரு அறுதற்றாம்பையேகொண்டு (ஆர்த்த) உறைக்கக்கட்டுகையால்வந்த, (தழும்பு) தழும்பு, (யானேயுமல்லேன்) நானொருவனுமேயல்லேன், (உலகெல்லாம்) நாடடங்க, (அறியும்) அறியுங்காண்.

உவணமென்று- பருந்துக்குப்பேர். (உஉ)

## இருபத்துமூன்றாம்பாட்டு.

அ—நாம்சிலர்க்கு அஞ்சுகையாவதென், கட்டுண்கையாவதென், அத்தைப் பின்நாடறிகையாவதென்னென்று அத்தைமறைக்கப்புக்கான், ஒருதழும்பாகிலன்றோ மறைக்கலாவது உன்னுடம்படங்கலும் ஸ்ரீதர்காயஞ் செய்கையால்வந்த தழும் பன்றோ?வென்கிறார்-

(அம்) அழகிய, (கை) திருக்கையானது, (சார்ங்கம்)

மூ—நான்றோய்ந்தவாமங்கை* தழும்பிருந்ததாள் சகடஞ்சாடி*- தழும்பிருந்தபூங் கோதையாள்வெருவப் பொன்பெயரோன்மார் விடந்த* வீங்கோதவண்ணர் விரல். (உரு)

விரலொடு வாய்தோய்ந்தவெண்ணெய் கண்டு* ஆய்ச்சிஉரலோ டுறப்பிணித்தநான்று*- குரலோவா தேங்கி

ஸ்ரீஶார்ங்கத்தினுடைய, (நாண்தோய்ந்தஆம்) நாணறைவால்வந்த (தழும்பிருந்த) தழும்பைச்சுமந்தன, (தாள்) அதிஸுகுமாரமான திருவடிகளானவை, (சகடம்) அஸுரா விஷ்டமான ஶகடத்தை, (சாடி) முறிந்துவிழும்படி உதைத்து, (தழும்பிருந்த) அத்தாலெழுந்த தழும்பைச்சுமந்தன, (வீங்கு) கிளர்ந்து (ஓதம்) அலையெறிகிற கடல்போலேயிருந்துள்ள, (வண்ணர்) வடிவையுடையவருடைய, (விரல், திருவிரல்களானவை, (பூ) அழகிய, (கோதையாள்) மயிர்முடியையுடைய பிராட்டி, என்னாகத்தேடுகிறதோ என்று- (வெருவ)நடுங்கும்படியாக, (பொன்பெயரோன்மார்வு) ஹிரண்யன்மார்வை, (இடந்த) பிளந்துபோகட்டத்தால்வந்த, (தழும்பிருந்த) தழும்பைச்சுமந்தன, விரல்தழும்பு கால்வழும்பு கைத்தழும்பு இவற்றை எங்ஙனே உன்னால் மறைக்கும்படியென்கை. (உரு)

இருபத்துநாலாம்பாட்டு.

அ—நாம் வெண்ணெய்களவுகாணப்புக்குக் கட்டுண்டோமாக் வேணுமோவென்ன, களவுகண்டு கட்டுண்டிருக்கும்படி அறியாயோவென்கிறார்-

(விரலொடு) திருக்கையாலேஅள்ளி, (வாய்தோய்ந்த) திருப்பவளத்திலேவைத்த, (வெண்ணெய்) வெண்ணெயை, அமுதுசெய்தருளுவதுக்குமுன்னே- (கண்டு) வாயதுகையதாகக்கண்டு, (ஆய்ச்சி) இடைச்சியானவள், களவுக்குப்பெருகிலைநின்ற- (உரலொடு) உரலோடேயெடுத்து, (உறப்பிணித்தநான்று) உறைக்கக்கட்டினவன்று. (குரல்) கூப்பிடுகிறகூப்பீடு, (ஓவாது) உச்சிவீடுவிடாதபடி, வாய்விட்டழமாட்டாமல். (ஏங்கி) விம்மல்பொருமலாயேங்கிக்கொண்டு, அவ்வளவிலும் வெண்ணெயெங்கே

மூ—நினைந்தயலார்காணவிருந்திலையே* ஓங்கோதவண்ணா! உரை; உரைமேற்கொண்டென்னுள்ளமோவாதே, எப்போதும்* வரைமேல்மரதகமேபோலத்* திரைமேல்கிடந்தானைக்கீண்டானைக் கேழலாய்ப்,பூமி* இடந்தானையேத்தியெழும். (௨௫)

யிருக்கிறது அதுகளவுகாணும்படி எங்ஙனேயென்று இத்தையே (நினைத்து) உருவநினைத்துக்கொண்டு; (அயலார்) உன்னாலேபுண்பட்ட இடைப்பெண்களெல்லாரும், கள்ளனுக்கித்தனையும் வேணும் என்று- (காண) சிரித்துக்கொண்டுவந்து காணும்படியாக, ஸூதாஸனைக்கொண்டு- (இருந்திலையே) இருந்திலையோ, கட்டுண்ணப்பெற்றஹர்ஷத்தாலே- (ஓதம்ஓங்கு) ஓதங்கிளர்ந்தகடல்போன்ற, (வண்ணா) வடிவையுடையவனே? (உரை) நீ இத்தை உண்மையாகச்சொல்லிக்காண்.

இவர்க்கு இவன்வடிவு காணவேணுமென்றும் வார்த்தை கேட்கவேணுமென்றும்போலே காணும் ஆசை. (௨௪)

இருபத்தஞ்சாம்பாட்டு.

அ—அவன்ஓவாதே அழகியபடியைக்கண்டு இவரும்ஓவாதே ஏத்தத்தொடங்கினார்-

(வரைமேல்) ஒருமலையின்மேலே, (மரதகமேபோல) ஒரு மரதககிரிபடிந்தாற்போலே, (திரைமேல்) ஸ்வஸந்நிதாநத்தாலே அலையெறிகிற திருப்பாற்கடலிலே, (கிடந்தானை) கண்வளர்ந்தருளினவனாய், சிறுக்கனார்த்திதீர்க்கைக்காக நரஸிம்ஹமாய் தூணிலேவந்துதோற்றி- (கீண்டானை) ஹிரண்யனைப்பிளந்துபொகட்டவனாய், (கேழலாய்) மஹாவராஹமாய், ப்ரளயத்திலே கரைந்து அண்டபித்தியிலேயொட்டின- (பூமி) ப்ருதிவியை, (இடந்தானை) இடந்தெடுத்துக்கொண்டேறினவனை; (என்) என்னுடைய, (உள்ளம்) ஹ்ருதயமானது, (உரைமேற்கொண்டு) உரைக்கையிலே தத்பரமாய்க்கொண்டு, (ஓவாது) உச்சிவிடுவிடாதே, (எப்போதும்) ஸர்வகாலத்திலும், (ஏத்தி) இவ்வவதாரங்களைச் சொல்லிப்புகழ்ந்து, (எழும்) உஜ்ஜீவியாநிற்கும்.

‘உரைமேல்கொண்டு’ என்று மேலானவுரையைக்கொண்டு

௨௬—எழுவார்விடைகொள்வா ரீன்றுழாயானை* வழுவாவகைநினைந்துவைகல்*- தொழுவார், வினைச்சுடரைநந்துவிக்கும்வேங்கடமே, வானோர்* மனச்சுடரைத்தூண்டும்மலை. (௨௬)

---

உத்க்ருஷ்டமான ஸ்ருவங்களைக்கொண்டென்னவுமாம். 'ஏழுலகு கொண்டானைப் பூமியிடந்தானை' என்று இரண்டையுமிங்கே யாக்ஞஸந்நிதியிலேபொட்டின இத்தைமுதலிலேகண்டு பின்னை இடந்தெடுத்துக்கொண்டேறினபடியைச் சொல்லிற்றாகவுமாம்(௨௫)

இருபத்தாறாம்பாட்டு,

அ—அவ்வவதாரங்களுக்குப் பிற்பாடராநாரிழவை பரிஹரிக்கைக்காகத் திருமலையிலேவந்துஸந்நிஹிதனானனென்கிறார்- 'போற்றியென்றேத்தியெழுவர்' என்கிறபடியே எங்களுக்கு ஹிதமான ப்ரபத்திஸ்வயத்தைத் தரலாகாதோவென்று ப்ரயோஜநத்துக்குக் கையேற்றுக்கிளர்ந்து அது கைப்பட்டவாறே- (எழுவார்) விட்டகன்றுபோம் ஐஸ்வர்யார்த்திகளும்; உன்னநுபவம்வேண்டா எங்களாத்மாவை அநுபவித்துக்கொண்டு ஒருநாளும் 'உன்னைவிட்டகலே விழியாதேயிருக்கும்படி விடைகொள்ளுகைக்குத் திருக்கைச் சிறப்பிட்டருளவேணும் என்று- (விடைகொள்வார்) விடைகொண்டுபோம் கைவல்யார்த்திகளும், (ஈன்) நிரதிசயபோக்யமான, (துழாயானை) திருத்துழாயாலே அலங்க்ருதனாய்ப் பரப்ரஹ்மபூதனானவ னை, (வழுவாவகை) ஒருநாளும் விட்டுநீங்காதே கிட்டிநின்று அநுபவிக்கும் ப்ரகாரத்தை, (நினைந்து) அநுஸந்தித்து; (வைகல்தொழுவார்) ஸர்வகாலமும் அநுபவிக்கக்கடவர்களாயிருக்கும் ஸமாஸ்ரயணாதிகளுமான இவ்வதிகாரிகளுடைய, ததநுபவவிரோதி ப்ரதிபந்தகமான- (வினைச்சுடரை) பாபராசியை, (நந்துவிக்கும்) உருத்தெரியாதபடி நசிப்பிக்கும், (வேங்கடமே) திருமலையேகாணும், (வானோர்) ஸ்வரூபவைபவமுடையரான நித்யஸூரிகளுடைய, (மனச்சுடரை) திருவுள்ளமாகிறவிளக்கை, அவன் ஸ்ரீவைகுண்டநாதனானவத்தின் ப்ரஸங்கை ஸ்மரிப்பித்துக்கொண்டு- (தூண்டும்மலை) ப்ரகாசிப்பிக்கும்மலை. (௨௬)

மூ— மலையாற்குடைகவித்துமாவாய்பிளந்து* சிலையால்மராமர மேழ்செற்று* கொலையானைப்போர்க்கோடொசித்தனவும் பூங் குருந்தம்சாய்த்தனவும்* கார்க்கோடுபற்றியான்கை. (௨௭)

இருபத்தேழாம்பாட்டு.

அ— இங்கே எழுந்தருளிநிற்கிற திருவேங்கடமுடையானுடைய தோளின்றுடிப்பைக் கண்டபோதே அவதாரங்களில் விரோதி வர்க்கத்தைப் பொடிபடுத்தின வீரப்பாட்டங்களும் காணலா மென்கிறார்—

உ— இந்த்ரன் வர்ஷிப்பித்த கல்வர்ஷத்தில் ரக்ஷ்யவர்க்கமழி யாதபடி- (மலையால்) கைக்கெட்டிற்றொரு மலையாலே (குடை) குடைபிடிப்பாரைப்போலே, (கவித்து) கீழதுமேலதாக மறித்து ரக்ஷித்து, தன்னைவிழுங்குவதாகவந்த- (மாவாய்) கேசி யாகிற குதிரையினுடைய வாயை, (பிளந்து) இருபிளவாகக்கி ழித்துப்போகட்டு, ஸுக்ரீவனுக்கு விஶ்வாஸகரமாகவெடுத்த- (சிலையால்) திருவில்லாலே, ஓரம்பினை விஶ்வஸிப்பிக்கைக்காக- (மராமரமேழ்) மராமரங்களேழையும்; (செற்று) இழியச்செய்து, (கொலை) எதிர்த்தவர்களைக் கொன்றுவிழவிடும், (யானை) குவல யாபீடத்தினுடைய, (போர்) பொருகைக்குப் பரிகரமான, (கோடு) கொம்பை, (ஒசித்தனவும்) பிடுங்கிப்போகட்டனவும், கண் டார்க்கு ஆகர்ஷகமாம்படி- (பூங்குருந்தம்) முட்டாக்கிட்டுப்பூத் துக்கிடக்கிற குருந்தை, (சாய்த்தனவும்) வேர்பறியும்படி தள்ளி விழவிட்டனவும், குளிர்ந்துமுழங்குகிற ஸ்வபாவத்தாலே- (கார்) மேகத்தோடொத்திருந்துள்ள, (கோடு) ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, (பற்றியான்) தரித்தருளினவனுடைய, (கை) திருக்கைகள்கிடீர்.

அன்றிக்கே- திருக்கையிலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தைப் பிடித்த போது, மேகத்தைப்பற்றியிருந்த ஹம்ஸம்போலே இருந்ததெ ன்னவுமாம், (௨௭)

இருபத்தெட்டாம்பாட்டு.

அ— திருமலையிலே எழுந்தருளிநிற்கிற திருவேங்கடமுடையா ன் திருமேனியிலே அழகும் வைலக்ஷண்யமும் ஸௌசீல்யாதிகுணங்க

மூ—கையவலம்புரியும்நேமியும்* கார்வண்ணத்தையமலர்கள்நி ன்னாகத்தாள்*- செய்யமறையான் நின்னுந்தியான்மாமதிள்மூன் றெய்த* இறையான் நின்னாகத்திறை (௨௮)

இறையும்நிலனு மிருவிசும்புக்காற்றும்* அறைபுனலுஞ் செந்தீயுமாவான்*- பிறை

---

றும் கிழவிட்டுத் தோற்றுகின்றது கிடீரென்கிறார்-

(கார்) மேகம்போலே ச்யாமளமான, (வண்ணத்து) வடிவையுடைய, (ஐய) நிருபாதிகஸம்பந்தவானவனே, வலம்புரியும்- ஸ்ரீபாஞ்சஜந்யமும், நேமியும்- திருவாழியும், கைய- திருக்கைகளிலே, உளவாயிராநின்றன- மலர்மகள்- அலர்மேல்மங்கையானவள், நின்- உன்னுடைய, ஆகத்தாள்- திருமார்பிலே "இறையும், அகலகில்லேன்" என்று உறையாநின்றாள், செய்ய- உன்னை உள்ளபடி காட்டும் செவ்வையையுடைய, மறையான்- வேதத்தைத் தனக்கு நிரூபகமாகவுடைய ப்ரஹ்மாவானவன், நின் னுந்தியான்- உன்னுடைய திருமேனியைப்பற்றி ஸ்வஸத்தாகனாயிராநின்றான், மாமதிள்மூன்று- பெரியமதிளையுடைய த்ரிபுரத்தை, சுழுமாப்படி- எய்த- எய்துவிழவிட்ட, இறையான்- ஸம்ஹாராதிநியாமகனான ருத்ரன், நின்னாகத்து- உன்திருமேனியில், இறை- ஏகதேசத்தைப்பற்றி ஸ்வஸ்ரூபலாபனாநின்றான். (௨௮)

இருபத்தொன்பதாம்பாட்டு.

அ—நெஞ்சே? உபயவிபூதிநாயகனாயிருக்கிறவன் பெருமையை நினைத்துப் பிற்காலியாதே? அவன் ஆச்ரிதபாரதந்த்ரன்கிடாய்? இத்தைநன்றாக பாவிப்பன்னென்கிறார்-

பரமபதத்திலே ஸர்வேச்வரத்வந்தோற்ற வெழுந்தருளியிருக்கிற இறையும்- ஸ்ரீவைகுண்டநாயகனுமாய், நிலனும்- பூமியும், இருவிசும்பும்- பரப்பையுடைத்தான ஆகாசமும், காற்றும்- வாயுவும், அறைபுனலும் அலைபெறுகிறஜலமும், செந்தீயும்- சிவந்தநிறத்தையுடைய தேஜஸ்ஸுமு, மாகிற பஞ்சபூதாத்மகமான லீலாவிபூதியை, ஆவான்- ப்ரகாரதயா சேஷமாகவுடையனுமாயிருக்கிற பெருமையையுடையவன். பிறை-

ரூ—மருப்பில்லைபைங்கண் மால்டானைபடுதுயரங் காத்தளித்த*
செங்கண்மால் கண்டாய்நெறி. (உ௯)

தெளிதாகவுள்ளத்தைச்செந்நிறீஇ* ஞானத், தெளிதாகநன்
குணர்வார்சிந்தை*— எளிதாகத்தாய்நாடுகன்றேபோல் தண்டுழா

---

பிறைபோலேயிருக்கிற மருப்பு- கொம்பையும், பை ஜாத்யுசித
மான பசுமையையுடைய, கண்- கண்ணையுமுடையனாய், மால்-
அடிமைசெய்கையிலே பெரும்பிச்சனுமாயிருக்கிற, யானை-
ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய, படு- முதலையின்கையிலே அகப்ப
ட்டுப்பட்ட துயரங்காத்து- துக்கத்தைப்பரிஹரித்து, கை
யில்பறித்த பூச்செவ்வியழிவதற்குமுன்னே திருவடிகளிலே பணி
மாறுவித்துக்கொண்டு- அளித்த- ரக்ஷித்தருளின, செம்- வாத்ஸ
ல்யஸூசகமான சிவந்த, கண்- திருக்கண்களையுடைய, மால்க
ண்டாய்- வ்யாமோஹமுண்டாய், நெறி- இத்தை அழகிதாக வுபாஸி
பண்ணு, 'மால்' என்று அரைகுலைபத்தலைகுலையவந்து தோற்
றினபடி. (உ௯)

முப்பதாம்பாட்டு.

அ—வ்ருத்திரிஷங்களில் போகாதபடி மனஸ்ஸை நியமித்துத் தி
ருவடிகளினுறவை அறிந்திருப்பார்க்கு அம்மநஸ்ஸுதானே வரப்
ப்ராப்திபற்றுதபடி பற்றிக்கொண்டு சதுஷ்டிநிவிஷ்டமாய் அவனை
க்கிட்டுமென்கிறார்-

விஷயாராமங்களாலுள்ள காலுஷ்யம்போய்- (தெளிதாக)
தெளிவையுடைத்தாம்படிக்கீடாக, (உள்ளத்தை) ஹ்ருதயத்தை
ஸமவஸ்த்வணமாம்படி, (செந்நிறீஇ) செவ்வேநிறுத்தி, (ஞா
னம்) தவிஷயஸாக்ஷாத்காரவாவஸ ஜ்ஞாநத்தாலே, அவன்சேஷி
நாம்சேஷம் என்கிற. (தெளிதுஆக) தெளிவுண்டாம்படி
யாக, ஸாக்ஷாத்காரவயக்ஷம்- (நன்குஉணர்வார்) நன்றாகவு
ணர்ந்திருக்குமவர்களுடைய, (சிந்தை) மநஸ்ஸானது, (எளிதாக)
வருத்தமற, கூடநிற்கிறபசுக்களையும் கணிசியாதே- (தாய்நாடு)
தன்தாயைத் தேடிக்கொண்டுகிட்டும்; (கன்றுபோல்) கன்று
போலே, (தண்துழாயான்) ஸ்ரீமானமான திருத்துழாயாலே

மூ—யானடிக்கே* போய்நாடிக்கொள்ளும்புரிந்து. (௩௰)

புரியொருகைபற்றி யோர்பொன்னாழியேந்தி* யரியுருவுமாளுருவுமாகி*- பெரியுருவவண்ணத்தான் மார்பிடந்தமாலடியே யல்லால்* மற்றெண்ணத்தானாமோவிமை. (௩௧)

[illegible]கையாலே வகுத்தசேஷியுமாய் நிரதிசயபோக்யனுமான எம்பெருமானுடைய, (அடிக்கே) திருவடிகளையே வஸ்த்வந்தரங்களைக் கணிசியாதே. (புரிந்துபோய்) அங்கே ஸ[illegible]வமாய்க்கொண்டுபோய், (நாடிக்கொள்ளும்) தேடிக்கொள்ளாநிற்கும், இதுவபிப்ராயம். (௩௰)

முப்பத்தோராம்பாட்டு.

அ—ஆச்ரிதவிஷயத்தில் அவனுக்குண்டான பாரதந்த்ர்யவாத்ஸல்யங்களை அநுஸந்தித்தால் வேறேயொருவிஷயத்தை க்ஷணகாலமும் நினைக்கப்போமோவென்கிறார்—

(புரி) ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, (ஒருகை) ஒருதிருக்கையாலே (பற்றி) தரித்து, (ஒருகை) மற்றத்திருக்கையிலே, (ஓர்) அத்விதீயமாய், (பொன்) ஸ்ப்ருஹணீயமான, (ஆழி) திருவாழியை, (ஏந்தி) தரித்து, இவற்றுக்குவிஷயமில்லாதபடி- (ஆளுருவுமரியுருவுமாகி) நரஸிம்ஹங்களிரண்டுக்கும் ஆச்ரயமான வடிவையுடையனாய்க்கொண்டு, (எரிஉருவம்) அக்நியினுடையவடிவுபோலே, எறிட்டுப் பார்க்கவொண்ணாத- (வண்ணத்தான்) வடிவையுடையனான ஹிரண்யனுடைய, (மார்வுஇடந்த) மார்வைப்பிளந்துபொகட்ட ஆஹ்லாதத்தாலே, (மால்) ப்ரஹ்லாதன்பக்கல் வ்யாமோஹமுடையவனுடைய, (அடியல்லால்) திருவடிகளையொழிய, (இமை) ஒருக்ஷணகாலமும், (மற்று) வேறுவிஷயத்தை, (எண்ணத்தான்ஆமோ) நினைக்கத்தான்போமோ அன்றிக்கே நெஞ்சைஅபஹரித்து வேறொன்றை எண்ணப்போமோ, இமை- இத்தையநுஸந்தித்துப்பார்என்றுமாம். (௩௧)

முப்பத்திரண்டாம்பாட்டு.

அ—சாஸ்த்ரங்களிற்சொல்லுகிற ஸாதநாநுஷ்டாநங்களில் அந்வயமில்லையேயாகிலும் சேஷசேஷிபாவமான உறவை

மூ— இமையாத கண்ணால் இருளகல நோக்கி* யமையாப்பொறிபுலனைந்தும்* நமையாமல் ஆகத்தணைப்பாரணைவரே* ஆயிர வாய் நாகத்தணையான் நகர். (௩௨)

நகரமருள் புரிந்து நான்முகற்குப் பூமேல்* பகரமறை

அறிந்தவர்களுக்கும் பரமபதத்தைப் ப்ராபிக்கலாகுமென்கிறார்—

(இமையாத) ஜ்ஞாநஸங்கோசரஹிதமான, (கண்ணால்) நெஞ்சென்னு முட்கண்ணாலே, (இருள்) அஜ்ஞாநமாகிற வல்லிருள், (அகல) விட்டுநீங்கும்படியாக, (நோக்கி) ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை உள்ளபடி தர்சித்து, (அமையா) பெற்ற விஷயங்களால் பர்யாப்திபிறக்கக்கடவதன்றிக்கே யிருக்கிற, (பொறியைந்தும்) பஞ்சகமான ச்ரோத்ராதிகரணங்களையும், (புலன்களைந்தும்) தத்விஷயமான சப்தாதிகளைந்தையும், (நமையாமல்) நியமியாமல், ஸம்பந்நஜ்ஞாநராய் ஸ்வதந்த்ரராய்க்கொண்டு- (அகத்து) ஹ்ருதயத்திலே, (அணைப்பார்) அவனை வைத்து அநுஸந்திக்குமவர்கள், (ஆயிரவாய்) அவனைப்புகழுகைக்கு ஆயிரம்வாயையுடைய, (நாகத்தணையான்) திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேச்வரனுடைய, (நகர்) கலங்காப்பெருநகரை, (அணைவர்) சென்று கிட்டப்பெறுவர்.

அந்த ஸாதநாநுஷ்டாநம் பண்ணுதார்க்கு பரமபதத்தைப்ப்ராபிக்கப்போமோவென்றுமாம் 'அமையாப்பொறிபுலன்கள்' என்று நியமிக்கவரிதான விஷயேந்த்ரியங்களென்றுமாம்.

முப்பத்துமூன்றும் பாட்டு.

அ— எம்பெருமானை உள்ளிடாகக்கொள்ளாதேபண்ணும் ஸந்த்யாவந்தநாதி கர்மாநுஷ்டாநம் நிஷ்ப்ரயோஜநமென்கிறார்-

அந்தரங்கர்க்குக் கிட்டமாளிகைகட்டுமாப்போலே- (பூமேல்) ஜநநஹேதுவான திருநாபீகமலத்திலே, (நான்முகற்கு) சதுர்முகனுக்கு, (நகரம்) இருப்பிடத்தை, (அருள்புரிந்து) க்ருபாபூர்வமாகப் பண்ணிக்கொடுத்து, (பகர) இவ்வருகுள்ளார்க்கும் ஓதுவிக்கத்தக்கதாக, (மறை) தத்வஜ்ஞாபநமான

மூ—பபந்தபண்பன்* - பெரியனையேபுந்தியாற்சிந்தியா தோதி யுருவெண்ணும்* அந்தியாலாம் பயனங்கென். (௩௩)

என்றொருவர்மெய்யென்ப ரேழுலகுண்டாலிலையில்* முன்றொருவனாயமுகில்வண்ணா* - நின்னுருகிப்பேய்த்தாய்முலைதந்தாள்பேர்ந்திலளால்பேரமர்க்க* ணாய்த்தாய்முலைதந்தவாறு. (௩௪)

---

வேதத்தை, (பபந்த) உபகரித்த, (பண்பன்) ஸௌசீல்யாதிகுணங்களை யுடையனானவனுடைய, (பெயரினை) அநந்தகுணங்களுக்கு வாசகமான திருநாமங்களை, (புந்தியால்சிந்தியாது) மநஸ்ஸால் அநுஸந்தியாதே, (ஓதி) வாசோத்தாலே ஜபித்து, (உருவெண்ணும்) இடக்கைபற்றிக்கொண்டு அநுஸந்திக்கிற, (அந்தியால்) ஸந்த்யாவந்தநாதி கர்மாநுஷ்டாநங்களால், (அங்குஆம்) அவ்விடத்திலுண்டான, (பயன்என்) ப்ரயோஜநமேது. (௩௩)

முப்பத்துநாலாம்பாட்டு.

அ—இவ்விஷயத்தில் தலையானஸக்தியை யுடையளாய்க்கொண்டு அவனை யநுஸந்திக்கப்பெற்றவள் யஶோதைப்பிராட்டியொருத்தியுமே யன்றோவென்கிறார்-

ப்ரளயத்திலழியாதபடி- (ஏழுலகு) ஸப்தலோகங்களையும் (உண்டு) அமுதுசெய்து, (ஆலிலையில்) முகிழ்விரியாததோராலந்தளிரிலே. (முன்) ஒருபரிவருமில்லாத ப்ரளயஸமயத்திலே, (ஒருவன்ஆய) அஸஹாயனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளின, (முகில்) காளமேகநிஶ்யாமமான, (வண்ணா) வடிவையுடையவனே, அற்றையிழவுதீர- (நின்) உனக்குஸ்நேஹித்து, (உருகி) பரிவுடனே, (முலைதந்தாள்) முலைதந்து உகப்பித்தாளாயிருந்து, [பேய்த்தாய்] பேய்த்தாயான பூதனையானவள், [பேர்ந்திலள்] அவ்விடத்தினின்றும் பேரமாட்டாமல் பிணமாய்விழுந்தாள், அத்தை- [பேர்] பெரிய, [அமர்க்கண்] ஸமரஸந்நிதியிலே, [ஆய்த்தாய்] இடைத்தாயான யஶோதைப்பிராட்டி. அஞ்சாமல் அந்தவிஷத்துக்கு அஸ்ப்ருஷ்டமாக- [முலைதந்தவாறு] முலைதந்தவ்யாபாரத்தை, [ஒருவர்] அறிவுக்கு அவிஷயரான வ்யாஸ

மூ—ஆறியவன்பிலடியார்தமார்வத்தால்* கூறியகுற்றமாக்கோள் ளல்நீ*- தேறிநெடியோயடி யடைதற்கன்றே* யீரைந்து முடியான்படைத்த முரண். (௩௫)

ஸம்ஸாரிகளான ஜீவிகள், [மெய்யென்பர்] ஸாரமென்று சொல்லாநிற்பர்கள்; [என்] எங்ஙனே, நாட்டில்கண்டறிவதொரு ஸ்நேஹமாகிலன்றோ மெய்யென்னலாவது, ஸர்வசக்தனான ஸர்வஜ்ஞனவனுக்கு அஞ்சுகிற யசோதைப்பிராட்டி ஸ்நேஹமும் ஒரு ஸ்நேஹமே! என்று விஸ்மயிக்கிறார். (௩௪)

முப்பத்தஞ்சாம் பாட்டு.

அ—இவளுடைய ஸ்நேஹத்தைக்கண்டவாறே அல்லாத தம்போல்வார் ஸ்நேஹம் ப்ராதிகூல்யஸமமாய்த் தோற்றி அத்தைப்பொறுத்தருளவேணுமென்று அவனை க்ஷமைகொள்ளுகிறார்-

உனக்கு என்புகுருகிறதோவென்று பரிந்து வயிறெரியும்படி- ஆறிய- ஏறிமறிந்த, அன்பில் ஸக்தியின்றிக்கே, அடியார்- சேஷஜ்ஞாநாநுரூபராயிருக்குமவர்கள், தம்- தந்தாமுடைய, ஆர்வத்தால்- ஸ்நேஹத்தாலே, ரக்ஷிக்கவேணும் அடிமைசெய்யவேணும் என்றாப்போலே, கூறிய- ஸ்வப்ரயோஜநமாகச்சொன்ன வார்த்தைகளை, நீ- குற்றத்தை நற்றமாகக்கொள்ளும் ஆச்ரிதவத்ஸலனான நீ, குற்றமாக்கொள்ளல்- குற்றமாகக்கொள்ளாதொழியவேணும், அதெங்ஙனே கூடும்படி என்று திருவுள்ளமாகில், ஈரைந்துமுடியான்- ப்ரதிகூலனான ராவணன், படைத்த- ஸம்பாதிக்கமாகப்பண்ணின, முரண்- திருவிளைப்பிரித்த மிகைச்செயலானது, நெடியோயடி- ஆநுகூல்யமுள்ளார்திறத்தில் பண்ணும் ஸ்நேஹபக்ஷபாதங்களுக்கு எல்லைகாணவொண்ணாத பெருமையையுடைய வுன்திருவடிகளை, தேறி- கார்யஸித்தியிலே தெளிந்து, அடைதற்கன்றே. விபீஷணனைக் கிட்டுகைக்குடலாய்விட்டதில்லையோ? அன்றிக்கே, நீ தேறி ப்ரஹ்மாவைப் செய்தகுற்றத்தைக் குற்றமாகக் கொள்ளாதொழியவேணு மென்னவுமாம், ப்ரதிகூலரும் ஆநுகூல்யமாய் ஸஹித்தால் ஆநுகூல்யாபாஸம் ஆநுகூல்யமாகத் தட்டுண்டோவென்றபடி. (௩௫)

மூ — மூரணவலிதொலைதற் காமென்றே, முன்னம்* தரணிதன் தாகத்தானே*— யிரணியனைப்புண்ணிரந் தவள்ளுகிராற் பொன் னாழிக்கையால், நீ* மண்ணிரந்து கொண்டவகை* (௩௬)

வகையறு

முப்பத்தாறும்பாட்டு.

அ— இப்படிகூறிய குற்றமாக்கொள்ளல் என்று பொறைகொள் ளவேண்டாதபடி நீதானே உன்னையழியமாறிவந்து கார்யஞ் செய்தது ஸம்ஸாரிகள்சோம்பனையைப் போக்கி உனக்காக்கிக் கொள்ளலாமென்று பார்த்தேயென்கிறார்.

முன்னம்- முன்பே, தரணி- உலகமானபூமியை, தன தாகத்தானே- தன்னதாகத்தானே அபிமானித்திருந்த, இரணி யனை- ஹிரண்யனை, புண்ணிரந்த- புண்படுத்திப்பிளந்த, வள- கூரிய, உகிரால் திருவுகிரோடேகூடியிருப்பதாய், பொன்- ஸ்ப்ரு ஹணீயமான, ஆழி- திருவாழியையுடைத்தான, கையால் தி ருக்கையாலே, நீ- ஸ்ரிய:பதியானநீ, மண்- பூமியை, இர ந்து- யாசித்து, கொண்டவகை- அளந்துகொண்டவ்யாபாரம், "நநமேயம்" என்கிறபடியே தலைவணக்கமறுத்திரியும் கணங்க ரான, மூரணவலி— ஸம்ஸாரிகள் கோபனைமிடுக்கு, தொலை தற்காமென்றே. அறுக்கலாமென்றே.

இரப்புத்தோற்றுகின்ற ஸௌலப்யத்தையும் வடிவழகையுங்கா ட்டி நானெனக்குஎன்றிருக்கும் மிறங்குதலைமீட்டு உனக்கேயா ளாம்படி சேர்த்துக்கொள்ளுகைக்காகவன்றோ வென்றபடி.(௩௬)

முப்பத்தேழாம்பாட்டு.

அ— அங்ஙனே தன்னையிரக்கத்தோற்றவந்து என்னளவன்றிக்கே என்றும்தன்னை ஆச்ரயிக்கக்கொண்டு ஸர்வர்க்கும் ஸர்வ காலத்திலும் ஆச்ரயிக்கலாம்படி திருமலையிலேவந்து நித்யஸ ந்நிஹிதனானனென்கிறார்-

ஸ்வயம்வ்யக்த ஸூக்ஷ்மதிவ்ய ஸ்ம்ஸ்தாபிதமென பலவகைப்பட்டிருக்கிற க்ஷேத்ரவாஸஸ்தானங்களை யும் பரமபதவாஸஸ்தானமென்னும் மோக்ஷத்தையும்; வைகுண்ட

மூ—பேரெறிந்தபெருமணியைக்* காருடையமின்னென்றுபுற்றடையும்வேங்கடமே, மேலசுர* ரென்னென்றமாலதிடம். (௩அ)

இடந்ததுபூமியெடுத்தது

(பேரெறிந்த) மலைபேர்ந்தாப்போலே பேர்ந்துபோம்படியாக எறிந்த, ஒருமலையிலே ஒருமலைதாக்கினாப்போலே யிருக்கும். (பெரு) பெருமையையுடைய, (மணியை) மாணிக்கத்தை, யானையின்கறுப்பும் மணியின்புகரும் தன்னில் வாசிதோற்றுகையாலே, (காருடையமின்னென்று) மேகத்தோடேகூடினதொரு மின்னாகக்கருதி, ஸர்ப்பஜாதியான இடிக்குப் பயப்பட்டு நிர்ப்பயஸ்தானமான, (புற்றடையும்) புற்றிலேசென்று வஸிக்கும் சிறப்பையுடைய, (வேங்கடமே) திருமலையே, ஆக்கரான தேவர்களன்றியே, (மேல) ஸர்வலோகச்ரேஷ்டரான, (சுரர்) நித்யஸூரிகள், (என்னென்ற) எங்களதென்று மேல் விழுந்து, (மாலதிடம்) ஸந்நிஹிதராய வஸிக்கும்தேசம்.

'என்னென்றமாலதிடம்' என்று எங்களது எங்களது என்று ஸந்நிவேசிக்கைக்கு விஷயமான ஸ்தானமென்றபடி. 'எம்' என்கிறவித்தை மாலோடேகூட்டி எங்களுக்கு ப்ராப்யமென்னப்பட்ட ஸர்வேச்வரனதான இட மென்றுமாம், முற்பட யோஜனைக்கு 'மால்' என்று ஸந்நிவேசத்தைச் சொல்லுகிறது. (௩அ)

முப்பத்தொன்பதாம்பாட்டு.

அ—மற்றுமுள்ள திவ்யதேசங்களிற்காட்டில் திருமலைக்கு இத்தனையேற்றமென்னென்ன; அவையெல்லாமொருதட்டும் இதுவொருதட்டென்னும்படி அவன்விரும்பினதேசமன்றோ? திருமலையென்கிறார்.

(பேர்) பெரிய, (ஓதம்) திரைக்கிளர்த்தியையுடைய கடல் போன்ற, (வண்ணர்) வடிவையுடையவர், வராஹவேஷங்கொண்டு ப்ரளயத்திலே புகுந்து, (இடந்தது) இடந்தெடுத்துக்கொண்டேறினது, (பூமி) பூமி, க்ருஷ்ணவேஷங்கொண்டு பூபாரத்தைப் பரிஹரிக்கைக்காக, (எடுத்தது) எடுத்துயரித்து

மூ—குன்றம்* கடந்ததுகஞ்சனைமுன்னஞ்சக*- கிடந்ததுவும் நீரோதமாக்கடலே நின்றதுவும்வேங்கடமே* பேரோதவண்ணர் பெரிது* (௩௯)

பெருவிற்பகழிக் குறவர்கைச்செந்தீ* வெருவிப்புனந் துறந்தவேழம்*- இருவிசும்பில்மீன்வீழக்கண்டஞ்சும் வேங்கடமே* மேலசுரர் கோன்வீழக்

க்கொண்டுநின்றது, (குன்றம்) கோவர்த்தநம், (முன்) உறவிலேபழைத்து நலியநினைத்த முற்காலத்திலே (அஞ்ச) கண்டகாக்ஷியிலே நடுங்கும்படியாக, (கஞ்சனை) கம்ஸனை, (கடந்தது) ஸம்ஹரித்துமுடித்துவிட்டது, இவ்வவதாரங்களுக்கடியாக- (நீர்) மிக்கநீரையுடைத்தாய், (ஓதம்) அலையெறிகிற (மா) பெரிய, (கடல்) திருப்பாற்கடலிலே (கிடந்தது) கண்வளர்ந்தருளிற்று, இங்கு அப்படியன்று; ஸகலாவதாரங்களிலுமுள்ள குணசேஷ்டிதங்களடங்கலும் ப்ரகாசிக்கும்படி உகப்புடனே என்றுமொக்க- (பெரிது) மிகவும், (நின்றது) நின்றருளிற்று, (வேங்கடமே) திருமலையிலேகிடீர். (௩௯)

நாற்பதாம்பாட்டு.

அ—ஸ்ரீதவிரோதி நிரஸநம்பண்ணி உகக்கு மிதுவேகிடீர் அவன் இங்குத்தை நித்யவாஸத்துக்குப் ப்ரயோஜநமாக நினைத்திருப்பதென்கிறார்-

'ஸவ்யஹஸ்தஸ்ஸநா:' என்கிறபடியே (கை) ஒருகையிலேயெடுத்துப்பிடித்த, (பெருவில்) பெரியவில்லையும், (பகழி) வாயம்புகளையு முடையரான, (குறவர்) திருக்குறவர், மற்றக் கையிலே வழியில் வெளிச்செறிப்புக்காகப்பிடித்த- (செம்) சிவந்தநிறத்தை யுடைத்தான, (தீ) சூள்நெருப்பினொளிவழியே, இவர்கள் கையும்வில்லும் பிடித்தசூளுமாய்க்கொண்டு ஆயத்தப் பட்டு வருகிறபடியைக்கண்டு, (வெருவி) நம்மைநலியவருகிறார்கள் என்றுஅஞ்சப்பட்டு, ஒருக்காலும் இங்குவரக்கடவோமல்லோம் என்று- (புனம்துறந்த) புனத்தை ஸந்யஸித்துப்போன, (வேழம்) ஆனையானது, போமிடந்தன்னிலும்- (இரு) பரப்பையுடைத்தான, (விசும்பில்) ஆகாசத்தினின்றும், (மீன்வீழ)

மூ—ஞாழிக்கையான்* திறனுரையே சிந்தித்திரு. (சக)
திருமகளுமண்மகளுமாய்மகளுஞ்சேர்ந்தால்* திருமகட்கே
தீர்ந்தவாறென்கொல்*— திருமகள்மேல்

மலைபோலே ஸ்வயதூத்தால் சலிப்பிக்கவொண்ணாதபடி பொருந்தி
உறைந்திருக்கிற, (குற்றம்) குற்றங்களை, (செயினும்) பத்தும்
பத்தாகச்செய்தாலும், அதிரோத்ரவலனானவன்- செய்தவரேல்
நன்றுசெய்தார், என்னும்படி- (குணம்கொள்ளும்) குணமா
கக்கொள்ளும். (சக)

நாற்பத்திரண்டாம்பாட்டு.

அ—இப்படி குற்றத்தை ஸ்வதந்த்ரனானவன் குணமாகக்கொ
ள்ளக்கூடுமோவென்னில்? 'நகஶ்சிந்நாபராத்யதி' என்று பிராட்
டிமார்மூவரும் அங்கே குடியிருக்கையாலே கூடுமென்கிறார்—
(பாலோதம்) திருப்பாற்கடலில் சிறுதிவலைகளானவை, ஸ்ரீ
ஜனமாம்படி அலைகுத்துவாரைப்போலே- (சிந்த) நாலுபா
டும்சிதறிவிழ, (படம்) ஸஹஸ்ரத்தாலே விகஸிதமான ஃபணை
ங்களையுடைய, (நாகணை) திருவனந்தாழ்வானாகிற படுக்கையி
லே, (கிடந்த) பள்ளிகொண்டருளுகிற- (மால்) பெரிய, (ஓதம்)
கடல்போலே ஸ்ரீஜனமான, (வண்ணர்) வடிவையுடையனான
ஸர்வேஶ்வரனுடைய, (திருமகள்மேல்) பெரியபிராட்டியார்மே
லே, அத்யபிநிவிஷ்டமாய்ச்செல்லுகிற, (மனம்) திருவுள்ளமா
னது, (திருமகளும்) குற்றத்தைப்பொறுப்பிக்கும் பெரியபிரா
ட்டியாரும், (மண்மகளும்) பொறைவிளையும்தறையான ஸ்ரீபூ
மிப்பிராட்டியாரும், குற்றம்கிளராதபடி திருவுள்ளத்தைத்திறை
கொள்ளும்- (ஆய்மகளும்) கோபகுலதைவ தீமெணடியான
நப்பின்னைப்பிராட்டியும், (சேர்ந்தால்) ஸாதரமாக ஸம்ஶ்லே
ஷித்தால், வாத்ஸல்யஸாமாஜிகளோபாதி ஹாஸ்யகாரண
கொடியிலேநின்று பிராட்டியோடே கலக்குமிடத்தில் ஸர்வ
த்ரவ்யமற அல்லாத பிராட்டிமாரெடுத்துக் கைநீட்டுகையாலும்
அவர்களோடே கலக்குமிடத்தில் தன்முலையிலும் இடையிலும்
கைத்தப்போலே பிராட்டி நினைத்திருக்கையாலும், (திருமகட்கே)

மூ—பாலோதஞ் சிந்தப்படநாகணைகிடந்த* மாலோதவண்ணர் மனம். (சஉ)

மூ—மனமாசுதீருமருவினையுஞ்சாரா* தனமாயதானேகைகூடும் புனமேயபூந்துழாயானடிக்கே போதொடுநீரேந்தி* தாந்தொழாநிற்பார் தமர். (சங)

பெரியபராட்டியார்க்கே, (தீர்ந்தவாறு) அற்றுத்தீர்ந்ததாயிருக்கிறபடி, (என்கொல்) எங்ஙனேதான், இத்தால்மூவர்க்குமுண்டான வைலக்ஷண்யம்சொன்னபடி. (சஉ)

நாற்பத்துமூன்றாம்பாட்டு.

அ—பிராட்டிமார் நிருபாதிகராயிருக்கையாலே தங்கள் குற்றத்தைநினைத்துப் பிற்காலிக்கவேண்டுவதில்லை, இனிஸ்வாபாவிகமான வ்ருத்தியிலே அந்வயிக்கவே விரோதிவர்க்கம் தன்னடையேவிட்டு நீங்குமென்கிறார்—

திருமேனியின்ஸௌந்தர்யத்தாலே, (புனம்மேய) தன்னிலத்தில்நின்றாப்போலே செவ்விபெற்று, (பூ) பூத்த, (துழாயான்) திருத்துழாயாலே அலங்க்ருதனான ஸர்வேச்வரனுடைய, (அடிக்கே) திருவடிகளுக்கே, அடிமைக்குக் கைதொடுமானமான; போதொடு- குட்டநன்மாலைகளோடே நீராட்டுகைக்கு உபகரணமான, (நீர்) நன்னீரையும், (ஏந்தி) ஸாதரமாக தரித்துக்கொண்டுநின்று, தங்களுக்குநிருபாதிகமாக, (தமர்தாம்) ஆச்ரிதரானதாங்கள், (தொழாநிற்பார்) அடிமைசெய்யாநிற்பர்கள், இவர்கள் இப்படிவகுத்த அடிமை செய்யவே, (மனம்) அநாதிஸம்ஸாரவாஸிதமான உடலைப்பற்றிக்கிடக்கிற, (மாசு) அஜ்ஞானம்விஷயராகம் முதலானதோஷங்களடங்கலும், (தீரும்) தன்னடையேவிட்டுக்கழலும், அவற்றுக்கடியாய் (அரு) ஸ்வயத்தால் போக்கவரிய, (வினையும்) புண்யபாபங்களும், (சாரா) கிட்டவாரா, கைங்கர்யோபகரணமாய் ஸ்வாபாவிகமான- (தனமாய) தனமாயிருக்கிற பரமபதாதிகளும் (தானேகைகூடும்) தனக்குத்தானேவந்து கைபுகுரும். (சங)

மூ—தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவந்தானே* தமருகந்த தெப்பேர் மற்றப்பேர்*- தமருகந்த தெவ்வண்ணஞ் சிந்தித்திமையா திருப்பரே* அவ்வண்ண மாழியானும். (சச)

நாற்பத்துநாலாம்பாட்டு.

அ—ஆச்ரிதர் இப்படி அடிமைசெய்யுமளவில் இவர்களுகந்த ரூபநாமாதிகளை யுடையனாய்க்கொண்டு தன்னையமைத்து ஸ்வாராதஸ்வரூபனாய் இங்கே அடிமைகொள்ளுமென்கிறார்.

தன்கருத்தறிந்து எடுத்துக்கைநீட்டும் (ஆழியான்) திருவாழிமுதலான திவ்யபரிகரங்களை யுடையனான ஸர்வேச்வரன், அவர்களைக்காற்கடைக்கொண்டு, (தமர்) இன்று ஸம்ஸாரத்திலே தன்னைப்பற்றியிருக்கும் ஆச்ரிதரானவர்கள், ஸ்வர்ணரஜதாதிகளான த்ரவ்யங்களாலே, (உகந்தது) உகந்து ஏறியருள்ப்பண்ணினது, (எவ்வுருவம்) யாதொருவிக்ரஹம், (அவ்வுருவம்) அந்தவிக்ரஹத்தை, ஸ்வாஸாதாரணமான விக்ரஹத்தோபாதி, (தானே) தானே ஸ்வீகரித்து, (ஆம்) பரிக்ரஹியாநிற்கும், (மற்று) இப்படி அவர்களுகந்த திருமேனியை விரும்புகிறவளவன்றிக்கே (தமர்உகந்த) ஆச்ரிதர்உகந்துசாத்தின திருநாமம், (எ) யாதொன்று, (அப்பேர்) அந்தத்திருநாமத்தை, நாராயணாதி நாமங்களோபாதி, (ஆம்) தனக்குநாமமாக விரும்பாநிற்கும், (தமர்) ஆச்ரிதரானவர்கள், (உகந்து) உகந்துகொண்டு, (எவ்வண்ணம்) ச்யாமவெளுப்புதாதிகளான யாதொருப்ரகாரத்தை, (சிந்தித்து) அநுஸந்தித்து, (இமையாதிருப்பர்) அநவரதபாவநைபண்ணியிருப்பர்கள், (அவ்வண்ணமாம்) அந்தப்ரகாரத்தையுடையனாகாநிற்கும்.

இப்படி தன்பெருமைபாராதே ஆச்ரிதருகந்த ரூபநாம ச்யாமவெளுப்புதாதிகளைத் தானுடையனாய்க்கொண்டு ஆச்ரிதரையடிமைகொள்ளும் ஸ்வாராதத்வத்தின் நீர்மையினேற்றத்தை அநுஸந்தித்து வித்தராகிறார். (சச)

நாற்பத்தஞ்சாம்பாட்டு.

அ—இப்படியிருக்கிற வன்நீர்மை ஸூரிமாதிகளுக்கும் நிலமல்லவென்கிறார்—

மூ—ஆமேயமரர்க்கறிய, அதுநிற்க* நாமேயறிகிற்போம் நன்னெஞ்சே*- பூமேயமாதவத் தோன்றாள்பணிந்த வாளரக்கன் நீண்முடியைப்* பாதத்தாலெண்ணினான் பண்பு. (சரு)

---

(நன்னெஞ்சே) என்னினைவிலே நடக்கும் நல்லநெஞ்சே, (பூமேயமாதவத்தோன்றாள்பணிந்த) திருநாபீகமலத்தைத் தனக்கு வாஸஸ்தாநமாக வுடையனாய் ஜகத்ஸ்ருஷ்டிக்கு உபகரணமான தபஸ்ஸுவாயுமான ஜ்ஞாநத்தையுடையனான ப்ரஹ்மாவினுடைய காற்கீழே தலைமடுத்து எனக்குவரந்தரவேணும் என்றாச்ரயித்த, (வாளரக்கன்) ஸாயுதனான ராவணனுடைய, (நீள்) ஓங்கத்தையுடைத்தான, (முடியை) தலைகளை, புதுக்குப்பிடிகண்டு இறுமாந்து மேல்விளைவதறியாமல் அந்த ப்ரஹ்மா அவனுக்குவேண்டின வரங்களைக்கொடுப்பதாக ஒருப்படுகிறவளவிலே ஒருபாலனாய்க்கொண்டு அவன்மடியிலேவந்து ஆவிர்ப்பவித்து அவைகள் அறுப்புண்ணும் தலைகளென்னுமிடத்தை, எண்ணிக்கு நிரதிசயஸௌகுமார்யமான- (அப்பாதத்தால், அந்தத்திருவடிகளாலேநீறி, (எண்ணினான்) எண்ணிக்காட்டி அந்த ப்ரஹ்மாவினநர்த்தத்தைப் பரிஹரித்த ஸர்வேச்வரனுடைய, (பண்பு) குணங்களை, தங்கள்ஹிதமறியாமல் அநர்த்தத்தைச் சூழ்ந்துக்கொள்ளக்கடவ, (அமரர்க்கு) ப்ரஹ்மாதிதேவர்களுக்கு (அறியவாமே) அறியப்போமோ, (அதுநிற்க) அதுகிடக்கிடாய் (நாமே) அவனருளாலே தெளியக்காணவல்ல நாமே, (அறிகிற்போம்) அறிகைக்கு சக்தராகாநின்றோம்.

பேரளவுடைய ப்ரஹ்மாதிகள் மதிகெட்டு நிலம்துழாவாநிற்க நாமேஅவனை அறியப்புகாநின்றோமென்றுமாம். (சரு)

நாற்பத்தாறும்பாட்டு.

அ—ப்ரஹ்மாவுக்குவந்த அநர்த்தத்தைப் பரிஹரித்து ரக்ஷித்தவளவன்றிக்கே லோகஸம்ஹர்த்தாவுமாய் பிதாவுமான அந்த ப்ரஹ்மாவின்தலையையறுத்து பாபவேஷனாய்க் கையுங் கபாலமுமாய் இரந்து உண்டுதிரிந்த ருத்ரனநர்த்தத்தைப் பரிஹரித்து ரக்ஷித்தபடியை யருளிச்செய்கிறார்.

மூ — பண்புரிந்த நான்மறையோன் சென்னிப்பலியேற்ற* வெண் புரிநூல்மார்பன் வினைதீரப்* - புண்புரிந்த ஆகத்தான் தாள்பணிவார் கண்டீர்* அமரர்தம்போகத்தால் பூமியாள்வார். (௪௬)

வாரிசுருக்கி மதக்களிறைந்திணையும்* சேரி

பண்புரிந்த - ஸாரத்திலே நோக்காய், நான்மறையோன் - ஸ்வரூபபேதத்தாலே நாலுவகைப்பட்டிருக்கிற வேதத்தை யதிகரித்திருந்துள்ள ப்ரஹ்மாவினுடைய, சென்னி - தலையை, 'ஸத்ய ஸங்கல்பரோஜயா' என்கிறபடியே அறுக்க, அவன் 'கபாலீ த்வம் பவிஷ்யஸி' என்று சபிக்கக் கையிலே அந்த கபாலத்தைக் கொண்டு - அவன் தலையோட்டிலே, பலியேற்ற - நெடுங்காலம் இரந்துதிரிந்தவனைப், 'ப்ராயஶ்சித்தம்' என்னுமிடத்தேற்ற, வெண்புரிநூல் - வெளுத்தபூணூலையும், மார்பன் - மார்பிலேயிட்டு விநீதவேஷனுமாயிருக்கிற ருத்ரனுடைய, வினை - ப்ரஹ்மஹத்யாரூபமான பாபம், தீர - விட்டுநீங்கும்படியாக, 'நவா மேஷ்ணவிசாரிதம்' என்கிறபடியே திருவுகிராலே கீறி, புண்புரிந்த - ஶரஸமூஹத்தை உபகரித்த, ஆகத்தான் தாள் - திருமேனியையுடைய ஸர்வேஶ்வரன் திருவடிகளை, பணிவர் - ஆஶ்ரயிக்குமவர்கள், கண்டீர் - கிடீர், அமரர்தம்போகத்தால் - நித்யஸூரிகளோமமான பரமபதத்தை ஶ்ரயத்தோடே கூட, பூமி - ஸமுத்ரவலயமான ஸர்வ விபூதியையும், ஆள்வார் - ஸ்வாமியாக நிர்வஹிக்குமவர்கள்.

நாற்பத்தேழாம்பாட்டு,

அ — இந்த்ரியங்களை ஜயித்து ஸம்யக் ஜ்ஞாநத்தை யுடையவர்களாய் அவனை ஆஶ்ரயிப்பார்க்கல்லது - அவன்திருவடிகளைக் கிட்டவொண்ணாதென்கிறார் -

(வாரி) ஸாகரங்களான ஸம்ஸாரிகளான ஜலத்தைக்கண்டு, கடுகமாற்றுதல் நெடுகவிடுதல் செய்யாதே நடுத்தரமான ஸ்தலத்திலே (சுருக்கி) ஸங்கோசிப்பித்து, களித்துக் கண்டகண்டவிஷயங்களிலே காடுபாய்ந்துதிரிகிற - (மதக்களிறைந்திணையும்) ஶ்ரோத்ராதிகளான இந்த்ரியங்களைந்தையும், (சேரி) விஷய

மூ—திரியாமற்செந்நிறீஇ*— கூரியமெய்ஞ்ஞானத்தா லுணர் வார்காண்பரே* மேலொருநாள் கைந்நாகங்காத்தான்கழல். (௪௭)

கழ லொன்றெடுத் தொருகை சுற்றி* யோர்கைமேல் சுழலுஞ்சுராசுரர்க ளஞ்ச*—

ங்களாகிற குடியிருப்புகளில், பண்டுபோலே கயிறுருவிவிட்டு (திரியாமல்) ஸஞ்சரியாதபடியாக, ப்ரத்யக்விஷயப்ரவணமாம்படி (செந்நிறீஇ) செவ்வேநிறுத்தி, ஸந்நிவேஸஹிதஸமமாக ஸந்தோஷித்த ஸங்கல்பத்தாலே தெளிந்த ஸ்நாநத் தனமான மூளைத்து ஸ்வாத்யாயாம்ருதத்தை யதாவாகஷமிக்கும்படி (கூரிய) ஸதிஸூக்ஷ்மமாய், ப்ரியவிஷயத்தை ப்ரத்யக்ஷமாக க்ரஹிக்கைபாலே (மெய்ஞ்ஞானத்தால்) பரமாஸ்த்ரமாயிருக்கிற ஸத்ஸாக்ஷாத்காரஞானத்தாலே, (உணர்வார்) அவனை உள்ளபடியுணர ஸக்தரானவர்கள், (மேலொருநாள்) பண்டொருநாளிலே 'அடிமைசெய்யவேணும்' என்னு மபிநிவேசத்தாலே பாஷாணவயாஸமாக வொருபொய்கையிலேபுக்குத் துதிக்கை முழுத்தும்படி முதலையாலேபிடர்பட, (கைந்நாகங்காத்தான் கழல்) ஸ்ரீகஜேந்த்ராழ்வானை விரோதியைப்போக்கி அடிமை கொண்டுரக்ஷித்த ஸர்வேஸ்வரனுடைய திருவடிகளை, (காண்பர்) கண்டநுபவிக்கப்பெறுவர்கள். (௪௭)

நாற்பத்தெட்டாம்பாட்டு.

அ—நமக்கு இவ்வருந்தொழில்களில் இழியவேண்டா தானேவந்து தன்னைத்தரும் ஸ்வாமியன்றோ வென்று அவன்படியை யநுஸந்தித்து நெஞ்சே! நீ அவனை ஸ்ரீதிவ்யவக்ஷமாக அநுபவிக்கப்பாரென்கிறார்—

(ஒருகழல்) ஒருதிருவடியை, (எடுத்து) ஊர்த்வலோகங்களிலே செல்லவளர்த்து, (ஒருகை) ஒருதிருக்கையாலே, ப்ரதிகூலரான நக்ஷத்ராதிகளை (சுற்றி) சுற்றியெறிந்து, (ஓர் கைமேல்) மற்றையொருதிருக்கையின்மேலே, (சுழலும்) வயிறுமறுகிவரிஹரிக்கிற, (சுராசுரர்கள்) அநுகூலரானதேவர்களும் ப்ரதிகூலரான அஸுரர்களும், (அஞ்ச) நடுங்கும்படி

மூ— அழனுஞ்செருவாழியேந்தினான் சேவடிக்கேசெல்ல* மருவாழி நெஞ்சே? மகிழ். (சஅ)

மகிழலகொன்றேபோல் மாறும்பல்யாக்கை* நெகிழமுயல்கிற்பார்க்கல்லால்*- முகிழ்விரிந்தசோதிபோற்றோன்றுஞ் சுடர்பொன்னெடுமுடி* யெம்

க்ரீடாக, (அழனும்) ப்ரதிபக்ஷத்தின்மேலே அழலையுமிழுகிற, (செரு) யுத்தஸாயநமான, (ஆழி) திருவாழியை, (ஏந்தினான்) தரித்தஸர்வேச்வரனுடைய, (சேவடிக்கேசெல்ல) ஆச்ரிதரிருந்தவிடமே எல்லையாகவளரும் திருவடிகளிலேகிட்டும்படி, (ஆழிநெஞ்சே) அளவுடையநெஞ்சே? (மருவு) நிரந்தரமாகப்பொருதப்பார், அது தேவையாகாதபடி (மகிழ்) மகிழ்வதுஞ்செய், ப்ரீதிபூர்வகமாக வாஸநேபண்ணென்றபடி. சேவடி- சிவந்தவடியென்றுமாம். (சஅ)

நாற்பத்தொன்பதாம்பாட்டு.

அ—எல்லாஞ்செய்தாலும் ப்ரக்ருதிப்ராக்ருதங்களில் விரக்திபிறந்து அவனை ஆச்ரயிப்பார்க்கல்லது அவனைக்காண முடியாதென்கிறார்-

(மகிழலகொன்றேபோல்) கணிதத்தில் நிபுணராலே வைக்கப்பட்டதொரு மகிழலகு காணியஸ்தானத்திலும் கொடியஸ்தானத்திலும் மாறிமாறிநிற்குமாப்போலே, ஸுஹவக்ஷஸங்கத்தாலே கர்மாநுகுணமாக உத்க்ருஷ்டாபக்ருஷ்டமாக (மாறும்) மாறிமாறிவரக்கடவ, ப்ரஹ்மாதிஸ்தாவராந்தமாக (பல்யாக்கை) பலவகைப்பட்டசரீரங்கள், (நெகிழ) தன்னடையே விட்டுநீங்கும்படியாக, ஜ்ஞாநஶக்திவீர்யாதி ஸம்ஸாரநிவர்த்தக (முயல்கிற்பார்க்கல்லால்) யத்நம்பண்ணுமவர்களுக்கல்லது, (முகிழ்விரிந்த) விகஸிதஸ்வபாவமான, (சோதிபோல்) தேஜஸ்ஸைப்போலே, (தோன்றும்) தோற்றுகிற, (சுடர்) தேஜஸ்ஸையுடைத்தாய், (பொன்) ஸுவர்ணமயமாய், (நெடு) ஆயிராஜ்யஸூசகமான, (முடி) திருவபிஷேகத்தையுடையராய், (எம்) எல்லார்க்கும் என்னுடையவனென்று முறைசொல்லிப்பற்றலா

மூ—மாதி காண்பார்க்கு மரிது. (௪௯)

அரியபுலனைந்தடக்கியாய்மலர்கொண்டு* ஆர்வம்புரியபரிசி
னாற்புல்கில்* - பெரியனாய்மாற்றாதுவீற்றிருந்த மாவலிபால்*
வன்கைநீ ரேற்றானைக்காண்பதெளிது. (௫௦)

---

ம்படி, (ஆதி) ஸர்வகாரணபூதனான ஸர்வேச்வரன், (காண்பார்க்கும்) கேவலம் காணவேணுமென்றிருப்பார்க்கும், (அரிது) அரியனாயிருக்கும். (௪௯)

ஐம்பதாம்பாட்டு.

அ—இதரவிஷயஸங்கமற்று ஸ்நேஹபூர்வமாக ஆச்ரயிக்குமவர்களுக்கு அவனைக்காணச் சாலவெளிதென்கிறார்-

(அரிய) நியமிக்கவரிதான, (புலனைந்து) ச்ரோத்ராதி ஜ்ஞானேந்த்ரியங்களைந்தையும், இதரவிஷயங்களில் போகாதபடி (அடக்கி) நியமித்து, அங்குத்தைக்கு யோக்யமாம்படி (ஆய்) மயிர்புழுவறசோதித்த, (மலர்) செவ்விப்பூக்களை, (கொண்டு) ஸம்பாதித்துக்கொண்டு, (ஆர்வம்புரிய) ஸ்நேஹோத்தரமான (பரிசினால்) ப்ரகாரத்தாலே, அபிமதவிஷயத்தை யணைக்குமாப்போலே (புல்கில்) ஸாமரஸ்யமாக ஆச்ரயிக்கில், (பெரியனாய்) ஸர்வேச்வரனிலுங்காட்டில் தன்னைப்பெருக்க நினைத்திருக்குமவனாய், (மாற்றாது) அர்த்திகளுக்குக்கொடுக்கும் கொடையிலொன்றும் மாறாமல், 'ஸர்வஸ்வதானம்பண்ணக்கடவன்' என்று (வீற்றிருந்த) தன்வேறுபாடுதோற்ற வீற்றிருந்த, (மாவலிபால்) மஹாபலிபக்கலிலே, கொடுக்கக்கொடுக்கப் பூரிக்கிற (வண்கை) அழகியதிருக்கையிலே, தான் அர்த்தியாய்ச்சென்று (நீரேற்றானை) நீரையேற்று மண்கொண்டவனை, (காண்பது) கண்டநுபவிக்கை, (எளிது) சாலவெளிதாயிருக்கும் (௫௦)

ஐம்பத்தோராம்பாட்டு.

அ—இனிதாகத்திருநாமத்தை வாயாலேசொல்லவே ப்ரஹ்லாதனுக்கு விரோதியைப்போக்கித் தன்னைக் கொடுத்தாப்போலே நமக்கு விரோதியைப்போக்கித் தன்னை நமக்குத் தந்தருளுமென்கிறார்-

மூ—எளிதிலிரண்டடியுங் காண்பதற்கென் னுள்ளங்* தெளியத்
தெளிந்தொழியுஞ்செவ்வே*- களியில்பொருந்தாதவனைப்பொர
லுற்றரியா* யிருந்தான் றிருநாமமெண். (௫௧)

எண்மர் பதினொருவர்

---

(என்னுள்ளம்) எனக்குவிதேயமானநெஞ்சே? காணவே ணுமென்னு மபிலாஷையுடையார்க்கு- (எளிது) ஸுலபமா மான, (இரண்டடியும்) திருவடிகளிரண்டையும், (காண்பதற்கு) கண்டநுபவிக்கைக்கு, நீ அழகிதாக விஷயாந்தரஸங்கமற்று (தெளிய) நிர்மலமாக, அவன்மேலெழவன்றிக்கே திருவுள்ளத் தோடே (செவ்வே) செவ்விதாக, நான்முன்புபண்ணின ப்ராதி கூல்யாபராதங்களில் (தெளிந்தொழியும்) ஸுப்ரஸந்நமா ய்விடும், ஆனபின்பு நீ (களியில்) வரபலாதிகளால்வந்த செரு க்கையுடையனாய், 'நமநேயம்' என்று (பொருந்தாவனை) தன் னைக்கிட்டோமென்றிருந்த ஹிரண்யனை, (பொரல்உற்று) பொ ருதுமுடிக்கையிலே ஒருப்பட்டு, அவன்வரத்துக்குள்ளடங்காத (அரியாய்) நரஸிம்ஹவேஷத்தை யுடையனாய்க்கொண்டு, ப்ர ஹ்லாதவிரோதியைக் கைதொட்டழித்த ஸௌஹார்த்தாலே (இ ருந்தான்) ஸுப்ரதிஷ்டிதனாயிருந்த ஸர்வேச்வரனுடைய, ஆ ச்ரிதவாத்ஸல்யாதிகுணங்களுக்கு வாசகமான (திருநாமம்) திரு நாமங்களை, ப்ராவண்யத்தாலே நெஞ்சிலே யூற்றிருக்கும்படி (எண்) அநுஸந்தி, பின்னைநம்கையிலும் பிறர்கையிலும் நம்மை விட்டுக்கொடானென்றுகருத்து, எளிதில்- எளிதல்லாத ஸாதநமல்லாத விரண்டுதிருவடிகளென்னுதல், என்னுள்ளம்- என்னுள்ளமே? யென்று ஸம்போதி. (௫௧)

ஐம்பத்திரண்டாம்பாட்டு.

அ—நமக்கு அவன்பேர்சொல்லாவிடில் ஜீவிக்கவரிதோவென்ன ஞாநிகளான அதிகாரிவிசேஷர்க ளடங்கலும் அவனை யாச்ரயித்தன்றோ தங்களதிகாரங்களைப் பூண்கட்டிக்கொள்ளு கிறது நமக்குப்பின்னைச் சொல்லவேணுமோவென்கிறார்-

(எண்மர்) அஷ்டவஸுக்களும், (பதினொருவர்) ஏகாதச

மூன்றாவரோரிருவர் * வண்ணமலரேந்திவைகலும் * - நண்ணியொருமாலையாற் பரவியோவாதெப்போதும் * திருமாலைக் கைதொழுவர் சென்று. (௫௨)

சென்றாற்குடையா மிருந்தாற்சிங்காசனமாம் * நின்றால்

ருத்ரர்களும், (ஈராறுவர்) ஆதித்யர்களும், (ஓர்) அத்விதீயமான, (இருவர்) அச்விநிகளிருவரும், (வண்ணம்) நாநாவர்ணமான, (மலர்) புஷ்பங்களை, (ஏந்தி) தரித்துக்கொண்டு (வைகலும்) ஸர்வகாலங்களிலும், (நண்ணி) வந்துகிட்டி, (ஒரு) அத்விதீயமான, (மாலையால்) ஸ்ரீபுருஷஸூக்தாதிஸ்தோத்ரங்களைக்கொண்டு, (பரவி) அடைவுகெடப்புகழ்ந்து, (எப்போதும்) எல்லாக்காலத்திலும், (ஓவாது) உச்சிவீடுவிடாதே, அபிமதங்களைக் ஸாதிப்பிக்கும் வடிவையான (திரு) பெரியபிராட்டியாரோடே கூடியிருக்கிற, (மாலை) ஸர்வேச்வரனை, (சென்று) ஸ்தானத்தைத் துறந்துசென்று, (கைதொழுவர்) கிட்டி ஆச்ரயிப்பர்கள். (௫௨)

ஐம்பத்துமூன்றாம்பாட்டு.

அ—ஸர்வப்ரயோஜநத்துக்கு மடியேற்கும் ப்ரஹ்மாதிகள் ஆச்ரயிக்கும்படியை யநுஸந்தித்து உள்வெதுப்படங்கும்படி அநந்யப்ரயோஜநராய் அபிமதமயாஹிதராய் தத்தவஸ்தோசிதமான வடிவெடுத்துக்கொண்டு அடிமைசெய்யக்கடவ நித்யஸூரிகளுக்குத் தலைவனான திருவனந்தாழ்வான் அங்குத்தைக்கு அடிமைசெய்யும்படியை யநுஸந்திக்கிறார்-

(திரு) பெரியபிராட்டியாரோடே நித்யஸம்யுக்தனாயிருக்கிற, மாற்கு- ஸர்வேச்வரனுக்கு, அவனுமவளுங்கூடக் கண்ணுற்றுத்துகைத்துப் பரிமாறுகைக்கு யோக்யமான வடிவையுடைய, அரவு- திருவனந்தாழ்வான், உகப்புக்குப்போக்குவீடாக- சென்றால்- அவன் உலாவியருளப்புக்கால், மழைவெய்யில்படாதபடி- குடையாம்- குடையாம், இருந்தால்- தன்னிலேயாலே யெழுந்தருளியிருந்தால், சிங்காசனமாம்- திவ்யஸிம்ஹாஸநமாம், நின்றால்- ஸ்வஸ்தியாலே எழுந்தருளிநின்றால்,

ம் — மரவடியாம் நீள்கடலுள்* என்றும்புணையாம் மணிவிளக்காம்பூம்பட்டாம்புல்குமணையாம்* திருமாற்கரவு. (ருங)

அரவ மடல்வேழ மான் குருந்தம் புள்வாய்* குரவை குடம்முலைமற்குன்றம்*-

---

மரவடியாம்- திருவடிநிலைகளாம், நீள்- பரப்பையுடைத்தான, கடலுள்- கடலிலே கண்வளர்ந்தருளும்போதைக்கு, என்றும்- ஸர்வகாலத்திலும், புணையாம்- திருப்பள்ளிமெத்தையாம், ஏதேனுமொன்றை விளக்கிட்டுக்காண அபேக்ஷிதமானபோது- மணிவிளக்காம்- ரத்நதீபமாம், சாத்தியருளத் திருப்பரியட்டம் அபேக்ஷிதமான ஸமயத்தில்- பூம்பட்டாம்- ஸுகாவஹமான அழகியதிருப்பரியட்டமாம், சாய்ந்தருளினபோதைக்குப் பிராட்டியார் 'சிறுபாறு' என்னும்படி- புல்குமணையாம்- தழுவணையாம். (ருங)

ஐம்பத்துநாலாம்பாட்டு.

அ — இப்படி தன்னினைவுக்கீடாக அடிமைசெய்யும் திருவனந்தாழ்வானுகிற படுக்கையைவிட்டு இங்கேவந்தவதரித்துக் களைபிடுங்கித் தன்விஜாதியை நோக்கும்படியை அநுஸந்திக்கிறார்-

செங்கண்- புண்டரீகாக்ஷனான, அவன்- அந்த ஸர்வேஶ்வரன், கரவின்றி- மறைக்கையின்றிக்கே, ஸர்வலோகப்ரஸித்தமாம்படி- அரவு- காளியனாகிற ஸர்ப்பத்தை, விட்டு- விட்டடித்து, அடல்- யுத்தோந்முகமான, வேழம்- குவலயாபீடத்தை, இறுத்து- முறித்துவிழவிட்டு, ஆன்- பசுக்களை, மேய்த்து- குறைவறமேய்த்து, குருந்தம்- குருந்தத்தை, ஒசித்து- இணங்கிப்பொகட்டு, புள்வாய்- பகாஸுரனுடையவாயை, கீண்டு- கிழித்து, இடைப்பெண்களோடே, குரவைகோத்து- திருக்குரவைகோத்து, ஸௌஶீல்யச்செருக்குப் போக்குவிட்டு, குடமாடி- குடமெடுத்தாடி, முலையுண்டு- நலியவந்த பூதனைமுலையை ப்ராணஸஹிதமாகவுண்டு; மல்- கம்ஸன்; ஏவிற்றுச்செய்வானென்றெதிர்ந்துவந்த மல்லரை, அட்டு- முடித்து; வர்ஷாபத்தைப் பரிஹரிக்கைக்காக, குன்றம்- கோவர்த்த-

ழ—கரவின்றிவிட்டிறுத்துமேய்த் தொசித்துகேண்டு கோத்தாடி
புண்டு* அட்டெடுத்த செங்கணவன். (௫௪)

அவன்றமரெவ்வினையராகிலுமெங்கோ* னவன்றமரேயென்றொழிவதல்லல்*. நமன்றமராலாராயப்பட்டறியார்கண்டீ*ரரவணைமேல் பேராயற் காட்பட்டார் பேர். (௫௫)

---

வைக்ஷத்தை, எடுத்த- எடுத்துமுதலான இச்செயல்களானவை யிருந்தபடி யென்னென்று விஸ்மயநாஸவிக்கிறார், இது நிரை நிரையென்று தமிழர்சொல்லும்லக்ஷணம். (௫௪)

ஐம்பத்தஞ்சாம்பாட்டு.

அ—அவன் இப்படி ஆச்ரிதரைக் கண்ணிலே வெண்ணெயிட்டு நோக்கி தமிழொயிகளைப்பம்போக்கும் ஸ்வாவனுயிருக்க ஆர்தான் இவர்களைக்கண்கொண்டு சிவக்கப்பார்க்கவல்லாரென்கிறார்-

அவன்- அந்தஸர்வேஶ்வரனுக்கு, சுநாகஶேஷராய்ப்போரும். தமர்- ஆச்ரிதரானவர்கள், எவ்வினையராகினும். சுக்ருதகாரண துஷ்க்ருதகாரண மூலமான எந்தத்தொழிலையுடையராகிலும், எங்கோனவன்தமரே- எங்களுக்கு ஸ்வாமியான அந்தஸர்வேஶ்வரனை ஆச்ரயித்த உஹாவைஷ்ணவர்களிறே, என்று- என்றுஅவர்களைக கொண்டாடி, ஒழிவதல்லால்- தங்களைக்கொண்டு கடக்கப்போமித்தனையொழிய, அரவணைமேல்- திருவரவணையிலே வசிக்கக்கடவனுப், பேராயற்கு- இடைத்தனத்தில் தனக்கொத்தாரில்லை என்னும்படி அதிஸ்வயாதனன் க்ருஷ்ணனுக்கு, ஆட்பட்டார்- அடிமைபுக்கிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை, தங்களளவன்றிக்கே, பேர்- தங்கள்பேருங்கூட, நாட்டார்காயஷோராய்கைக்கு, நமன்- அவனுடைய ஆளாயிருக்கிற யமனுக்கு, தமரால் அஜாமஹடராயிருக்கிறவர்களால், ஆராயப்பட்டறியார்கண்டீர்- ஆராயப்பட்டறியார்கிடீர்.

ஐம்பத்தாறாம்பாட்டு.

அ—அவன்றிருநாமங்களை யடைவுகெடச்சொல்லிப்போ யத்தனையல்லது ஸர்வேஶ்வரன் ஸ்வரூபம் ஆர்க்கும் பரிச்சேதிக்கவரிதென்கிறார்-

ருசு — பேரேவரப் பிதற்றலல்லால் * எம்பெருமானையாரேயறிவார்
அதுநிற்க* — நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் *
கண்ணனடிக்கமலந்தன்னை யயன். (ருசு)

அயல்நின்ற வல்வினையை யஞ்சினேன் * அஞ்சியுயநின்திருவடியே

---

ஏதேனுமொன்றைச் சொல்லிலும், பேர்வர- திருநாமம் வாயிலேவரும்படி, பிதற்றலல்லால்- க்ரமமாகச்சொல்லிக்கூப்பிடுமித்துனையல்லது, எம்பெருமானை- தன்படிகளையெனக்குத் தானேகாட்டித்தந்த என்னுடையனானவனை, ஆர் அறிவார்- ஆர்தான் அறியவல்லார், அதுநிற்க- அவ்விடையாட்டம் கிடக்கிடீர், கடி- பரிமளவுருவமான, கமலத்துள்- திருநாபீகமலத்திலே அவ்யவதாநேநப்பிறந்து, நேரே யிருந்தும்- அங்கே நிரந்தரவாஸம்பண்ணுகிறசெய்தேயும், அவன்பக்கலிலே யாதி இவ்வருகுள்ளார்க்கும் அறிவுகொடுக்கும்படி அறிவில்தலைநின்ற- அயன்- சதுர்முகனானவன், கண்ணனடிக்கமலந்தன்னை- ஸர்வஸுலபனான ஸர்வேச்வரன் திருவடித்தாமரைகளை, காண்கிலான்- இவ்வளவென்று அளவிட்டுப்பரிச்சேதிக்கைக்கு ஸமர்த்தனல்லன், பேரேவரப்பிதற்றுகையாவது- அவன்தானேவரும்படி திருநாமங்களை க்ரமமாகச் சொல்லுமத்தனை போக்கியென்றுமாம். (ருசு)

## ஐம்பத்தேழாம்பாட்டு.

அ — ப்ரஹ்மாவுக்கறியவொண்ணாத விஷயத்தை நீரறிந்தபடியென்னென்ன; திருநாமமாச்ரயித்து அவன்றானே தன்னைக் கொண்டுவந்துகாட்டக் கண்டேனென்கிறார்-

(அயல்நின்ற) அருகுவிட்டுப்போகாதே இடைவிடாமல் நலிந்தபடிநிற்கிற, (வல்) சக்திமத்தமான, (வினையை) பாபத்தைக்குறித்து முன்புபோலே இன்னமும்வந்து மேலிடில் செய்வதென்னென்று (அஞ்சினேன்) பயப்பட்டேன், (அஞ்சி) இப்படிபயப்பட்டு, இந்தபாபஸம்பந்தமற்று (உய) உஜ்ஜீவிக்கைக்கு, ஸித்தஸாதநமான (நின்திருவடியே) உன்திருவடிகளையே;

மூ—சேர்வான்* நயநின்ற நன்மாலைகொண்டு நமோநாரணா வென்னுஞ்* சொன்மாலைகற்றேன் றொழுது. (௫௭)

தொழுதுமலர்கொண்டு தூபங்கையேந்தி* யெழுதுமெழு வாழிநெஞ்சே*- பழுதின்றிமந்திரங்கள்கற்பனவு மாலடியே கைதொழுவான்*

(சேர்வான்) வந்துகிட்டுகைக்காக, (நயம்நின்ற) நயப்புடைத்தாய், (நல்) அதிவிலக்ஷணமான, (மாலைகொண்டு) ஸ்ரஜங்களாலேதொடுக்கப்பட்ட இப்ரபந்தரூபமான மாலையைக் கொண்டு, (தொழுது) உன்னையாச்ரயித்து, (நமோநாரணாவென்னும்) உனக்குவாசகமாய் திருமந்த்ரமென்று ப்ரஸித்தமான, (சொன்மாலை) சொல்தொடையை, (கற்றேன்) அப்யஸித்தேன், அன்றிக்கே திருமந்த்ரார்த்தத்தை நயிப்பிக்கையிலே தாத்பர்யமாய்க் கொண்டுநின்ற விலக்ஷணஸந்தர்ப்பரூபமான இப்ரபந்தத்தைக் கொண்டெனவுமாம், அயல்நின்றவன்று ஜந்மம்பிறந்தபின்பு பாபங்கள் தம்மைவிட்டுக்கடக்கநின்றபடியைச் சொல்லிற்றாகவுமாம், அயல்நின்ற வல்வினையென்று திருநாமஞ் சொல்லாதபோது தமக்குள்ள வ்யஸநமாகவுமாம். (௫௭)

ஐம்பத்தெட்டாம்பாட்டு.

அ—ஆனபின்பு நெஞ்சே? இவ்விஷயத்தைவிட்டு நமக்கு ஒருக்ஷணம் ஆறியிருக்கவிரகில்லை அவன்றிருவடிகளை ஆச்ரயியென்கிறார்.

(நெஞ்சே) நெஞ்சே, (மலர்) செவ்விப்பூக்களை, (கொண்டு) ஸம்பாதித்துக்கொண்டு, (தூபம்) தூபத்தை, (கையேந்தி) கையிலேபரித்து, ஸாதனபாவநாபாவமாக (தொழுது) அவனைத்தொழுது, (எழுதும்) உஜ்ஜீவிப்போம், (எழு) கடுகவெழுந்திரு, (வாழி) உனக்கு இந்தஸம்ருத்தி, நித்யமாய்ச்செல்ல (பழுதின்றி) கிடந்தானைக்கண்டேறாதே, ஆசாபயேனப் பழக்கவொவித்து (மந்திரங்கள்) திருவஷ்டாக்ஷரம்முதலான மந்த்ரங்களை, (கற்பனவும்) பழுதற நாம்அப்யஸிக்கிறவையும், (மாலடியே) ஸர்வேச்வரன்திருவடிகளிலே, இடைவிடாமல் (கைதொழுவான்)

ரு—அந்தா மொன்றில்லையடை. (ருஅ)

அடைந்தவருவினையோடல்லல்நோய்பாவம்* மிடைந்தவை மீண்டொழியவேண்டில்*- நுடங்கிடையைமுன்னிலங்கைவைத் தான்முரணழிய* முன்னொருநாள்தன்விலங்கைவைத்தான்சரண்॥

---

சுஜ்விஸ்வம் முதலான வ்யூஹவிசேஷங்களைப் பண்ணுகை க்காக, ஆனபின்பு நமக்கு ஆறியிருக்கைக்கு (அந்தாம்) அவ காசம், (ஒன்றில்லை) ஏகதேசமுமில்லை, (அடை) கடுகச் சென்றுகிட்டு. (ருஅ)

ஐம்பத்தொன்பதாம்பாட்டு.

அ—சொமத்துக்குவேணுமாகில் இத்தைச்செய்கிறோம், இது க்குஇடைச்சுவரான விரோதியை இருதுண்டமாக விடுகைக்கு உபாயமேதென்ன? அதுக்குவேணுமாகில சுபாயதஜனைச் சரணம்புகு வென்கிறார்-

ஜ்ஞாநாநந்தங்களோபாதி ஆத்மாவுக்கு நிரூபகமென் றபடி (அடைந்த) அடியேபிடித்துப் பற்றிக்கிடக்கிற, (அ ரு) போக்கவரிதான, (வினை) ப்ராசீநவாஸம், (அல்லல்) அதடியாகவருகிற மாநஸமானது:கங்கள், (நோய) சாரீர மானவ்யாதி, (பாவம்) ஆதிஸாநஸரீரகொண்டு பண்ணுகிற நிஷிஹாசாரம் என்றுப்போலே பலஹாவியமாய்க்கொண்டு, (மிடைந்தவை) பரணிகூடுவரிந்தாப்போலே ஆத்மாவைத் தெரி யாதபடி மூடிக்கிடக்கிறவிவை, (மீண்டொழியவேண்டில்) வாஸ னையோடே விட்டுப்போகவேண்டில், க்ஷணகாலமும் விளம்ப ஷிக்கத்தகாதபடி (நுடங்கிடையை) நேரியஇடையழகையுடை யபிராட்டியை, (முன்) முன்பொருகாலத்திலே, (இலங்கை) லங்கையிலே கொண்டுபோய், (வைத்தான்) சிறைவைத்தராவ ணனுடைய, (முரண்அழிய) மிடுக்கு அழியும்படிக்கீடாக, (மு ன்னொருநாள்) பண்டொருநாளிலே, (தன்) தன்னுடைய, (வி ல்) ஸ்ரீசாரங்கத் திருவில்லை, (அம்கை) அழகியதிருக்கையிலே, (வைத்தான்) வைத்தசுபாயதஜனே, (சரண்) உபாயம், இத்தால் பிராட்டிவிஷயத்தில்போலே ஆஸ்ரிதவிஷயத்தில்

மூ— சரணாமறைபயந்ததாமரையானோடு* மரணாயமன்னுயிர்கட் கெல்லாம்*- அரணாயபேராழிகொண்டபிரானன்றி மற்றறியாது* ஓராழி சூழ்ந்த வுலகு. (௬௦)

ராமஸ்ரான் உகந்து காயக்ஞ்செய்யுமென்னுமிடமும், அவன் ஸ்ரீ ரக்ஷணத்திலே இரங்குமென்று இவனுக்கு க்ருதஞாம்சமுள்ளதெ ன்னுமிடமும், அவன் சுவெசுஷிதஞ்செய்யு மென்னுமிடத்தில் இவன் வசாாக்ஷகாரமென்னுமிடமும், அவன்வஷ்டவை என க்குஎன்பார் - ராவணாதிகள் பட்டதுபடுவரென்னுமிடமும், சொல்லிற்றாய்த்து. ஐஶ்வர்யஜயத்தைப்பண்ணு? அவனைத்தொழு அவன்திருநாமத்தைச்சொல்லு அவனைநினை என்றாப்போலே- கீழ் பலபடியாகச் சொல்லிற்றெல்லாம் ஷட்க்ருதியத்தில் வாமெதக் போலே ஸ்ரமியம் விஶதமாய்ச்சொன்னதில்லை, இது வாம ஶ்லோகத்தில் நிலைபோலே உணர்ந்தவன்று அவனல்லது உபாயமில்லையென்கை. (௫௯)

அறுபதாம்பாட்டு.

அ—இவன் ஸம்ஸாரிவாயிருக்க அவன்ஸாதநமாக வேண்டுகிறதென்னென்ன? ஸவஜ்ஞனுப் ஸவஶக்தனுயிருப்பானொருவன் உபாயமாகித்தனைபோக்கி அஜ்ஞனுப் அஶக்தனைவிவனால் செய்யலாவதுண்டோவென்கிறார்—

அஷிதஷிக்கு அநாதிஸவமான உபாயங்களையறிகைக்கு (சரண்) ஸாதநமான, (மறை) வேதத்தை, (பயந்த) நாட்டுக்கு உபதேஶமூலவேத உண்டாக்கின, ஜ்ஞாநஶாஸ்த்ரத்தையுடையோமென் றபிமாநித்திருக்கிற, (தாமரையானோடு) ப்ரஹ்மாவோடேகூட, (மரணாய) மரணயமாக்க ளாகையாலே அறிவுகேடராய், (மன்) நித்யமானஸ்வபாவத்தை யுடையரான, (உயிர்கட்கெல்லாம்) ஆத்மாக்களுக்கெல்லாம், (அரணாய) ரக்ஷையானவத்தை, (பேர்) ரக்ஷணவரிகரமான பெரிய, (ஆழிகொண்ட) திருவாழியையுடையனான, (பிரானன்றி) உபகாரகனையல்லது, (மற்று) வேறு, (ஓர்) அத்விதீயமான, (ஆழி) கடலாலே, (சூழ்ந்த) சூழப்பட்ட, (உலகு) ஸம்லோகத்தி

மூ—உலகுமுலகிறந்த வூழியும்* ஒண்கேழ்விலகு கருங்கடலும் வெற்பும்*- உலகினிற்செந்தீயுமாருதமும் வானும்* திருமால்தன்* புந்தியிலாய புணர்ப்பு. (௬௧)

புணர்மருதினூடுபோய்ப் பூங்

---

னுள்ள ப்ராணிபானது, (அறியாது) அறியாது, இத்தால் சிறியாரோடு பெரியாரோடு வாசியறத் தந்தாமுடைய ரக்ஷணம் தாங்களறியமாட்டார்கள், இவனே ஸர்வர்க்கும் ரக்ஷணவ்யாபாரமறியுமவன் என்றதாய்த்து. (௬௦)

அறுபத்தோராம்பாட்டு.

அ—அவனையொழிய இவை தந்தாமுக்கு ஹிதமறியாதென்றீர், அவன்றான் இவைதன்னை நோக்கவேண்டுகிற ஹேதுவென்னென்னில்? பெற்றவனையொழிய வளர்ப்பாருண்டோவென்கிறார்-

(உலகும்) ஸப்தத்வீபாதிகளான லோகங்களும், (உலகு) லோகங்களெல்லாம், காலசேஷமாம்படி (இறந்த) அழிந்துகிடக்கிற, (ஊழியும்) ஸம்ஹாரகாலமும், (ஒண்) அழகிய, (கேழ்) நிறத்தையுடைத்தாய், (விலகு) அலையெறியாநின்றுள்ள, (கருங்கடலும்) ஸ்ரீஹாரமானகடலும், பூமிக்கு ஆணியடித்தாப்போலிருக்கிற (வெற்பும்) குலபர்வதங்களும், பின்னையும் (உலகினில்) லோகத்திலுண்டான, (செம்) சிவந்தநிறத்தையுடைய, (தீயும்) தேஜஃபதார்த்தங்களும், (மாருதமும்) வாயுவும், (வானும்) ஆகாசமும், இவையெல்லாம் பிராட்டிக்குகப்பாக (புந்தியில்ஆய) ஜகத்ஸ்ருஷ்டியிலே ஒருப்பட்ட, (திருமால்தன்) ஸ்ரீயஃபதியுடைய, (புணர்ப்பு) ஸங்கல்பகல்பிதமான வகுப்பையுடைத்தது. (௬௧)

அறுபத்திரண்டாம்பாட்டு.

அ—இவற்றையுண்டாக்கித் தான் கடக்கவிருக்கை யன்றிக்கே- இவற்றைக்களைபிடுங்கி நோக்குவானும் அவனேயென்கிறார்-

(புணர்) இடைவெளியறப் பொருந்திநின்ற, (மருதினூடு) யமளார்ஜுநங்களின் நடுவே, ஊடறுத்துக்கொண்டு (போய்) தவழ்ந்துபோய், இலையுங்கொம்பும் தெரியாதபடி (பூ) பூத்துக்

மூ—குருந்தம்சாய்த்து* மணமருவமால்விடையேழ்ச்செற்றுக்*-
கணம்வெருவவேழுலகந்தாயினவு மெண்டிசையும்போயினவுஞ்*
சூழரவப்பொங்கணையான் றோள். (௬௨)

தோளவனையல்லாற்றொழா* வென்செவியிரண்டுங்கேளவன
தின்மொழியே கேட்டிருக்கும்*-

---

கிடந்த, (குருந்தம்) குருந்தத்தை (சாய்த்து) தள்ளிப்பொகட்டு, பிராட்டியைக் கைப்பிடிக்கையாகிற, (மணம்மருவ) கல்யாணம் தலைக்கட்டுகைக்காக, (மால்) பெரியவடிவையுடைய, (விடையேழ்) ரிஷபங்களேழையும், (செற்று) முடித்து, 'ஸம்வெஸ்ஸராணாம்' என்கிறபடியே ஜநகர்ம வ்ருத்திகர்ம விஹாரமற (கணம்) ஸர்வப்ராணிகணமும், என்னாகத்தேடுகிறதோ என்று (வெருவ) நடுங்கும்படி; (ஏழுலகம்) ஸப்தலோகங்களையும், (தாயினவும்) வருத்தமற அளந்துகொண்டனவும், (எண்டிசை) எட்டுதிக்குக்களிலும், (போயினவும்) போய்வ்யாபித்தனவும், (சூழ்) விஸ்த்ருதனாய், மேன்மைகுளிர்த்தி நாற்றங்களையுடைய (அரவம்) திருவனந்தாழ்வானாகிற, (பொங்கு) அழகிய, (அணையான்) திருப்படுக்கையிலே கண்வளர்ந்தருளின ஸர்வேஶ்வரனுடைய, (தோள்) திருத்தோள்கள் கிடீர், அந்தப் படுக்கையும் பொறுத ஸௌகுமார்யத்தை யுடையவன்கிடீர், இச்செயல்களைச்செய்தான். அப்படுக்கையில் கண்வளரப்பொறாமல் இப்படி அலமர்ந்து திரிவதேஎன்று வயிறுபிடிக்கிறார். (௬௨)

அறுபத்துமூன்றாம்பாட்டு.

அ—இப்படியிருக்கிற வவன்பக்கலிலே என்னுடைய ஸர்வேந்த்ரியங்களும்ப்ரவணமாய்த்து, நானும்ப்ரவணனானேனென்கிறார்-

(தோள்) என்னுடையதோள்களானவை, நான்வேறுசிலரைத்தொழ என்னிலும் (அவனையல்லால்) அந்தஸர்வேஶ்வரனையல்லது, (தொழா) தொழுகிறனவில்லை, (என்) என்னுடைய, (செவியிரண்டும்) செவிகளிரண்டும், (கேள்) நிரவதிகபோக்யவான, (அவனது) அவனுடைய, (இன்) ஸம்ஶ்ரவணீயமான, (மொழிகேட்டு) பேச்சைக்கேட்டு, அத்தாலே (இருக்கும்)

மூ—நா நாளுங்கோணாகணையான்குரைகழலேகூறுவதே* நாணாமைநள்ளேன் நயம். (௬௩)

நயவேன்பிறர்பொருளைநள்ளேன்கீழாரோடு* உயவேனுயர்ந்தவரோடல்லால்*- வியவேன்திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்*

---

பரித்திருக்கும், (நா) நாவானது, (நாளும்) ஸர்வகாலமும், (கோள்) மிடுக்கையுடைய, (நாகம்) திருவனந்தாழ்வானை (அணையான்) படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய, குரை (கழலே) ஆபரணத்வநியை யுடைத்தான திருவடிகளையே, (கூறுவது) சொல்லாநிற்கும், நாட்டார்விரும்பி மேல்விழுகிற விஷயங்களை அவர்களில் வ்யாவ்ருத்தனான நான், நாணாமை- நிர்லஜ்ஜனாய்க்கொண்டு, நள்ளேன்- செறியேன், நயம்- ஜ்ஞானம்பிறந்தபின்பு த்யஜித்து மீளவேண்டும்படிகாணும் விஷயவ்யாவ்ருத்தின் பொல்லாங்கிருப்பது. (௬௩)

அறுபத்துநாலாம்பாட்டு.

அ—உமக்கும் உம்முடைய கரணங்களுக்கும் ஹேயவிஷயத்திலே இதரவிஷயங்களைக் கடைக்கணியாதபடி வ்யாவ்ருத்தி பிறந்தாலும் பூர்வவாஸநையாலே ஆவர்ந்து மேல்விடில்செய்வதென்னென்ன? நான்இன்றகிலே யிதுவானபின்பு எங்ஙனே அவைவந்து மேலிடும்படியென்கிறார்-

'உத்தமாத்மா பக்ஷஸ்து' என்கிறபடியே பிறர்- ஸர்வவிலஜாதீயனான ஸர்வேஶ்வரனுடைய, பொருளை- ஆத்மத்ரவ்யத்தை, நயவேன்- என்னதென்றுவிரும்பேன், பிறர்தானமாத்மாவை என்னது என்றிருக்கும்- கீழாரோடு- தாழ்ந்தஸம்ஸாரிகளோடு, நள்ளேன்- செறியேன், உத்தமமான ஆத்மவஸ்து ஸர்வாத்மநா ஸர்வேஶ்வரனுடையது என்றிருக்கும்- உயர்ந்தவரோடல்லால்- ஶ்ரீவைஷ்ணவர்களையொழிய, உயவேன்- ஒன்றேனுமொன்றை உசாவேன், திருமாலையல்லது- ஸர்வாதிகனான ஶ்ரிய:பதியையொழிய, புறம்பேசிலரை, தெய்வமென்று ஆஶ்ரயணீயதைவதங்களென்று வியப்பண்ணி, ஏத்தேன்-

மூ—வருமாறென் நம்மேல்வினை. (௫௪)

வினையாலடர்ப்படார் வெந்நரகிற்சேரார்* தினையேனுந்தீக்க திக்கள்செல்லார்*- நினைதற்கரியானைச்சேயானையாயிரம்பேர்ச்செ ங்கட்* கரியானைக் கைதொழுதக்கால். (௫௫)

வாய்விட்டுப்புகழேன், இவ்வாகாரங்கள் நமக்குண்டாய்த்தே யென்று - வியப்பேன் - ஆஶ்சர்யப்பட்டேன், இப்படியானபின்பு ஜந்மாந்தரஸஹஸ்ரார்ஜிதமான - நம்மேல் - நம்முடையமேலே, வினை - துஷ்க்ருதரூபமான பாபம், வருமாறு - வந்துமே லிடும்படி, என் - எங்ஙனே, திருமாலையல்லது வியவேன் - அவ னையல்லது தெய்வமென்றேத்தேன் என்னவுமாம். (௫௪)

அம்பத்தஞ்சாம்பாட்டு.

அ—இது எனக்கொருவனுக்கேயன்று, அவனை ஆஶ்ரயித்தார்க் கெல்லாம் ஒக்குங்கிடீரென்கிறார்-

நினைதற்கு - ஸங்கல்பத்தால் இவ்வளவென்று அளவிட்டுநினை க்கைக்கு, அரியானை - மிகவும் அரியனாய், [illegible] கெட்டாதபடி, சேயானை - அதிதூரஸ்தனாய், தன்னருளாலே யறிந்து அநுபவிக்கவிழிந்தார்க்கு இழிந்தவிடமெங்கும் து றையாம்படி ஸ்வரூபகுணவிக்ரஹங்களுக்கு வாசகமான - ஆயிரம் பேர் - ஆயிரந்திருநாமங்களையுடையனாய், செம் - வாத்ஸல்யஸூ சகமாய்ச் சிவந்த, கண் - திருக்கண்களையும், அதுக்குப்பகைத் தொடையான, கரியானை - கறுத்தவடிவையுமுடையனான ஸ ர்வேஶ்வரனை, கைதொழுதக்கால் - அஞ்ஜலிப்ரணாமாத்யநுவ ர்த்தநங்களைப்பண்ணி ஆஶ்ரயித்தால், வினையால் - பூர்வோ த்தராகங்களாலே, அடர்ப்படார் - நெருக்குப்படார், அ துக்கு ஹேதுவாக வரக்கடவதாய், வெம் - அதிக்ரூரமான, நர கில் - ஸம்ஸாரமாகிற நரகத்திலே, சேரார் - சென்றுகிட்டார் தினையேனும் - ஏகதேஶமும், தீக்கதிக்கள் - [illegible], செல்லார் - போகார். (௫௫)

அறுபத்தாறாம்பாட்டு.

அ—அறிவுடையாரா யிருப்பார்களாகில் [illegible] கிறார்-

மூ—காலையெழுந்துலகங்கற்பனவும், கற்றுணர்ந்த* மேலைத்தலை
மறையோர் வேட்பனவும்*- வேலைக்கணோராழியானடியேயோது
வதுமோர்ப்பனவும்* பேராழிகொண்டான் பெயர். (௬௬)
பெயருங்கருங்கடலே நோக்குமாறொண்பூ*

'கிளரொளியிளமை' என்கிறபடியே ஜ்ஞாநாநுஷ்டாநோபயோக்யமா
ன கரணபாடவமுள்ள- காலை- பால்யாவஸ்தையிலே, எழுந்
து- அறிவினோடு கூடினவராய்க்கொண்டு கிளர்ந்து, உலகம்- லோக
மடங்க, கற்பனவும்- அப்யஸிக்குமவையும், ஜ்ஞாதவ்யமான
கலை- கற்று- ஓராசார்யன்பக்கலிலே கேட்டு, உணர்ந்த- அவற்
றை அலகலகாக அறிந்திருப்பார்களாய், அத்தால்வந்த- மேலை-
மிக்கவுயர்த்தியையுடையரான, தலைமறையோர்- பரமவைதிகர்க
ளுக்கும், அறிவின்பலமாக ஸாக்ஷாத்கரிக்க- வேட்பனவும்-
ஆசைப்படுவனவும், வேலை- கரைபோடேகூடி, கண்- இடமு
டைத்தாய், ஓர்- அத்விதீயமான, ஆழியான் அடியே- கடலிலே
கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரன் திருவடிகளே, அதுக்குஸாத
நமாக- ஓதுவதும்- ஶ்ரவணம்பண்ணுவதும், ஓர்ப்பனவும்-
மநநம்பண்ணுவதும், பேர்- லக்ஷணவாசகமான பெரிய, ஆ
ழிகொண்டான்- திருவாழியையுடையனான ஸர்வேஶ்வரனுடை
ய, குணசேஷ்டிதாதிகளுக்கு வாசகமான- பெயர்- திருநாம
ங்கள், பேராழிகொண்டான்- பெரியகடல்போலே ஸம்ஸாரமா
னவடிவை யெடுத்துக்கொண்டிருக்கிறவனென்னவுமாம்; அப்
போது ஓராழியான் என்றது அத்விதீயமான திருவாழியையுடை
யவனென்றுகொள்வது. (௬௬)

அறுபத்தேழாம்பாட்டு.

அ—இப்படி அறிவில் தலைநின்றவர்கள் அவனை ஆசைப்படுகைக்
கடி அறிவுக்கு ஸஹ்யஸித்தி ஶ்ரீயபதியல்ல தில்லாமையா
லே யென்கிறார்-

(பெயரும்) காற்றுவளத்திலே கொந்தளித்துக் கிளர்க்கட
வதாய், (கரும்) பரப்பையுடைத்தான, (கடல்) கடலை, (ஆறு)
ஆறுகள், (நோக்கும்) நோக்காநிற்கும்; (ஒண்) அழகிய, (பூ)

மூ—உயருங்கதிரவனை நோக்கும்* உயிருமனையே நோக்கு
மொண்டாமரையாள்கேள்வ* னொருவனையேநோக்கு முணர்வு.
உணர்வாராருன்பெருமை யூழிதோறூழி* உணர்வாராருன்

---

தாமரைப்பூவானது, (உயரும்) உத்ஸ்வதியான, (கதிரவனை) ஸூர்யனையே, (நோக்கும்) நோக்காநிற்கும், (உயிரும்) ஸமவர்த்திரல்லாத நாட்டில் ப்ராணிகளடங்கலும், ஶரீரவிமோக்ஷாநந்தரத்தில். (தருமனையே) யமராஜாவான யமனையே, (நோக்கும்) சென்றுகிட்டாநிற்கும், இவையிவை நியதமானாப்போலே (உணர்வு) ஜ்ஞாநமானது, (ஒள்) அழகிய, (தாமரையாள்) தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடைய பெரியபிராட்டியார்க்கு, (கேள்வன்) வல்லபனை, (ஒருவனை) ஸர்வேஶ்வரனொருவனையுமே, (நோக்கும்) சென்றுபற்றாநிற்கும், ஜ்ஞாநமாகில் ஸ்ரிய:பதியைப் பற்றியல்லது நில்லாதென்கை, ஸமவ்யதிரிக்தவிஷயங்களைப் பற்றிப்பிறக்கும் ஜ்ஞாநமெல்லாம் அஜ்ஞாநகல்பம், 'தஜ்ஜ்ஞாநமஜ்ஞாந மதோந்யதுக்தம்' வித்யாந்யா ஶில்பநைபுணம்' என்னக்கடவதிறே. (௬௭)

அறுபத்தெட்டாம்பாட்டு.

அ—இப்படி அறிவுக்கு வ்யவஸாநபூமி அவனல்லது இல்லையாயிருக்க அவன்றன்மையறிவார்தான் இல்லையென்கிறார்-

(விண்ணகத்தாய்) பரமபதத்திலே மேன்மைதோற்ற வெழுந்தருளியிருக்குமவனாய், (மண்ணகத்தாய்) ஸம்ஸாரவக்ஷேதயான லீலாவிபூதியிலே நீர்மைதோற்ற வந்தவதரிக்கும் ஸ்வபாவனாய், இரண்டிடத்துக்கும் பொதுவாய்க்கொண்டு மேன்மைநீர்மைகளிரண்டும் கரைபுரளும்படி, (வேங்கடத்தாய்) திருமலையிலேவந்து நின்றருளினவனாய், (நால்வேதப் பண்ணகத்தாய்) ஸ்வரப்ரதாநமான நாலுவேதத்தாலும் உக்தமாய் வேத்யதயா ப்ரதிபாதிக்கப்படும் ஸ்வபாவனானவனே, (உன்) இப்படியிருக்கிற வுன்னுடைய, (பெருமை) மாஹாத்ம்யத்தால்வந்த பெருமையை, (ஊழிதோறூழி) காலதத்வமெல்லாங்கூடினாலும், (உணர்வாரார்) அறியவல்லாரார், அந்த

முன்னுருவந்தன்னை*- யுணர்வாரார்விண்ணகத்தாய்மண்ணகத்தாய்
வேங்கடத்தாய்* நால்வேதப்பண்ணகத்தாய் நீகிடந்தபால் (௬௮)

பாலன்றனதுருவாயேழுலகுண்டு* ஆலிலையின்மேலன்றுநீ
வளர்ந்தமெய்யென்பர்*- ஆலன்றுவேலைநீருள்ளதோவிண்ணதோ
மண்ணதோ* சோலைசூழ் குன்றெடுத்தாய்சொல்லு. (௬௯)

---

ப்ராணங்களுக்கு ஆஶ்ரயமாயிருக்கிற, (உன்னுருவந்தன்னை) உன்னுடைய திவ்யாத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைத்தான், (உணர்வாரார்) அறியவல்லாரார், (நீ) நீ, (கிடந்த) ஜகத்ரக்ஷணத்துக்காகப் பள்ளிகொண்டருளுகிற, (பால்) திருப்பாற்கடலை, (உணர்வாரார்) அறியவல்லாரார். (௬௮)

அறுபத்தொன்பதாம்பாட்டு.

அ—வேறொருவரால் அறியவொண்ணாமை கிடக்கிடீர், ஸர்வஜ்ஞனான உன்னாலேதான் உன்னையறியப்போமோ?வென்கிறார்-

ஒருகுறட்டைத்தெறித்தால் ஒருகுறட்டிலே பால்பெருகும்படி (பாலன்றனதுருவாய்) ஸௌகுமார்யமான விக்ரஹத்தையுடையனாய், (ஏழுலகு) ஸப்தலோகங்களையும், (உண்டு) திருவயிற்றிலேவைத்து ஒருபவனான (ஆலிலையின்மேல்) ஆலந்தளிரிலே, (அன்று) அந்தப்ரளயஸமயத்திலே, (நீ) ஸர்வஶக்தியானநீ, (வளர்ந்த) கண்வளர்ந்தருளினவித்தை, (மெய்யென்பர்) பரமார்த்தமென்றுகொண்டு பரமார்த்தரான ரிஷிகளடங்கலும் சொல்லாநின்றார்கள், (ஆல்) அந்தஆலானது, (அன்று) ஸர்வமும்அழிந்தவன்று, (வேலைநீருள்ளதோ) வெள்ளங்கோத்துக்கிடக்கிற ஸமுத்ரஜலத்திலேஉள்ளதோ அன்றிக்கே (விண்ணதோ) நிராலம்பநமான ஆகாஶத்திலேயுள்ளதோ, (மண்ணதோ) இல்லையாகில் ப்ரளயஜலத்திலே கரைந்துபோன பூமியிலேயுள்ளதோ ஏழுதிருநக்ஷத்ரத்திலே ஏழுநாள்ஒருபடிப்பட, (சோலைசூழ்) சோலைகளாலேசூழப்பட்ட, (குன்று) கோவர்த்தந பர்வதத்தை. (எடுத்தாய்) எடுத்துதரித்துக்கொண்டுநின்றவனே, (சொல்லு) இத்தையருளிச்செய்யவேணும் உன்னாலும் உன்படி சொல்லமுடியாதென்று கருத்து. (௬௯)

மூ—சொல்லுந்தனையுந்தொழுமின்விழுமுடம்பு* செல்லுந்தனையுந்திருமாலை*- நல்லிதழ்த்தாமத்தால்வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால்* நாமத்தா லேத்துதிரேல் நன்று. (௭௦)

நன்றுபிணிமூப்புக்கையகற்றிநான்கூழி* நின்றுநிலமுழுதும்

## எழுபதாம்பாட்டு.

அ—இப்படியானபின்பு ஜகத்திலுள்ளாரடங்கலும் அநந்யராய்க்கொண்டு அவனை ஆச்ரயியுங்கோளென்கிறார்-

(திரு) வக்ஷஸ்ஸ்தலஸ்தையான பிராட்டியோடே நித்யஸம்யுக்தனான, (மாலை) ஸர்வேச்வரனை, (விழும்) இப்போதுவிழும் இப்போதுவிழும் என்னும்படி அஸ்திரமான, (உடம்பு) சரீரமானது, (செல்லுந்தலையும்) சொல்லுமளவும், விழுமளவும், (நல்) அழகிய, (இதழ்) பூக்களாலே யுண்டான, (தாமத்தால்) திருமாலையாலும், (வேள்வியால்) யாகாதிஸத்கர்மங்களாலும், (தந்திரத்தால்) ஶாஸ்த்ரவிஹிதமான க்ரியைகளாலும், (மந்திரத்தால்) ஶ்ராவ்யமான மந்த்ரங்களாலும், (தொழுமின்) ஆச்ரயியுங்கோள், (சொல்லுந்தனையும்) இதுக்கே ஸக்தமின்றிக்கேயிருக்கில் உங்கள்வாக்கு உக்திஸாமர்த்யத்தை யுடைத்தாய்க்கொண்டு சொல்லுமளவும், (நாமத்தால்) குணாதிகளுக்கு வாசகமான திருநாமங்களாலே, (ஏத்துதிரேல்) ஸ்ரீய:பதியைப் புகழ்வுதிகோளாகில், (நன்று) அது மிகவும் நல்லது. (௭௦)

## எழுபத்தோராம்பாட்டு.

அ—நாட்டாரைக்கொண்டு காரியமென் நெஞ்சே! நீஇவ்விஷயத்தைவிடாதே கிடா யென்கிறார்-

(பிணி) கேவலாத்மாநுபவத்துக்கு விலக்கானவ்யாதி, (மூப்பு) ஜரைதொடக்கமானவற்றை, (நன்று) நன்றாக, (கையகற்றி) கைகழலவிட்டு, (நான்கூழி) இப்படி ப்ரக்ருதிவிநிர்முக்தனான ஆத்மாவை யநுபவிக்கையாகிற கைவல்யபுருஷார்த்தத்தோடே காலதத்வமுள்ளதனையும், (நின்று) நெடுகி நின்று, (நிலமுழுதும்) ஸ்ருஷ்டிதொடக்கமாக ப்ரஹ்மலோகா

மூ—ஆண்டாலும்* என்றும்விடலாழிநெஞ்சமே வேண்டினேன்கண்டாய்* அடலாழிகொண்டான்மாட் டன்பு. (எக)

அன்பாழியானை யணுகென்னும்நாவவன்றன்* பண்பாழித் தோள்பரவியேத்தென்னும்* முன்பூழிகாணானைக் காணென்னுங் கண் செவி

---

வ்யக்தமாக வுண்டான இவ்வைச்வர்யமெல்லாவற்றையும் (ஆண்டாலும்) ஸ்வாதீநமாக நிர்வஹிக்கப்பெற்றாலும், (ஆழி நெஞ்சமே) ஆழமுடையநெஞ்சே? (அடல்) யுத்தஸாதநமான (ஆழி) திருவாழியை, (கொண்டான்மாடு) திருக்கையிலே யேந்திக்கொண்டிருக்கிற, ஸர்வேச்வரன்விஷயத்திலுண்டான (அன்பு) ஸ்நேஹத்தை, (என்றும்) ஸர்வகாலத்திலும், (விடல) விடாதேகொள், (வேண்டினேன்) இவ்வேப்பங்குடிநீரைக் குடிக்கைக்கு உன்காலைப்பிடித்து வேண்டிக்கொள்ளுகிறேன் விடா யென்கிறார். (எக)

எழுபத்திரண்டாம்பாட்டு.

அ—இவர்கரணங்கள் இவர்க்குமுன்னே அங்கே ப்ரவணமாய் [illegible] மாறாடி எதிரேநின்று ஆழ்வீர் "நீர் இவ்விஷயத்தை விடாதேகிடீர்" என்று அவைதாம் தமக்குமுன்னே உபதேசிக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

அன்பென்றும் அன்புக்காச்ரயமென்றும் தெரியாதபடி (அன்பு) அன்புதானே ஒருவடிவுகொண்டாப்போலே யிருக்கிற நெஞ்சானது, (ஆழியானை) திருவாழியை யுடையனானவனை, (அணுகு) கிட்டியநுபவி? (என்னும்) என்றுஉபதேசியாநிற்கும், (நா) வாகிந்த்ரியமானது, (பண்) நீர்மையையும், (பாழி) மிடுக்கையுமுடைத்தான, (அவன்றன்) அவனுடைய, (தோள்) தோளை, (பரவி) அடைவுகெடப் பேசிக்கொண்டு, (ஏத்து) ஸ்தோத்ரம்பண்ணு, (என்னும்) என்னாநிற்கும், (கண்) கண்களானவை, முன்பூழி- நம்மபாயம் காணாதவளவன்றிக்கே ஸ்வாராயம்பண்ணின முன்புள்ளகாலத்தையும், காணானை- காணாதவனை, காண் என்னும்- கண்டநுபவியென்னும், செவி-

மூ—கேளென்னும்* பூணாரம்பூண்டான் புகழ். (எ௨)

புகழ்வாய்பழிப்பாய்நீபூந்துழாயானை* யிகழ்வாய்கருதுவா யென்னெஞ்சே*- திகழ்நீர்க்கடலுமலையு மிருவிசும்புங்காற்று* முடலு முயிரு மேற்றான். (எங)

செவிகளானவை, பூண்- ஆபரணமான திருமேனிக்கு ஆபரணமாகப்பூணப்படும், ஆரம்- ஹாரம்முதலான திவ்யாபரணங்களை, பூண்டான்- அழகுபெறப் பூண்டிருக்குமவனுடைய, புகழ்- கல்யாணகுணங்களை, கேள்என்னும்- கேளாயென்று தூண்டாநிற்கும், 'பண்புஆழித்தோள்' என்று ஸௌந்தர்யமாமான திருத்தோளென்னவுமாம். (எ௨)

எழுபத்துமூன்றாம்பாட்டு.

அ—அந்த காரணங்கள்தானும் கீழ்ப்படும்படி தாம் அவ்விஷயத்திலே ப்ரவணமானபடியை யருளிச்செய்கிறார்—

என்னெஞ்சே- நல்லது இன்னதென்று வகையிட்டறியவல்ல நெஞ்சே? நீ- இப்படி நல்லதுகாணவல்ல நீ, பூ- புகழ்ந்தல்லது நிற்கவொண்ணாதபடி அழகிய, துழாயானை- திருத்துழாயாலே அலங்க்ருதனானவனை, புகழ்வாய்- வாய்விட்டுப்புகழ்வாய், பழிப்பாய்- அன்றிக்கேபழிப்பாய், இகழ்வாய்- செய்தபடிசெய் இப்புகழ் சாக்ஷாத்விஷயத்தை அநாதரிப்பாய், கருதுவாய்- அன்றிக்கேஆதரிப்பாய், செய்தபடிசெய், திகழ்- விளங்காநின்றுள்ள, நீர்- ஜலஸம்ருத்தியையுடைத்தான, கடலும்- கடலும், மலையும்- பர்வதமும், இரு- பரப்பையுடைத்தான, விசும்பு- ஆகாசமும், காற்றும்- வாயுவும், உடலும்- தேவாதிசரீரங்களும், உயிரும்- தத்சரீரஸ்தங்களான ஆத்மவர்க்கமுமாகிற இவ்வஸ்துக்களெல்லாம், ஏற்றான்- தான்என்கிற சொல்லுக்குள்ளே ப்ரகாரமாய் அநுபவிக்கும்படி ஸர்வப்ரகாரியாயிருப்பானொருத்தன், இப்படி ஸர்வப்ரகாரியாய் நிற்கிறவனைப்பற்றிலும்பற்று, அன்றிக்கே ப்ரகாரத்தை ஒன்றைப்பற்றிலும் பற்றென்றபடி. அன்றிக்கே உடலும்உயிருமான இப்பதார்த்தங்களை, ஏற்றான்- தரித்தானென்னவுமாம். (எங)

மூ—ஏற்றான்புள்ளூர்ந்தா னெயிலெரித்தான் மார்விடந்தான்* நீற்றான்நிழல்மணிவண்ணத்தான்*— கூற்றொருபான்மங்கையான் பூமகளான் வார்சடையான் நீள்முடியான்* கங்கையான்நீள் கழலான்காப்பு. (எச)

## எழுபத்துநாலாம்பாட்டு.

அ—அவனே ஆஶ்ரயணீயனென்பானேன்? ருத்ரனை ஆஶ்ரயணீயனாகக்கொண்டாலோவென்ன; அவனும் அவனுக்கு ஶரீரபூதனாகையாலே அவனே ரக்ஷகனென்கிறார்-

(ஏற்றான்) ஸர்வஶக்தியான தனக்குச்சேரும்படி ஸுஜ்ஞானவ்ருஷபத்தை வாஹநமாகவுடையனாய், எயில்- தன்னையாஶ்ரயித்தவர்கள் குடியிருப்பான த்ரிபுரத்தை, எரித்தான்- மஞ்சாட்டமாகச் சுட்டுப்போகட்டவனாய்; நீற்றான்- த்ரையம்பகனென்றுதோற்றும்படி ஸஹோசயஸைஷ்த்த ஸர்வாங்கனாய், கூற்றொருபால்- ஶரீரத்தில் ஒருபார்ஶ்வத்திலே, மங்கையான்- பார்வதியை தரிக்குமவனாய், வார்- பாதலம்பமான தாழ்ந்த, சடையான்- ஜடையையுடையனாய், கங்கையான்- பாவநாவஹமாக ஜடாஜூடத்திலே தரிக்கப்பட்ட கங்கையையுடையனான ருத்ரன், புள்- த்ரயீமயனான பெரியதிருவடியை, ஊர்ந்தான்- வாஹநமாகவுடையனாய், மார்வு- ஆஶ்ரிதவிரோதியான ஹிரண்யன்மார்வை, இடந்தான்- பிளந்துபோகட்டவனாய், நிழல்- ப்ரஸந்நமான, மணி- நீலரத்நம் போன்ற, வண்ணத்தான்- வடிவையுடையனாய், பூமகளான்- வக்ஷஸ்நிவாஸிநியான பெரியபிராட்டியாரை திவ்யமஹிஷியாகவுடையனாய், நீள்- ஆதிராஜ்யஸூசகமான, முடியான்- திருவபிஷேகத்தை யுடையனாய், நீள்- ஸமஸ்தவிஶ்வாநயான நீண்ட, கழலான்- திருவடிகளையுடையனான ஸர்வேஶ்வரனுடைய, காப்பு- ரக்ஷையாயிருக்கும் (எச)

## எழுபத்தஞ்சாம்பாட்டு.

அ—இப்படி ஸர்வஸ்வாமிநிக்கு ரக்ஷகனானவன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு விரோதியம் விட்டுநீங்கும், நல்வழியே போகலுமாமென்கிறார்-

௭௫ — காப்புன்னையுன்னக்கழியு* மருவினைகளாப்புன்னையுன்னவ
விழ்ந்தொழியும்* - மூப்புன்னைச்சிந்திப்பார்க் கில்லைதிருமாலே
நின்னடியை வந்திப்பார் காண்பர் வழி. (எரு)

வழிநின்று

உன்னை - ஸர்வரக்ஷகனானவுன்னை, உன்ன - அநுஸந்தி
க்க, காப்பு - ஸர்வங்களுக்கு ஸாக்ஷியாக காத்துக்கொண்டி
ருக்கும்படி நீகற்பித்துவைத்த யமாதிகளான பதினாலுவஸ்துக்க
ளும், கழியும் - நமக்குஇவ்விடம் அடைவில்லையென்று விட்டு
நீங்கும், அருவினைகளாப்பு - அந்தக்காப்புக்கடியாய் அவித்யாஸ
ஹிதமான கர்மபந்தங்கள், உன்னைஉன்ன - உன்னைஅநுஸந்
திக்க, அவிழ்ந்தொழியும் - கழன்றுபோம், திரு - ஸ்ரீதார்கு
ற்றத்தை நற்றமாகக்கொண்டு ஏற்றும் பிராட்டிபக்கல், மாலே -
பெரும்பிச்சனானவனே, உன்னைச்சிந்திப்பார்க்கு - உன்னையநு
ஸந்திப்பார்க்கு, மூப்பு - ஜராதிகளான ஷட்பாவவிகாரங்களும்,
இல்லை - முதலிலேயில்லை, நின்னடியை - தேவரீர்திருவடிகளை,
வந்திப்பார் - ஆச்ரயித்திருக்குமவர்கள், வழி - போம்வழியென்
னும்படி நிரதிசயஸுகமான அர்ச்சிராதிமார்க்கத்தை, கா
ண்பர் - கண்டநுபவிக்கப்பெறுவர்கள், நல்வழியே போகப்
பெறுவர்களென்றுமாம், மூப்புன்னைச்சிந்திப்பார்க்கில்லை என்
று காப்பும் அருவினைகளும் கழிந்த அதிகாரிகளுக்குவரும்
மூப்பாவது கைவல்யமாய் அதுமுதலிலே உன்னையநுஸந்
திப்பார்க்கில்லையென்றபடி. (எரு)

எழுபத்தாறாம்பாட்டு.

அ — உன்னைத் தொழுவார் பிழைப்பாரென்று சொல்லவேணு
மோ உன்னோடு ஸம்பந்தமுடைய திருமலையாழ்வார் தம்மை
ப்பற்றினார்க்குத் தப்பாமல் ஐச்வர்யத்தைக் கொடாநின்ற பின்
னென்கிறார்.

வழி - ச்ருதிஸ்ம்ருதிஸித்தமாய் ச்ரவணமநநத்யாநா
திஸாதநாத்யவஸாயாத்மகமான ஸந்மார்க்கத்திலே, நின்
று - வழுவாமல் உறைக்கநின்று, நின்னை - ஸர்வரக்ஷகனான

மூ—னினைத்தொழுவார்* வழுவாமொழிநின்ற மூர்த்தியரேயா வர்*- பழுதொன்றும் வாராதவண்ணமே விண்கொடுக்கும்* மண்ணளந்த சீரான் திருவேங்கடம். (௭௬)

வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும்* அஃகாதபூங்கிடங் கின் நீள்கோவல்பொன்னகரும்*- நான்கிடத்தும்நின்றானிருந் தான்கிடந்தான் நடந்தானே* யென்றால்

---

ன்னை, தொழுவார்- ஆஸ்ரயிக்குமவர்கள், வழுவாமொழி- யதா ர்த்தவாதியாகையாலே ஒருநழுவுதலற்றிருக்கிற உபநிஷத் துக்களிலே, நின்ற- 'ஸநாதநவேணா ஹிநிஷ்ணுதே' என்று ப்ராப்யதயா ப்ரதிபாதிக்கப்படாநின்றுள்ள, மூர்த்தி யராவர்- ஸ்வரூபாவிர்ப்பாவத்தை யுடையராகப் பெறுவர்கள், மண் அளந்த- ப்ருதிவியை அளந்துகொண்ட, சீரான்- ஸ்ரீஸௌசீல் யஸௌலப்யாதி கல்யாணகுணங்களையுடையவனே, திருவேங்கடம்- எழுந்தருளிநிற்கிற திருமலை, பழுதொன்றும்- தன்னையாஸ்ரயி த்தார்க்கு ப்ராப்யப்ராபகங்களில் ப்ராப்திவிரோதிகளுக்கு ஒரு குறைபும், வாராதவண்ணம்- வாராதபடியாக, விண்- பரமா காஶ ஶப்தவாச்யமான பரமபதத்தை, கொடுக்கும்- கொ டாநிற்கும். (௭௬)

எழுபத்தேழாம்பாட்டு.

அ—திருமலையொன்றுமே யல்லகிடீர் உகந்தருளின தேசங்க ளடங்க இப்படியே கிடீகோளென்கிறார்-

(வேங்கடம்) திருமலையிலே, (நின்றான்) நின்றருளினான், (விண்ணகர்) வைகுந்தமாநகரிலே, (இருந்தான்) எழுந்தருளி யிருந்தான், (வெஃகா) திருவெஃகாவிலே, (கிடந்தான்) கண்வ ளர்ந்தருளினான், (அஃகாத) ஒன்றோடொன்று விஶ்லேஷியாதே செறிந்து, (பூ) அழகிதாய், (கிடங்கின்) ஜலபரிபூர்ணமா ன அகழையுடைத்தாய், (நீள்) ஸம்ருத்தியை அளவிறந்திருந்து ள்ள, (கோவல்) திருக்கோவலூராகிற, (பொன்) ஸ்ப்ருஹணீய மான, (நகர்) திவ்யநகரத்திலே, (நடந்தான்) நடந்தருளினான் (நான்கிடத்தும்) என்று இந்த நாலுதிருப்பதிகளிலும், (என்றால்)

மூ—கெடுமாமிடர். (௬௯)

இடரார்படுவாரெழுநெஞ்சே* வேழந்தொடர்வான்கொடுமு தலைசூழ்ந்த*- படமுடையபைந்நாகப்பள்ளியான் பாதமே கை தொழுதும்* கொய்ந்நாகப்பூம்போது கொண்டு. (எஅ)

---

ஆஸ்ரிதாஸ்ரிதமாக அவன் நிற்பது இருப்பது கிடப்பது நடப்பதான வ்யாபாரங்களை யநுஸந்தித்தால், (இடர்) தாங்களேசூழ்ந்துகொண்ட ஸாம்ஸாரிகதுக்கங்கள், (கெடும்) போன்வழிதெரியாதபடி தந்தாமேவிட்டோடிப்போம். (எஎ)

எழுபத்தெட்டாம்பாட்டு.

அ—அவன்நமக்காகச்செய்த செயல்களை யநுஸந்தித்தால் அவன்திருவடிகளில் அடிமையிலே யந்வயித்தல்லது நிற்கவொண்ணாதுகிடீரென்கிறார்-

(வேழம்தொடர்) ஸ்ரீகஜேந்த்ராழ்வானை வடிம்பிட்டு நலியக்கடவதாய், (வான்) அதிப்ரபலமாய், (கொடு) நெஞ்சிரக்கமில்லாதபடி அதிக்ரூரமான, (முதலை) முதலையை, (சூழ்ந்த) தப்பாதபடி சூழ்ந்து அழித்துப்போகட்டவனாய், (படமுடைய) ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதபணனாய், (பை) இடம் வலங்கொண்டு பரிமாறுகைக்குத்தக்க பரப்பை யுடையவனான (நாகம்) திருவனந்தாழ்வானை, (பள்ளியான்பாதம்) படுக்கையாகவுடையனான ஸர்வேஸ்வரன்திருவடிகளை, (கொய்) கொய்துகொள்ளவேண்டும்படி ஸஜ்ஜமாய், (பூ) ஸௌகந்த்யமான, (நாகப்போதுகொண்டு) நாகபுஷ்பங்களைக்கொண்டு, (தொழுதும்) ஆஸ்ரயிப்போம், (இடர்படுவாரார்) அவனுக்கு அடிமை செய்யாமல்கிடந்து துக்கப்பட வல்லாரார், (நெஞ்சே) நெஞ்சே? (எழு) சடக்கென எழுந்திரு. (எஅ)

எழுபத்தொன்பதாம்பாட்டு.

அ—ஆஸ்ரிதர்க்காகத் தன்னையழிய மாறிக்கார்யஞ்செய்ய எங்கேகண்டோமென்னில்? ஆஸ்ரிதனான இந்த்ரனுக்காகத் தன்னையிரப்பாளனாக்கிக் கார்யஞ்செய்திலனோ வென்கிறார்-

மூ—கொண்டானையல்லாற் கொடுத்தாரையார்பழிப்பார்* மண்
டாவெனவிரந்து மாவலியை*- யொண்டாரைநீரங்கைதோய
நிமிர்ந்திலையே* நீள்விசும்பிலாரங்கைதோய வடுத்து. (எசு)

(மண்) உன்விபூதியில் ஏகதேசமான பூமியை, (தா வென) எனக்குத்தரவேணுமென்று, (மாவலியை) மஹாபலியைச்சென்று, (இரந்து) யாசித்து, அவன்மறுக்கமாட்டாமல் 'உனக்குத்தந்தேன்' என்று யாமொசாய்க்க (ஒண்) அழகிய, (தாரைநீர்) அந்த உதகதாரையின்நீரானது, (அங்கை) கொடுத்துவளர்ந்த அழகியதிருக்கையிலே, (தோய) வந்துவிழுங்காட்டில், (நீள்) அவன் மறுநினைக்கப்படில் செய்வதென்னென்று நினைத்து பரப்பையுடைத்தன, (விசும்பிலார்) ஸ்வர்க்காதிலோகங்களில் வஸிக்கிற ப்ரஹ்மாதிகளுடைய (அங்கை) அழகியகையானது, (தோய) ஸ்பர்சித்துத் திருவடிகள் விளக்கும்படிக்கீடாக, (அடுத்து) கடுகச்சென்றுகிட்டி, (நிமிர்ந்திலையே) உதகஜலமும் திருவடிவிளக்கின ஜலமும் ஏககாலமாம்படி வளர்ந்திலையோ, (கொண்டானை) தன்னையழியமாறி ஔதார்யகுணம்பற்றாசாகத் தன்விபூதியை 'என்னது' என்று அபிமானித்திருந்தவன் குற்றம்பாராதே தானேசென்றிரந்து நீரேற்றுவாங்கிக்கொண்ட குணாதிகனானவனை, (பழிப்பாரல்லால்) வஞ்சகன் ஸர்வஸ்வாபஹாரி தனக்கவெகுதம்செய்தவனைப் பாதாளத்திலே தள்ளினவன் என்றுப்போலே பழிசொல்லுமித்தனையொழிய, (கொடுத்தாரை) கொடுத்தமஹாபலியை, (பழிப்பாரார்) பகவத்விபூத்யபஹாரி அஹங்காரக்ரஸ்தன் க்ரூரப்ரக்ருதி என்றுப்போலேயுண்டான அவன்குற்றங்களை ஆர்தான்சொல்லுவார், ஸம்ஸாரிகள் ஸ்வபாவம் குணத்தைக் குற்றமாக்கியும் குற்றத்தை குணமாக்கியும் செய்யும்படியன்றோவிருப்பதென்று வெறுக்கிறார், நீள்விசும்பிலே ஆரும்கையுஞ்சென்று ஸ்பர்சிக்கும்படி கிட்டியென்னுதல், அன்றிக்கே நீள்விசும்பிலாருடைய கைபெடுத்து சூழயிக்கும்படியாக வென்னவுமாம். (எசு)

மூ—அடுத்த கடும்பகைஞர் ஆற்றேனென்றோடிப்* படுத்த பெரும்பாழிசூழ்ந்த*- விடத்தரவைவல்லாளன் கைக்கொடுத்த மாமேனிமாயவனுக்* கல்லாதுமா வரோவாள். (அ௦)

---

எண்பதாம்பாட்டு,

அ—ஸ்ரீஹாவலிபக்கல்நின்றும் விழிவிழியைமீட்டு நோக்கினவளை வன்றிக்கே ஸ்வஸாமாந்யாபிசாரத்தோடே விரோதித்துவந்துஒருவன் ஶரணம்புக்கால் 'நஜஹ்யாம்' என்றதுக்கும் 'நத்யஜேயம்' என்றதுக்கும் விரோதம்வாராதபடி அவன்கையிலே காட்டிக்கொடுத்து அவனைக்கொண்டே நோக்குவானொருவனென்கிறார்-

(அடுத்த) பிறப்பேபிடித்து உண்டானதொன்றாகையாலே ஸ்வாபாவிகமாய். (கடும்) பேர்சொல்லவேமுடியும்படி கொடிதான, (பகைஞர்க்கு) ஶத்ருவத்தையுடையனான பெரியதிருவடிக்கு, (ஆற்றேனென்று) நேர்நின்றுபொறுக்கமாட்டேனென்று (ஓடி) பெரியவேகத்தோடே ஓடிச்சென்று, (படுத்த) அங்குத்தைக்கு ஸந்நிதிவமாம்படி விரித்த, (பெரும்பாழி) திவ்யஶயநத்தை, (சூழ்ந்த) சுற்றிக்கொண்டுகிடந்த, (விடத்து) பயத்தாலே உமிழுகிறவிஷத்தையுடைய, (அரவை) ஸந்நிதிசேர்வுகிறஸர்பத்தை, (வல்லாளன்கை) 'நஜஹ்யாம்' என்றத்தையும் 'நத்யஜேயம்' என்றத்தையும் ஒக்கநோக்குகைக்காக ஶரணாகதபரித்ராணனுக்கு ஸாமர்த்யமான மிடுக்கையுடையபெரியதிருவடிகையிலே, (கொடுத்த) கடித்தவாயாலே தீரும்படி காட்டிக்கொடுத்து ரக்ஷித்தவனைப், (மா) ஆஶ்ரிதஸம்ரக்ஷணம்பண்ணப்பெற்ற ஹர்ஷப்ரகர்ஷமடங்கலும் கிழலிட்டுத்தோற்றுகிற ஶ்யாமமான, (மேனி) திருமேனியையுடையனைப், (மாயவனுக்கல்லாது) ஆஶ்ரிதவிஷயத்தில் ஓரத்துக்கு எல்லைகாணவொண்ணாத ஆஶ்ரயஸௌலப்யமுடையனுக்கொழியவும் ஸர்வஸம்ரக்ஷணக்ஷமரல்லாத வேறு க்ஷுத்ரதெய்வங்களுக்கு, (ஆளாவரோ) அடிமையாவர்களோ. (அ௦)

மூ—ஆளமர்வென்றியடுகளத்துளஞ்ஞான்று* வாளமர்வேண்டி வரைநாட்டு*- நீளரவைச்சுற்றிக்கடைந்தான் பெயரன்றேதொன் னரகைப்* பற்றிக்கடத்தும் படை. (அக)

படையாரும்வாட்கண்ணார்பாரசிநாள்* பைம்பூந்தொடைய

## எண்பத்தோராம்பாட்டு.

அ—ப்ரயோஜநாந்தரபரர்க்கு முட்பட உடம்புநோவக் கடலைக்கடைந்து ஸாபெக்ஷிதஸம்விதாநம் பண்ணுமவன் திருநாமமேகிடீகோள் ஸம்ஸாரத்தைக்கடக்கைக்குஉபாயமென்கிறார்—

(ஆளமர்) ஆளோடாள்மிடைந்துகிடப்பதாய், (வென்றி) வென்றியையுடைத்தாய், (அடுகளத்துள்) எதிர்த்தவர்களை முடித்துவிழவிடுகிற யுத்தபூமியிலே, (அஞ்ஞான்று) அஸுரர்கள் தேவர்களைமேலிட்டு நலிகிறவன்று, (வாளமர்) அநுகூலரான தேவர்களுக்கு ஜயமுண்டாம்படி ஒளியையுடைத்தாயிருப்பதொரு யுத்தம், (வேண்டி) வேணுமென்றபெக்ஷித்து, (வரை) நீரைக்கண்டாலாழக்கடவ மந்த்ரபர்வதத்தை, (நட்டு) கடலுக்குள்ளே மத்தாகநாட்டி, (நீள்) த்ரிவிக்ரமாவஸாநமாய் ஒழுகுநீக்ஷியையுடைத்தான, (அரவை) வாஸுகியாகிற பாம்பை, (சுற்றி) கடைகயிறாகச்சுற்றி, (கடைந்தான்) மஹத்தமான கடலைக் கடைந்தருளினவனுடைய, (பெயரன்றே) திருநாமமன்றோ, (தொல்) பழையதாய்வருகிற, (நரகை) ஸம்ஸாரமாகிற நரகத்தை, (பற்றி) அள்ளியெடுத்துக்கொடுபோய், (கடத்தும் படை) கடத்திவிடும் ஸாதநம். (அக)

## எண்பத்திரண்டாம்பாட்டு.

அ—தேவர்கள் ஆஶ்ரயிக்கும்படி கடலிலேகிடந்தவளவன்றிக்கே பெண்பிறந்தாரும் ஆஶ்ரயிக்கலாம்படி திருமலையிலேவந்து ஸந்நிஹிதனானானென்கிறார்—

(படை) வேலாகிற ஆயுதத்தோடு, (ஆரும்) ஒத்திருப்பதாய், (வாள்) ஒளியையுடைத்தான, (கண்ணார்) கண்களையுடைய பெண்களானவர்கள், (பாரசிநாள்) த்வாதஶிநாளிலே, (பை) அழகிய, (பூ) பூக்களாலேதொடுக்க, (தொடையலோடு) மாலை

மூடேலோடேந்திய தூபம்* - இடையிடையின் மீன்மாயமாகுணும்
வேங்கடமேமே* லொருநாள்மான்மாயவெய்தான்வரை. (அஉ)

வரைகுடைதோள் காம்பாகவாநிரைகாத்து* ஆயர்நிரைவி
டையேழ் செற்றவாறென்னே* -

ளோடேகூட, (ஏந்தி) தரித்த, (தூபம்) தூபமானது, (இ
டையிடையில்) நடுநடுவே, (மீன்) ஓரோநக்ஷத்ரங்களையுடைத்
தான ஆகாசமானது, (மாய) மறையும்படி, (மாகூணும்) அத்
தைச்சென்று மாசேறும்படி பண்ணுகிற்கும், (வேங்கடமே)
திருமலையே, (மேலொருநாள்) முன்பொருநாளிலே, பிராட்
டிவந ஏரதம்ரத்தைக்கொண்டு (மாயமான்) மாயாமிருகம்,
முடியும்படி, (எய்தான்) எய்துவிழவிட்ட சக்ரவர்த்திதிருமகன்
வர்த்திக்கிற, (வரை) மலை. (அஉ)

எண்பத்துமூன்றும்பாட்டு.

அநாம் ஆச்ரிதவாரஸம்ராய் அவர்கள்காரியஞ் செய்வோ
மென்னுமிடம் நீர் என்கொண்டறிந்தீரென்ன? ஐயோர்கெடுவ
ர்களைப் பொடிபடுத்தும் வரிகாரமுடையநீ அத்தைவிட்டு மலை
யையெடுப்பது எறடர்ப்பதாய்த்து வெறுமனேயோவென்கிறார்-

(உரவுடைய) மிடுக்குடைத்தான, (நீர்) நீரையுடைய, (ஆ
ழியுள்) திருப்பாற்கடலிலே, (கிடந்து) கண்வளர்ந்து, (நேரா)
எதிரிட்ட, (நிசாசரர்மேல்) ராக்ஷஸஸஜாதிகளான ஐயோர்கெ
டுவர்கள்மேலே, (பேர்) அவர்கள்பொடிபடும்படி மிடுக்காய்பெ
ரிய, (ஆழிகொண்ட) திருவாழியையெடுத்துக்கொண்ட, (பிரா
ன்) உபகாரகனே, (வரைகுடையாக) இப்படி கருதுமிடம்
பொருதுகை கிற்கவல்ல வகுமுண்டாயிருக்க அத்தைவிட்டு
ஒருவரால் அபிப்பிக்கவொண்ணாத மலைகுடையாகவும், (தோள்)
திருத்தோள், (காம்பாக) அதுக்குக்காம்பாகவும், (ஆநிரை)
பசுத்திரள்களை, (காத்து) ரக்ஷித்து, நப்பின்னைப்பிராட்டியோ
ட்டை ஸம்ச்லேஷத்துக்குப் ப்ரதிபந்தகமாக (ஆயர்) இடை
யர், முன்னிட்ட (நிரைவிடையேழ்) திரண்ட ருஷபங்களேழை
யும், (செற்றவாறு) முடித்தவகாரம், (என்னே) என்னனே?

மூ—உரவுடையஙீராழியுட்கிடந்து நேரா நிசாசரர்மேல்*
பேராழிகொண்ட பிரான். (அங)

பிரானுன்பெருமை பிறரார்அறிவார்* உராயுலகளந்தநான்று*
வராகத்தெயிற்றளவுபோதாவா றென்கொலோ* எந்தையடிக்களவு போந்தபடி. (அச)

---

இத்தால் ஆச்ரிதவிரோதியுண்டானாலும் ஃன்னலங்கழுத்தாலன்றிக்கே உடம்புநோவக் காயக்லேசஞ்செய்யும் ஸ்வாமினன்றோ நீ யென்றபடி. (அங)

எண்பத்துநாலாம்பாட்டு.

அ—உன்னுடைய ரக்ஷகத்தளவல்லாத ரக்ஷகத்வப்பரிப்பு ஒருவரால் பரிச்சேதிக்கலாயிருந்ததோ வென்கிறார்—

பிரான்— உபகாரகனே? உராய்- எங்குமொக்கஸஞ்சரித்துக்கொண்டு, உலகளந்நான்று- நீ லோகத்தையளந்துகொண்டவன்று, எந்தை- என்ஸ்வாமியான வுன்னுடைய, அடிக்களவுபோந்த- திருவடிகளுக்கு அளவுபோந்த, படி- ஸ்ருஷ்டியானது, வராகம்- வராஹாவதாரியான வுன்னுடைய, எயிற்றளவு- திருவெயிற்றில் ஏகதேசத்தளவும், போதாவாறு- போதாததாயிருக்கிற ப்ரகாரம், என்கொலோ- எங்ஙனேயோ, உன்பெருமை- ஆனபின்பு ஸர்வஸ்வாமியான உன்னுடைய பெருமையை, பிறர்ஆர்அறிவார்- ஸர்வஜ்ஞனான நீ அறிவுதியோ அறியாயோ வென்று ஸந்தேஹிக்குமத்தனைபோக்கி வேறுசிலர் ஆர்தான் அறிவார், உராய்உலகளந்த- உலாவிக்கொண்டு உலகளந்தவென்றபடி, 'ஸமயோஸ்மஹே:' என்னக்கடவதிறே; அன்றிக்கே உரோசிக்கொண்டு உலகளந்தவென்றாக்கி எல்லாரோடும் தீண்டிக்கொண்டென்றுமாம். (அச)

எண்பத்தஞ்சாம்பாட்டு.

அ—ஐஞ்த்ரியஜயம்பண்ணி அவனை ஆச்ரயிக்கிறநீதான் அவன் படிகளிலேயொன்றைக் கண்டநுபவிக்கப்பெற்றாயோ பெற்றாயாகில் சொல்லாய்? சொல்லிக்கா ணென்கிறார்—

மூ — படிகண்டறிதியே பாம்பணையினான்* புட்கொடிகண்டறி
யேகூறாய்* - வடிவிற்பொறியைந்து முள்ளடக்கிப் போதொ
நீரந்தி* நெறிநின்றநெஞ்சமே நீ. (அ

நீயுந்திருமகளும்நின்றாயாற்* குன்றெடுத்துப்பாயும்பனிமறு

நெஞ்சமே - நெஞ்சே! பொறியைந்தும் - ஶ்ரோத்ராதிகளுமான இந்த்ரியங்களைத்தையும், வடிவில்உள்அடக்கி - பாஹ்யவிஷயங்களில் போகாதபடி ஶரீரத்துக்குள்ளே நியமித்து, போதொடு - ஆஶ்ரயணோபகரணங்களான புஷ்பங்களோடே கூட, நீரந்தி - ஜலத்தையபரித்துக்கொண்டு, நெறி - ஸமாஶ்ரயணமார்க்கத்திலே, நின்றநீ - நிலைநின்று ஆஶ்ரயித்தாயாயிருக்கிற நீ, பாம்பணையினான் - திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையனான ஸர்வேஶ்வரனுடைய, புள்கொடிகண்டு - உயரத்திலே ஆஶ்ரிதர்கண்டுவாழும்படி எடுத்துக்கொண்டு வருகிற பெரியதிருவடியாகிற த்வஜத்தைக்கண்டு, அறிதியே - அநுபவித்தறிவுதியோ, படிகண்டு - அவன்திருமேனியைக்கண்டு, அறிதியே - அநுபவித்தறிவுதியோ, கூறாய் - அவன் திருவனந்தாழ்வானுக்கு உடம்புகொடுக்கும்படிதான் கண்டறிவுதியோ இவற்றிலே இன்னதுகண்டேனென்று ஒன்றைச் சொல்லிக்காணாய், வடிவில்லாத பொறியைந்துமென்றுமாம், ஒருவழிப்பட்டிருக்கையன்றிக்கே பலமுகாவலம்பிகளையுடைத்தாயிருக்குமென்கை, வடிவில்லாமையாவது தெரியாதபடி யிருக்கையென்றுமாம், கண்டநுபவிக்கப் பெறுவதுக்குமுன்னே ஜ்ஞாநஸாதநங்கொண்டு த்ருப்திபிறந்திருக்கவொண்ணாதுகாணென்றபடி. (அரு)

எண்பத்தாறும்பாட்டு.

அ — இப்படியிவர் தந்திருவுள்ளத்தைக்குறித்து அவனைஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கப்பெற்றிலையிறே, என்று சொன்னது பொறுக்கமாட்டாமல் இவரிருந்தவிடத்திலே பிராட்டியுந் தானுமாகவந்து நெருக்க அத்தைக்கண்டநுபவிக்கிறார் -

குன்றுஎடுத்து - கண்டதொருமலையைப் பிடுங்கியெடுத்து, பாயும் - மேலேவந்துசொரிகிற, பனி - மஞ்ஞையை, மறுக்க-

மூ—பண்பாளா*- வாசற்கடைகழியாவுட்புகாகாமரு
பூங்கோவ* லிடைகழியேபற்றி யினி. (அ௬)

இனியார்புகுவா ரெழுநரகவாசல்* முனியாதுமூரித்தாள்
கோமின்*- கனிசாயக்கன்றெறிந் ததோளான்கனைகழலேகாண்
பதற்கு* நன்கறிந்தநாவலஞ் சூழ்நாடு. (அ௭)

---

பரிஹரித்த, பண்பாளா - நீர்மையையுடையவனே, வாசற்கடை-
திருவாசலுக்குப்புறம்பு, கழியா - போகமாட்டாதே, உட்புகா-
உள்ளேபுகமாட்டாதே, காமர் - ஸ்ப்ருஹணீயமாய், பூ - அழகிய
தான, கோவல்இடைகழியேபற்றி - திருக்கோவலூரிடைகழியைப்
பற்றி, நீயும் - ஆஶ்ரிதரக்ஷணத்தில் முற்பாடனானநீயும், திரு
மகளும் - உன்னிலும்முற்பட்ட திருமகளாருமாக, எங்களோடே
கலக்கப்பெற்ற வுகப்பின் மறத்தாலே பாந்தகரல்பாவி இனி -
இப்போது, நின்றாய் - பரிந்துநின்றாயே யென்று அநுஸந்
திக்கிறார். (அ௬)

எண்பத்தேழாம்பாட்டு.

அ—இப்படி ஸர்வேஶ்வரன்வந்து ஸந்நிஹிதனானபின்பு நர
கத்துக்கு ஆளில்லையாது அவ்வவ்விடங்களுக்குக்கடவார் வாச
ல்களையடைத்து ஓடிப்போகவமையுமென்கிறார் -

கனி - கன்றும்விளவும் இரண்டஸுரர் தன்னைநலி
கைக்கு இடம்பார்த்துநிற்க அத்தையறிந்துமுள்ளிட்டு முன்னே
க்கனவர்களைப்போலே அஸுராவிஷ்டமான விளவின்பழங்கள்,
சாய - உதிர்ந்துவிழும்படியாக, கன்று - அஸுராவிஷ்டமான
கன்றை, எறிந்த - எறிதடியாக எடுத்தெறிந்து இரண்டையும்
முடித்துப்பொகட்ட, தோளான் - திருத்தோள்களையுடையனான
ஸர்வேஶ்வரனுடைய, கனைகழல் - ஆபரணத்வநியையுடைத்தா
னதிருவடிகளை, காண்பதற்கு - கண்டநுபவிக்கைக்கு ஸர்
வரும், நாவல் - நாவலோடேகூடி, சூழ் - பரந்துநிற்கிற, நாடு -
நாட்டிலுள்ளப்ராணிகளானவை, நன்கு அறிந்த - அவன் உகந்து
வஸிக்கிற திருக்கோவலூருக்குத் தோள்திண்டியான ரூபத்தி
ல்வாசலேயென்று நன்றாகஅறிந்தன; இப்படியானபின்பு எழு-

மூ—நாடிலும்நின்னடியேநாடுவன்* நாடோறும்பாடிலும்நின்புகழேபாடுவன்*- சூடிலும்பொன்னாழியேந்தினான்பொன்னடியே சூடுவேற்கு*

---

ஸ்துவியமான், நரகவாசல்- நரகத்வாரங்களில், இனிப்புகுவார் ஆர்- இனிப்போய் ப்ரவேசிக்கக்கடவார் ஆர்; முனியாது- எங்கள் வசத்துக்கு அறிவாம்படி இப்படி வார்த்தைசொல்லுவதே என்று பொடியாதே, மூரித்தாள்கோமின்- இனியொருக்காலும் திறக்கவொண்ணாதபடி பெரியதாளைப்பூட்டுங்கோள், ஆழ்வார்களும் அருளிச்செயல்களும் நடையாடுமிடமோநாடு அல்லாதவிடம் காடென்றுகருத்து, எழுநரகம்- எழுகிறஸம்ஸாரிகளடங்கலும் சென்றுபுகுகிற நரகத்வாரமென்றுமாம், கீர்த்தியையுடைத்தான நரகமென்னவுமாம். (அஎ)

எண்பத்தெட்டாம்பாட்டு.

அ—இப்படி திருக்கோவலூரோடு தோள்தீண்டியான நாட்டைப் பற்றியிருந்து இவ்விஷயத்தை விட்டுப்புறம்பே சுதந்த்ரராய் த்திரியக்கணடபடியாலே வழிபறிக்குமிலத்தில் தம்மைபொருள்கொண்டு தப்பினார் உகக்குமாப்போலே என்னுடைய கரணத்ரயத்தையுங்கொண்டு நான்முன்னம் அங்கே ப்ரவணனாகப் பெற்றேனென்று ஸந்தோஷத்தைப்பேசி இனியராகிறார்—

(நாடிலும்) நெஞ்சைக்கொண்டு தேடுமிடத்திலும், (நின் அடியே) தேவரீருடைய திருவடிகளையே, (நாடுவன்) தேடாநிற்பன், நாடோறும்- ஸர்வகாலத்திலும், (பாடிலும்) ஸ்ரீதிவ்யவசனத்தை ஸாதரம்பண்ணுமிடத்திலும், (நின்புகழே) தேவரீருடைய கல்யாணகுணங்களையே, (பாடுவன்) வாய்விட்டுப்பாடாநிற்பன், (சூடிலும்) நானென்தலையாலே ஸாதரமாக தரிக்குமிடத்திலும், (பொன்) ஸ்ப்ருஹணீயமான, (ஆழி) திருவாழியை, (ஏந்தினான்) அழகுபெறதரித்த ஸர்வேச்வரனான வுன்னுடைய, (பொன் அடியே) அழகிய திருவடிகளையே, (சூடுவேற்கு) ப்ரீதிபூர்வகமாக தரிக்கக்கடவேனாய், (எனக்கு) இப்படி கரணத்ரயத்தாலுமுள்ள ப்ரயோஜநம் கொள்ளப்பெ

மூ—என்னுகிலென்னே பெனக்கு. (அஅ)

எனக்காவாராரொருவரே* யெம்பெருமான்தனக்காவான் தானேமற்றல்லால்*- புனக்காயாம்பூமேனிகாணப்பொதியவிழும் பூவைப்பூ* மாமேனிகாட்டும் வரம். (அகூ)

ற்றவெனக்கு, (என்னுகிலென்) எதானுல் நல்லது? நாட்டார் அறிந்து இந்தஸாஹத்தைப்பெற்றிலென்? இழக்கிலென்? எனக்கு எதானுல் நல்லதென்றபடி. அன்றிக்கே இங்கேயிருக்கிலென் அங்கே போகிலென் எதானுல் எனக்குநல்லதென்றுமாம். (அஅ)

எண்பத்தொன்பதாம்பாட்டு.

அ—கீழ்ப்பிறந்தஸாஹம் திரியட்டும் பின்னுட்டுகிறபடியைச்சொல்லுகிறார்-

(எனக்கு) நிஷேதகமாக இப்பேற்றைப்பெற்று ஸெஷமே வடிவாயிருக்கிறவெனக்கு, (ஆவார்) ஒப்பாகவல்லார், (ஆரொருவரே) வேறொருவருண்டோ, (எம்பெருமான்) நாட்டில் ஓரொப்பில்லாதவளவன்றிக்கே தான் தோன்றியானபேற்றைபுடையனுய் ஸெஷஸாஸத்துக்கு இட்டுப்பிறவாத ஸவெஷ்வரன், (தானே) தானே, (தனக்கு) தனக்கு, (ஆவானல்லால்) ஒப்பாமித்தனையொழிய எனக்கு ஒப்பாகவல்லனு, (புனம்) இந்த ஜ்ஞாநஸாஸாத்துமேயாய் ஸாக்ஷாக்கரிக்கப்பெருத குறைகிடக்கிறதேயென்று ஸங்கிக்க இடமறும்படி தன்னிலத்திலேநின்று செவ்விபெற்ற, (காயாம்பூமேனி) காயாம்பூவினுடையநிறமும், (காண) காணக்காண, (பொதியவிழும்) கட்டுநெகிழ்ந்துவருகிற, (பூவைப்பூமேனி) பூவைப்பூவினுடையநிறமும், (மா) அவனுடையஸ்ராவ்யமான, (மேனி) வடிவை, (வரம்) அழகிதாக, (காட்டும்) காட்டாநின்றது, (வரம்) வரிஷ்டமாக, அழகிதாகவென்றபடி. அன்றிக்கே 'வீ்யதஜ திவாஃ என்றும் என்னுலே வ்யாயிக்கப்படுகிறவடிவை அழகிதாகக் காட்டாநிற்குமென்னுதல். (அகூ)

தொண்ணூறாம்பாட்டு.

—போஷியைக்காட்டித் தம்மையரிப்பித்த வடிஸம்மக்கிலே

மூ—வரத்தால்வலிநினைந்துமாதவநின்பாதம்* சிரத்தால்வணங் காணென்றே*- உரத்தினாலீரரியாய் நேர்வலியோனாயவிரணி யனை* ஓரரியாய்நீயிடந்ததூன். (௯௰)

ஊனக்குரம்பையினுட்புக்கிருள்நீக்கி* ஞானச்சுடர்கொளீஇ

---

ப்ரஹ்மாதிகளுக்கு விரோதியைப்போக்கித் தன்னைக்காட்டி யாரி யிப்பித்தபடியை யருளிச்செய்கிறார்-

(மாதவ) ஸர்வர்க்கும் ஆஶ்ரயிக்கலாம்படியிருக்கிற ஸ்ரிய:பதியானவனே? (ஈர்) இரண்டுகூறாகக் கிழித்துப்போகப்படும் (அரியாய்) ஶத்ருவாய், (நேர்) நேர்நிற்கவல்ல, (வலியோனாய) பலத்தையுடைய, (இரணியனை) ஹிரண்யனை, (ஓர்) நாட்டில் கண்டறியாத அத்விதீயமான, (அரியாய்) ந்ருஸிம்ஹமாய்க்கொண்டு, (உரத்தினால்) அவன்மிடுக்கும் கீழ்ப்படும்படியான மிடுக்காலே, (ஊன்) ஸாவயவமான பெரியஶரீரத்தை, (நீ) ஆஶ்ரிதவத்ஸலனான நீ, (இடந்தது) இடந்துபோகட்டது, (வரத்தால்) ப்ரஹ்மாதிகள்கொடுத்த வரத்தால்வந்த, (வலிநினைந்து) தன்மிடுக்கைக் கணக்கநினைத்து, (நின்பாதம்) ஸர்வாதிகனான வுன்னுடையதிருவடிகளை, (சிரத்தால்) தலையாலே, (வணங்காணும் என்றே) வணங்கி ஆஶ்ரயியாதேயிருந்தான் என்றோ, அன்றிறே இறுக்கனைப் பலக்கறுவி நலிந்தானென்னு மிது கொண்டன்றோ யென்றபடி. (௯௰)

தொண்ணூற்றொராம்பாட்டு.

அ—ஸர்வேஶ்வரன் ஸர்வாபேக்ஷிதப்ரதனேயாகிலும் இதர விஷயங்களில் ராகமற்று அவனையாஶ்ரயித்தார்க்கல்லது வைராக்யப்ராப்தி யரிதென்கிறார்-

(ஊன) அகவாயில் தோஷம்தோற்றுதபடி ஸாவயம்செறித்துமேலெழ மினுங்கித்தோற்றுகிற, (குரம்பையில்) ஶரீரமாகிற குடியிலே, (உள்புக்கு) அதில்தோஷமுள்ள எல்லையளவுஞ்செல்ல உள்ளுறவவகாஹிபது, (இருள்நீக்கி) அத்தை மோஹ்யமென்றிருக்கிற அஜ்ஞானமாகிற விருளைப்போக்கி, (ஞானச்சுடர் கொளீஇ) ஜீவபராயாதார்த்யத்தை விஷயீகரித்திருக்கும் ஜ்ஞாந

மூ—நாடோறும்*- ஏனத்துருவாயுலகிடந்த வூழியான் பாதம்*
மருவாதார்க்குண்டாமோ வான். (௯௧)

வானாகித்தீயாய் மறிகடலாய் மாருதமாய்த்*
தேனாகிப்பாலாந்திருமாலே*- ஆனாய்ச்சிவெண்ணெய்

---

மாகிற விளக்கையேற்றி, (ஏனத்துருவாய்) தன்னுருக்கெடுத்து நீருக்கும் சேற்றுக்கும் இருபாத வராஹரூபத்தையுடையனாய்க்கொண்டு, (உலகுஇடந்த) லோகத்தை இடந்தெடுத்துக் கொண்டேறினவனாய், (ஊழியான்பாதம்) இவையழிந்துகிடந்த ஸம்ஹாரகாலத்திலும் தன்மேலே யேறிட்டுக்கொண்டு நோக்கும்ஸ்வபாவனானவனுடைய திருவடிகளை, (நாடோறும்மருவாதார்க்கு) நாள்தோறும் பொருந்தி ஆச்ரயியாதார்க்கு, (வான் உண்டாமோ) பரமாகாச சப்தவாச்யமான பரமபதம் உண்டாமோ. (௯௧)

தொண்ணூற்றிரண்டாம்பாட்டு.

அ—இப்படி ஆச்ரிதரை ரக்ஷிக்குமளவன்றிக்கே ஸ்வாபாவஸம்ஸ்காரனை பரீக்ஷிக்குப்போராதபடி ஆச்ரிதர்தொட்டளைந்த த்ரவ்யத்தைத் தனக்கு தாரகமாக விரும்பியிருக்குமென்கிறார்-

(வானாகித்தீயாய் மறிகடலாய்மாருதமாய்) ஆகாசமும் அக்நியும் அலையெறிகிற கடல் காற்றுமுதலான பூதங்களாலேசமைந்த ஸம்ஸாரவர்த்தி சேதநர்களுக்கு நிர்வாஹகனாய், (தேனாகிப்பாலாம்) பரமபதவாஸிகளுக்கு ஸர்வரஸமயமான தேன் ஸ்வாதுவான பால் இவைபோலே நிரதிசயபோக்யனாய்க்கொண்டு இருக்குமவனாய், (திருமாலே) இந்த உபயவிபூதியோகத்துக்கு மேலே ஸ்ரீய:பதித்வத்தால் வந்த ஐச்வர்யத்தையுமுடையவனே, (முன்னொருநாள்) பண்டொருநாளிலே, (மண்ணை) ப்ரளயத்திலழியாதபடி பூமியை யடங்கவெடுத்துவிழுங்கி, (உமிழ்ந்த) உள்ளுக்கிடந்து தளராதபடி வெளிநாடுகாணவுமிழ்ந்த, (வயிறு) உன்னுடைய வயிறானது, (ஆன்ஆய்ச்சி) பசுமேய்க்கும்குடியிலேபிறந்த யசோதைப்பிராட்டி, (வெண்ணெய்) கடைந்துவைத்த முடைநாற்றம்

மூ—விழுங்கநிறைபுமே* முன்னொருநாள் மண்ணையுமிழ்ந்தவயிறு,
வயிறழலவாளுருவிவந்தானையஞ்ச* எயிறிலகவாய்மடித்த
தென்னீ*. பொறியுகிராற்பூவடிவையீடழித்த பொன்னாழிக்கை
யா* நின்சேவடிமேலீடழியச் செற்று. (கூ௩)

குன்றாத வெண்ணெயை, (விழுங்க) சுஹிநிவெபாத்தோடே அமு
துசெய்தருள, (நிறைபுமே) அத்தாலேநிறையுமோ, குறைக்கும்
இட்டு அடைக்கவேணுமென்றுகருத்து. (கூ௨)

தொண்ணூற்றுமூன்றும்பாட்டு.

அ—'ஓரரியாய்நீயிடந்து' என்றுநம்மை சூஷ்ரீதவகூஷவாதியாக
க்கீழேசொன்னீர் அது நீரறிந்தபடி யென்னென்ன? ஹிரண்யன்
மேல்பண்ணின சீற்றங்கொண்டறிந்தேனென்கிறார்.

(பூவடிவை) ஸௌகுமார்யம் அழகுமுதலான ஸ்வபாவத்
தாலே பூவைப்பூவினுடைய வடிவழகை, (ஈடழித்த) தலையழித்
திருப்பதாய், (பொன்) ஸ்பூஹணீயமான, (ஆழிக்கையா) திரு
வாழியையரித்த திருக்கையையுடையவனே (வயிறழல) கண்
டசுநாக்களெல்லாம் 'என்னைத்தேடுகிறதோ' வென்று வயிறெரியும்படி
(வாள்உருவி) வாளை உருவிப்பிடித்துக்கொண்டு, (வந்தானை)
வந்தஹிரண்யனை, (அஞ்ச) உன் உக்ரவெஷங்கண்டு அவன்ப
யப்படும்படியாக, (நின்) பிராட்டிமார் பள்ளிகொண்டருளும்
உன்னுடைய, (சேவடிமேல்) சிவந்த திருவடிகளின்மே லேறி
ட்டு, (பொறி) நாநாவர்ணமான, (உகிரால்) அழகிய திருவுகி
ர்களாலே, (ஈடழிய செற்று) கட்டுக்குலைந்து சிதறிப்போம்படி
முடித்து, (எயிறு) பின்னையும் சீற்றம்மாறாமையாலே திருஎயி
றுகளானவை, (இலக) விளங்கும்படிக்கீடாக, (நீ) நீ, (வாய்ம
டித்துஎன்) நாப்பிடிக்கொண்டதுஎன்? 'பூவடிவையீடழித்தபொ
ன்னாழிக்கையால்' என்று வாமொய்த்தாகில் வாஷத்திலும்
காட்டில் ஸௌகுமாரமாய் ஸ்பூஹணீயமான திருவாழியையு
டைத்தான திருக்கைகளாலே அழகிய திருவுகிராலே சுநா
க்களை வைத்துக்கொள்ளுகைக்கு யோக்யமான திருவடிகளி
லே அவனைவைத்துக்கொண்டு என்றுபொருளாகக்கடவது(கூ௩)

மூ—செற்றெழுந்து தீவிழித்துச் சென்றவிந்தவேழுலகு* மற்றி
வையாமென்றுவாயங்காந்து*- முற்றும்மறையவர்க்குக்காட்டிய
மாயவனையல்லால்* இறையேனு மேத்தாதென்னா* (கூச)

தொண்ணூற்றுநாலாம்பாட்டு.

அ—தன்னையாஶ்ரயித்தார்க்குத் தன்படிகளெல்லாவற்றையுங் காட்டும் ஸுஶீலனானவனையல்லது என்னாவானது வேறொருவரை ஏத்தாதென்கிறார்.

எழுந்து- அதிப்ரவ்ருத்தமான விவற்றை யழிக்கடவதாகப் பெரியஉத்ஸாஹத்தோடே கிளர்ந்து, தீவிழித்து- அகவாயில்சீற்றந்தோற்ற நெருப்பெழப்பார்த்து, செற்று- அழித்துப் பொகட்டு, சென்ற- தன்பக்கலிலே உபஸம்ஹ்ருதமாய்வந்து சேர்ந்துகிடக்கிற, இந்தவேழுலகம்- இந்தஸப்தலோகங்களையும், செற்று- அழித்துப்பொகட்டு, மற்று- அதுக்குமேலே, இவையாமென்று- அழிந்துபோன வஸ்துக்கள் இவைகாணென்று, வாய் அங்காந்து- தன்திருப்பவளத்தைத் திறந்து, முற்றும்- 'தத்ஸர்வம் ஸசராசரம்' என்னும்படி ஸகலஜகத்தையும், மறையவற்கு- வைதிகனான மார்க்கண்டேயனுக்கு, காட்டிய- முன்பிறந்திட்ட கட்டளையிலே காட்டின, மாயவனையல்லால்- ஆஶ்சர்யசக்தியுக்தனானவனையொழிய, என் நா- ஏத்தப்பெறாமல் உருவிக்கிடக்கிற என்நாவானது, இறையேனும்- ப்ரஹ்மாதிகளான ஸர்வஜ்ஞர்களில் ஏகதேசமும், ஏத்தாது- ஸ்தோத்ரம்பண்ணாது; அன்றிக்கே பாரதஸமரத்திலே பீஷ்மாதிகளுக்கு விஶ்வரூபம் காட்டினபடியை இப்பாட்டிலே சொல்லுகிறதாகவுமாம், அப்போது கிளர்ந்து நெருப்பெழப்பார்த்து ஸம்ஹரித்துச்செல்லுகிற இந்த ஸகலலோகங்களையும் 'வக்த்ராணி தே த்வரமாணா விஶந்தி' என்கிறபடியே தன்னுடைய கோவாஸ்யாலே ஜ்வலித்துக்கிளருகிற திருப்பவளத்திலேவிழுந்து நஶித்துப்போகிறபடியை வைதிகரான பீஷ்மாதிகளுக்குக்காட்டின ஆஶ்சர்யபூதனையொழிய என் நா ஏத்தாது என்று பொருளாகக்கடவது. பீஷ்மாதிகள் விஷயமான

மூ—நாவாயி லுண்டே நமோநாரணவென்று* ஓவா துரைக்கு முரையுண்டே* மூவாத மாக்கதிக்கட் செல்லும்வகையுண்டே* என்னொருவர் தீக்கதிக்கட் செல்லுந்திறம். (கூரு)

திறம்பாதென்னெஞ்சமே செங்கண்மால் கண்டாய்* அறம்பாவமென்றிரண்டு

போது 'மறைபவர்க்கு' என்கிற விதுலெஸம்ஹாரத்யாகக்கடவது; ஊகஸம்யவிஷயமானபோது னகரவொற்றாகக்கடவது (கூச)

தொண்ணூற்றஞ்சாம்பாட்டு.

அ—இப்படி அவனை யேத்துகைக்கு பரிகரமான நாவைக் கொண்டு அவனையேத்தாதே வைதர்த்தத்தை ஸம்ஸாரிக்கைக்கு பரிகரமாக்கிக்கொண்டபடி எங்ஙனே! யென்று சுஷ்டிய ப்படுகிறார்.

நா— ஏத்துகைக்கு பரிகரமானநாவானது, வாயில்உண்டே. புறம்புபோய்த் தேடவேண்டாதபடி தந்தாம்வாயிலே உண்டே, ஓவாது - ஸஹஸ்ராக்ஷரீ ஸாமாந்ரம்போலே நெடுகவிருந்துசொன்னாலும் முடிவுகாணவொண்ணாதபடி யிருக்கையன்றிக்கே, நமோநாரணவென்று- நமோநாராயணாயவென்று, உரைக்கும் ஒருக்காலேசொல்லி இளைப்பாறலாம்படியான, உரை- திருமந்த்ரம். உண்டே- உளதாயிராநின்றதே, மூவாத- அவிநாஶியாய், மா- பரமபுருஷார்த்தமான, கதிக்கண்- மோக்ஷத்திலே, செல்லும்- செல்லுகைக்கீடான, வகையுண்டே- உபாயமுண்டே, தீக்கதிக்கண்- இப்படி உஜ்ஜீவநத்துக்கடலான நல்வழிபோகாமல் விநாஶத்துக்கீடான ஸம்ஸாரமார்க்கத்திலேசென்று, ஒருவர்செல்லும்வகை- ஒருவர்விழுகிறபிரகாரம், என்- என்னையிருக்கிறதோ! வென்று விஸ்மயப்படுகிறார். (கூரு)

தொண்ணூற்றாறாம்பாட்டு.

அ—ஆளிகர்செய்தபடிசெய் நெஞ்சே? நீமுந்துறமுன்னம் நான் சொல்லுகிறவித்தை அழகிதாக பரிஸீபண்ணென்கிறார்.

என் எனக்குஸஹ்யமான, நெஞ்சமே- நெஞ்சே? அறம்பாவம் என்று- புண்யம்பாபமென்று சொல்லப்படுகிற; இரண்டுக்

று—மாவான்*— புறந்தானிம்மண்தான் மறிகடல்தான் மாருதந்
தான்* வான்தானேகண்டாய் கடைக்கட்பிடி. (௬௬)

பிடிசேர்களிறளித்த பேராளா* உன்றனடிசேர்ந்தருள்பெற்
றாளன்றே*- பொடிசேரனற்கங்கையேற்றா னவிர்சடைமேற்பாய்
ந்த* புனற்கங்கையென்னும் பெயர்ப்பொன். (௬௭)

---

இரண்டுக்கும், ஆவான்- நிர்வாஹகனைப் போருகிறவன்
செங்கண்- புண்டரீகாக்ஷனை, மால்கண்டாய்- ஸர்வேச்வர
ன்தானேகிடாய், இம்மண்தான்- இந்தப்ருதிவியும், மறி- அலை
யெறிகிற, கடல்தான்- கடலும், மாருதந்தான்- வாயுவும்,
வான்- ஆகாசமும், புறந்தான்- இவற்றுக்குப்புறம்பான மஹ
தாதிகளுமான, இவற்றுக்கெல்லாம் நிர்வாஹகனாயிருக்கின்
றான் தானேகண்டாய்- அந்த புண்டரீகாக்ஷன்றானே கிடாய்,
கடைக்கண்- முடிவில்வந்தால், பிடி- இதுவேஸத்யமென்று
இத்தைத்தவறுதபடி ஹ்ருதயத்திலே பிடித்துக்கொள். (௬௬)

எழுபத்தேழாம்பாட்டு.

அ—அறமும் அவனேயென்று பாவநமாகச் சொல்லாநின்றீர்,
கங்கைதொடக்கமானவையும் பாவநமன்றோ? வென்ன; அ
தினுடைய பாவநத்வமும் தன்னுடைய ஸம்பந்தாயத்தமெ
ன்கிறார்-

பிடி- ஸஹிதமறியாதே பிடியின்பக்கலிலே ப்ரவணமா
ய், சேர்- அத்தைவிட்டு நீங்கமாட்டாமல் கூடிவர்த்திக்கிற, க
ளிறு- ஆனையை, அளித்த- அதின்வ்ருத்ததோஷம்பார்த்திகழாதே
தண்ணளிபண்ணிரக்ஷித்த, பேராளா- மஹாப்ரபாவனானவனே!
பொடிசேர்- 'ஸ்மசாநபஸ்மலேபந:' என்கிறபடியே பண்ணின
தோஷத்துக்குப் ப்ராயச்சித்தமாக எப்போதும் ஸ்மசாநத்திலேசா
யுமவனாய், அனல்- அக்நிக்கு, அங்கை- அழகியகையை, ஏற்
றான்- ஏற்றவனாகிய ருத்ரனுடைய, அவிர்சடைமேல்-
ஒளியையுடைத்தான ஜடையின்மேலே, பாய்ந்த- த்வரையோ
டேமாக வந்துகுதித்த, புனல்- நீரையுடையளாய், கங்கை
யென்னும்பெயர்- கங்கையென்னும் பேரையுடைய, பொன்-

௬௮—பொன்திகழுமேனிப்புரிசடையம்புண்ணியனும்* நின்றுலகந்தாயநெடுமாலும்*— என்றும் இருவரங்கத்தால் திரிவரேலு மொருவன்* ஒருவனங்கத்தென்று முளன். (௬௮)

ஸர்வஸ்வாமியான ஸ்ரீயபதியானவன்; உன்பாதம்- பாதகிகளையும் பரிஹரிக்கும் ஸுத்தியையுடையனான உன்திருவடிகளை சேர்ந்தன்றே- கிட்டியன்றோ, அருள்பெற்றான்- அவன் அந்த பாபமெல்லாம் பெற்றது, விஷயபாவனமான கங்கையை ரக்ஷிக்கையாலே பாபம் இவனிட்ட வழக்கென்றும் மஹிமையினுடையபாவநத்வம் தந்ஸம்பந்தமாய்த்து மென்கையாலே ப்ராஹ்மண்யம் அவனிட்டவழக்கென்றும் சொல்லிற்றாய்த்து. (௬௭)

தொண்ணூற்றெட்டாம்பாட்டு.

அ—அவன் திருவடியில் பிறந்த மஹிமையை ஜடையிலேயரித்தானென்று ருத்ரனுக்குக் குறைசொல்லுகிறதென்? அவனும்ஒருகாலத்திலே கபிகரித்து ஸம்ஹாரனுமாயன்றோ போருகிறதென்னில்? அவனுடைய ஸம்ஹாரமும் இவனுக்கு ஶரீரமாகுதலாலே வந்ததித்தனை போக்கி ஸ்வதஃ இல்லையென்கிறார்.

(பொன்திகழும்) பொன்போலே ஒளிவிடுகிற, (மேனி) வடிவையும், (புரிசடை) பின்னின ஜடையையு முடையனாய், (அம்) இப்படி ஜடைகட்டி அலங்கரித்த அழகிய, (புண்ணியனும்) புண்யத்தையுடைய ருத்ரனும், (நின்று) ஸ்வஸ்தமாக நின்று, (உலகம்) ருத்ரனோடு அல்லாதாரோடு வாசியறவுலகங்களையும், (தாய) அநாயாஸேந அளந்துகொண்ட, (நெடுமாலும்) ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனுமாகிற இவர்களிருவரும், (என்றும்) ஸர்வகாலத்திலும், (இருவரங்கத்தால்திரிவரேலும்) இரண்டுஶரீரத்தையுடையராய் அறிவுகேடர்க்கொக்க நினைக்கலாம்படி திரிந்தார்களேயாகிலும், (ஒருவன்) ருத்ரனானவொருவன், (ஒருவன்) நெடுமாலானவொருவனுக்கு, (அங்கம்) ஶரீரமாகிக்கொண்டு, (என்றும்) ஸர்வகாலத்திலும், (உளன்) ஸத்தாவானாயிருக்கும், அன்றிக்கே ஒரு

மூ—உளன்கண்டாய்நன்னெஞ்சேயுத்தமனென்றுமுளன்கண்டாய் *
உள்ளுவாருள்ளத்துளன் கண்டாய் *- வெள்ளத்தினுள்ளானும்
வேங்கடத்துமேயானும் * முள்ளத்தினுள்ளானென்றோர். (௯௯)

---

வன் ஒருவன் திருமேனியில் ஸகலேச்வரத்தைப்பற்றி ஸஹவ
த்தாகவுமிருக்கு மென்னவுமாம், இத்தால் 'பரன்றிறமன்றிப் ப
ல்லுலகீர்தெய்வம்மற்றில்லை' என்கிறார். (௯அ)

தொண்ணூற்றொன்பதாம்பாட்டு.

அ—இப்படி ஸர்வரக்ஷகனை ஸர்வேச்வரன் க்ஷீராப்திமுதலா
னவிடங்களிலேவந்து ஸந்நிஹிதனாய்த்து விலக்காதார் நெஞ்சு
பெறுமளவுங்கிடாய் நெஞ்சே? இத்தைத்தவாஸிபண்ணென்கிறார்-

(நல்நெஞ்சே) அவன் ஒருவனுளன் என்றுசொன்னால உகக்
கும்நல்லநெஞ்சே? (உத்தமன்) "பிறந்த நன்மைவேணும்" என்று
எப்போதும் விஞ்சித்தபடியேயிருக்கும் உத்தவைராக்ஷன், (உ
ளன்கண்டாய்) நம்முடைய ரக்ஷணத்தாலே தன்ஸத்தையாம்
படி உளனுமவன்கிடாய், (என்றும்) நாம் உளரானவன்றோடு
இலரானவன்றோடு வர்ஜயற ஸர்வகாலத்திலும், (உளன்கண்
டாய்) நம்மை ரக்ஷிக்கையிலே தீக்ஷித்து உளனாயிருக்குமவன்
கிடாய், (உள்ளுவார்) தான்புகுரப்புக்கால் ஆணையிட்டுவிலக்கா
தே அத்தைப்பொருந்தி யநுஸந்திக்குமவர்களுடைய, (உள்
ளத்து) நெஞ்சிலே, (உளன்கண்டாய்) ஸாதரமாக நித்யவாஸம்
பண்ணுமவன்கிடாய், (வெள்ளத்தின்) திருப்பாற்கடலிலே; (உள்
ளானும்) கண்வளர்ந்தருளினவனும், (வேங்கடத்துமேயானும்)
திருமலையிலே நின்றருளினவனும், (உள்ளத்தில்) கிடப்பதுநிற்
பதாய் அங்குப்பண்ணின க்ருஷியின்ஃபலமாக நம்முடையஹ்ரு
தயத்திலேவந்துபுகுந்து, (உள்ளானென்று) "இடவகைகளிகழ்ந்
திட்டு" என்கிறபடியே அவ்வவ்விடங்களை அநாதரித்து ஸாதர
மாகநித்யவாஸம்பண்ணுமவனென்று ஓர்-வைஸிபண்ணு. (௯௯)

நூறாம்பாட்டு.

அ—இப்படிமேல்விழுந்து நம்மை ஆதரிக்கிறவனைப் பெறுகை
க்கு உபாயமேதென்ன? அவனே உபாயமும் அவனைப்பெறு

மூ — ஓரடியும்சாடுதைத்த வொண்மலர்ச்சேவடியும்* ஈரடியுங்காணலாமென்னெஞ்சே*- ஓரடியில்தாயவனைக்கேசவனைத்தண்டு
ழாய்மாலைசேர்* மாயவனையே மனத்துவை. (௧௦௦)

---

ஸைக்கு ப்ராபகமுமவனேயென்று அத்யவஸியென்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார் -

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

(என்னெஞ்சே) காணவேணுமென்று அபிநிவேசிக்கிற வென்னுடையநெஞ்சே! (ஓரடியில்) ஒருதிருவடியாலே, (தாயவனை) ஜகத்தையெல்லா மளந்துகொண்ட ஸௌசீல்யஸௌலப்யாதிகுணங்களை யுடையனாய், (கேசவனை) கேசிஹந்தாவாகையாலே விரோதிகளை வெறுக்கைக்குறுப்பான ஜ்ஞானசக்த்யாதிகுணங்களையுடையனாய். (தண்) ஸாஹஸனுமன்றிக்கே விரோதியை வளர்க்கிலும் விடவொண்ணாதபடி குளிர்ந்து, (துழாய்மாலைசேர்) திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனாய்க்கொண்டு நிரதிசயபோக்யனாய், (மாயவனையே) ரக்ஷிக்குமிடத்தில் ஸஹாயாந்தரங்களை அபேக்ஷியாத ஆஸ்சர்யசக்தியுமாயிருக்கிற ஸர்வேஶ்வரனை உபாயமென்று, (மனத்து) உன் ஹ்ருதயத்திலே, (வை) அத்யவஸாயபூர்வகமாக வைத்துக்கொள்ளு, (ஓரடியும்) இப்படி அவனை உபாயமென்று அத்யவஸித்தால் லோகத்தை யளந்துகொண்ட வொருதிருவடியும், (சாடு) சகடம்முறிந்து விழும்படி, (உதைத்த) உதைத்துத்தள்ளிப்போகட்டதாய், (ஒண்) அழகிய, (மலர்) பூப்போலே அதிஸுகுமாரமான, (சேவடியும்) சிவந்ததிருவடியுமான, (ஈரடியும்) இரண்டுதிருவடிகளையும் (காணலாம்) ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கலாம். (௧௦௦)

உலகம்- அடிவரவு- வையம் வாய்நின்று புரி குன்று எளிது உலகு நன்று ஆளமர் ஊனக்குரம்பை, அன்பேதகளி.

ஆக பாட்டு-(௧௦௦)

முதல் திருவந்தாதியும் உரையும்

ஸம்பூர்ணம்.

ஸ்ரீ:.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

பொய்கையாழ்வார் அருளிச்செய்த

# இயற்பா

# இரண்டாந் திருவந்தாதி.

இதற்கு

அப்பிள்ளை அருளிச்செய்த

## உரை.

ஜண்டப்பாளையம்

அ- ரா- திருவேங்கடாசாரியர்

பரிசோதித்து

கோயமுத்தூரில்

"பாகவதவர்த்தினீ" முத்திராக்ஷரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1914

இதன் விலை அணா 5

ஸ்ரீ:.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

இயற்பா

# இரண்டாந்திருவந்தாதி.

பிள்ளைலோகஞ்சீயரருளிச்செய்த தனியன்வ்யாக்யாநம்

அ—(என்பிறவிதீரவித்யாதி) இதில் திவ்யவம்சய வ்யாதாரவு மாய் திவ்யைச்வர்யத்தை ஜநஙைச்வர்யமாக வுடையருமாயிருக்கிற பூதத்தாழ்வாருடைய ஸு ஸேவணீயமான திருவடிகளை ஜநஸம் வம்சமறும்படி ஸஜித்தேனென்கிறது, இன்னமுதா அன்பேத களி அளித்தாருமாய் நன்புகழ்சேர் சீதத்தார் முத்துக்கள்சேரு ங்கடல் மல்லைப்பூதத்தார் பொன்னங்கழல்களை- என்பிறவிதீரவி றைஞ்சினேனென்கிறது.

திருக்குருகைப்பிரான்பிள்ளானருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

என்பிறவிதீரவிறைஞ்சினேனின்னமுதா * அன்பேதகளிய ளித்தானை *— நன்புகழ்சேர்சீதத்தார்முத்துக்கள்சேரும் கடல் மல்லைப்* பூதத்தார்பொன்னங்கழல்.

வ்யா—(என்பிறவிதீரவிறைஞ்சினேன்) என்பிறவியாவது- இவர் தாம் "இப்பிறவியால்து" என்றருளிச்செய்தபடியே "மாறிமாறி ப்பலபிறப்பும்பிறந்து, பல்பிறவியில்படிந்து" பிறவிப்பெருங்கட லிலே" உடலாழிப்பிறப்பிலே புக்கு உழலுகை, ஸம்வம்வியமான ஜநவாஸம்வமெனகள் தீரும்படி ஜநமெவைவத்தையுடைய பூ தத்தார்பொன்னங்கழலை இறைஞ்சினேனென்கிறது, இறைஞ்சு கை- ஸஜிக்கை, அதாவது- ஸேவிக்கையென்றபடி. "பொன்ன ங்கழலிலேதொழுமின் முழுவினைகள் முன்னங்கழலும்முடிந்து."

என்னுமாப்போலே பூதத்திருவடிகளுடைய பொன்னங்கழற்காளஜநங்கழலுமிறே.

இனி- அவர் உபகாரகத்வவைஶிஷ்ட்யம் சொல்லுகிறது (இன்னமுதாவன்பேதகளியளிக்கையாவது) "அமுதன்னச்சொன்மாலையான* இருந்தமிழ்நன்மாலை யிணையடிக்கேசொன்னேன் 'நாரணற்குஞானத்தமிழ்புரிந்தநான்' என்னும்படி யான் "அன்பேதகளி" என்னும்படியான ப்ரபந்தத்தை 'உத்தமன்பேரேத்துந்திறமறிமின்' என்னும்படி உபகரிக்கை, அளிக்கை- கொடுக்கை.

கீழ் ஜ்ஞாநவைஶிஷ்ட்யஞ்சொல்லிற்று, இனி ஜந்மவைஶிஷ்ட்யஞ் சொல்லுகிறது (நன்புகழ்சேர்சீதத்தார் முத்துக்கள்சேரும் கடல்மல்லைப் பூதத்தார் பொன்னங்கழலென்று) அதாவது- ப்ராஶஸ்த்யமானயஶஸ்ஸுசேருமூருமாய் ஶீதளாதிஶய முக்தாமணிகள் சேரும்படியாயுமிருக்கிற தேஶமென்கை, ஶீதக்கடலிலேபிறந்த முக்தாதிகளும் ஶீதளமாயிருக்குமிறே; நன்புகழாவது- யஶஸ்ஸிலெஶ்வர்யாஜநம், "சேநம்கொடைபுகழ் எல்லையிலானை" "அந்தமில்புகழ் காரெழில்அண்ணலே' 'எண்ணிறந்தபுகழினான்' என்னும்படியான கடல்மல்லைத்தலசயனத் துறைவாரையும் எப்புவியும்பேசும் புகழ்பூதத்தாரையும் உடைத்தாகையாலும் உண்டான முத்துக்கள், வந்தலைத்த வெண்டிரைகள் வெண்முத்தத்தைக்கொழிக்கை, மாமணிவந்துந்தும் முன்னீர்மல்லையிறே; சங்கிடங்கொள்முத்தொன்றும், கரைகடந்தமுத்தொன்றும் சேரும் தேஶம்- "இக்கரையேறி" என்னக்கடவதிறே; "கரைகண்டோர்" என்னும்படியான முக்தராயிற்று இவரும்.

(கடல்மல்லை) விலக்ஷணவஸ்துக்கள் சேரும்தேஶம், சங்கு தங்குதடங்கடல் கடல்மல்லையிறே; 'மாமயிலை' என்றிறே இவர் தாமும் மண்டியிருப்பது 'கச்சிக்கிடந்தவனூர்கடல்மல்லைத்தலசயனம்' என்று அடுத்தடுத்துப்படிக்கும் தேஶமாகவிறே பாடினார், ஆகையால் அவன் படுகாடுகிடக்கும் தேஶமென்கிறது. (கடல்மல்லைப்பூதத்தார்) 'தடங்கடல்பள்ளிப்பெருமான் தன்னுடைப்பூதம்' என்னலாம்படியான தாத்லைதயுடையவர், பொற்கடல்

பாம்பணைமேல் பள்ளிகொண்டருளும் சீதனையேதொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே' என்னக்கடவதிறே 'இன்றைகொண்டு தொண்டரோத்தவெவ்வுள்கிடந்தான்' என்கிறபடியே மிக்கசீர்த் தொண்டரான புண்டரீகர் வண்டுகொண்டு நறுந்துழாயலங் கல்கொண்டு சாத்தக்கிடந்தவிடமிறே.

(கடல்மல்லைப்பூதத்தார்) திருக்கடல்மல்லையில் குருக்கத்திப்பூவிலேயிறே பூதத்தார் ஐப்பசியில் அவிட்டத்திலே அவதரித்தது, இவரும் இருந்தமிழ்நன்மாலையிணையடிக்கே சூட்டுகிறெ; அத்தையிட்டு கடல்மல்லைப்பூதத்தாரென்கிறது. அவனுக்கும் 'கடல்மல்லைத்தலசயனத்துறைவார்' என்றிறே திருநாமம், பூதத்தார்பொன்னங்கழல் இறைஞ்சினேன் "மேவினேனவன்பொன்னடி" என்னுமாப்போலே 'தமிழ்த்தலைவன்பொன்னடி' என்னக்கடவதிறே; பொன்னங்கழல்- என்பிறவிதீரவிறைஞ்சினேன்- இவர்பொன்னடியடியாகவிறே ஜந்மஸம்ஸாரம் நீங்குவது, இத்தால் பூதத்தார்பாதத்தைப்பணிவே பிறப்பறும் என்றதாய்த்து.

பிள்ளைலோகஞ்சீயர்திருவடிகளேசரணம்.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## அப்பிள்ளா உரையினவதாரிகை.

கீழ்த்திருவந்தாதியிலே உபயவிபூதிநாயகனைப் ஸர்வஸ்வாதந்த்ரனாயிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை தன்நிர்ஹேதுக கடாக்ஷவிஶேஷமடியாய் ப்ரஸக்தமான ஜ்ஞாநவிஶேஷத்தாலே ஸாக்ஷாத்கரித்து அநுபவித்து அநுபவஜநித ப்ரீத்யுத்கர்ஷத்தாலே அநுபவித்தபடியே ஸவிபூதிகனான எம்பெருமானைப்பேசி ஸ்ருஷ்டாவான ஸ்ரஷ்டாவினுடைய ஶேஷகமான ஸ்வரூபத்தையும் ஶேஷியான எம்பெருமான்திருவடிகளில் பண்ணும்

நித்யஸூரிகளுக்குமே ஸர்வஸாதாரணமான ப்ராப்யமெ ன்னுமிடத்தையும் அந்தப்ராப்யத்தைக் கைப்படுத்தித்தரும் ஸர்வஸாதாரணமான ப்ராபகமு மவன் திருவடிகளே யென்னுமிடத்தையு மறுதியிட்டார், முதலாழ்வார்களில் முதலா ழ்வாரான பொய்கையார். ஜ்ஞாநம் பூதத்தார் வையந்தகளியில் அருளிச்செய்த எம்பெருமான்படிகளைக் கூடவிருந்து உத்தரோ த்தர மநுஸந்தித்துக்கொண்டு போருகையாலே எம்பெருமானு டையவருளே தனமாக முளைத்துக்கிளர்ந்த தம்முடைய பக்தியானது பரஜ்ஞாநதஶாபந்நமாய்ப் பரிபக்வமாய்வளர அந்த பரஜ்ஞாநதஶாபந்ந ப்ரேமவிஶேஷத்தாலே அவன்படி களைக்கட்டடங்க ஸாக்ஷாத்கரித்தநுபவித்து தாமநுஸந்தித் தப்ரகாரத்தை நாடறிந்தநுபவித்து வாழும்படி நடைவிள க்குதமிழாலே பேசித்தலைக்கட்டுகிறார்.

ஸமவிஷமான விபூதியை 'ஸ்வதந்த்ரம்' என்றும் 'ஸுப்ரஶம்' என்றும்ப்ரஶிக்கிற பாஹ்யமான அஜ்ஞாநாய காரம்நீங்கும்படி. ப்ரமேயாதிஸத்தலக்ஷண பதார்த்தங்களை த்தகளியும் நெய்யும் விளக்குமாக ரூபித்துக்கொண்டு பேசி னார்பொய்கையார், இவர் ஆசார்யமான ஸம்வாதத்தில் ஆ வாவிஶேஷங்களைத் தகளியும் நெய்யும் விளக்குமாக ரூபி க்கும்படி இவ்விஷயத்திலே உள்ளூற அவகாஹித்து இறைவனை க்காணும் ஹ்ருதயத்தைப்பற்றிக்கிடக்கிற வுள்ளிருள் நீங்கும்படி யாக ப்ரத்யக்ஷவான ஆஜ்ஞா பாரோக்ஷாக்களி லுண்டாகக்க டவ ஸம்ஶய விபர்யயங்களை யறுக்கிறார், பரபக்த்யாதிகள் மூன்றும் மூவற்குந்தனித்தனியே குறைவறவுண்டாயிருக்கச்செ ய்தேயும் ஓரொருத்தருக்கோரோ அவஸ்தை தலையெடுத்து அல் லாத அவஸ்தைகள் அதுக்குள்ளே யடங்கிக்கிடக்கும், பர ஜ்ஞாநபரமபக்திகள் கிழவிட்டுத்தோற்றும்படி பரபக்தியே வி ஞ்சியிருக்குமவருக்கு பரபக்திமுற்றி பக்வமானதாய் பரமபக்தி ப்ராப்யமான பரஜ்ஞாநமேயாயிருக்குமவருக்கு பரமபக்தியேவி ஞ்சி பரபக்திபரஜ்ஞாநங்களிரண்டு மதின்கீழே செறிகிக்கிடக்

மூ— அன்பே தகளியா

குமவற்றை யிவருக்கு, பரபக்த்யாதிகளினுடைய உத்பத்தியும் வ்ருத்தியு மின்றுநக்கின்னபோதின்னது தலையெடுக்கக்கடவது இன்னதடங்கிக்கிடக்கக் கடவதென்னு மிவையெல்லா மீச்வரன்நினைவாலே யுண்டாகத்தட்டில்லை. பகவத்விஷயத்தை ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்னு மபிநிவேசம் பரபக்தி, ஸாக்ஷாத்காரம் பரஜ்ஞானம், பின்பு உத்தரோத்தராநுபவிக்க வேணுமென்னு மபிநிவேசம் பரமபக்தி. ஸம்ச்லேஷத்தில் ஸத்தை விச்லேஷத்தில் நாசமாம்படியிருக்கை பரபக்தி, அடியரோடிருந்தமை என்னும்படி பூர்ணஸாக்ஷாத்காரம் பரஜ்ஞானம், அநுபவம்பெறாவிடில் நீரைப்பிரிந்த மத்ஸ்யம்போலே மூச்சடங்கும்படியிருக்கை பரமபக்தியென் றருளிச்செய்யும்படி. நிரூபித்தால் தன்னிலிரண்டுமொக்கும், இவை ப்ராசீனருக்கு மாக்ஷவயிலே யுண்டாமித்தனை, மயர்வறமதிநலமருளப்பெற்ற வாழ்வார்களுக்கிங்கே யிருக்கச்செய்தே பகவத்ப்ரஸாதத்தாலே யுண்டாய்த்து, இனி பரபக்தி பரஜ்ஞான பரமபக்திஸ்வபாவம் 'மாங்காராஷ்' என்று ப்ராசீனருக்கு அவன்பக்கலிலே ப்ராபித்துப்பெறவேணும் ஜ்ஞான தர்சன ப்ராப்திகளென்று சாஸ்த்ரங்களிலே பரபக்த்யாதிகளைச் சொல்லும் "ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப" என்றிறே கீதாசார்யன்வார்த்தை, 'ஸஞ்ஜாயதே, ஸத்ருச்யதே வா வ்யவஸ்யதே வா' என்றிறே பராசரவசநம்.

❁ முதற்பாட்டு. ❁

அ— பகவத்ப்ரஸாதலப்தமான தம்முடைய ஜ்ஞாநவிசேஷங்களைத் தகளியும் நெய்யுமாக நிரூபியாநின்றுகொண்டு ஸர்வசேஷியான நாராயணனுக்கு பரஜ்ஞானமாகிற உஜ்ஜ்வலதீபத்தையேற்றி யடிமைசெய்யப்பெற்றேனென்று க்ருதார்த்தராகிறார்-

(அன்பே) விஷயவைலக்ஷண்யாநுகுணமாக முளைத்துக்கிளருகிற பரபக்திரூபாபந்நமான ஸ்நேஹமானது, (தகளியா)

டு — ஆர்வமே நெய்யாக * இன்புருகு சிந்தை யிடுதிரியா * —
நன்புருகி ஞானச்சுடர்விளக்கேற்றினேன் நாரணற்கு *
ஞானத்தமிழ்புரிந்த நான். (க)

மேற்சொல்லுகிற நெய்திரிமுதலானவற்றுக் காதாரமான தகளியாகவும், (ஆர்வம்) அந்த விஷயப்ரேமத்துக் கொன்புகுகிறதோவென்று பரிந்துகாப்பிடும்படி பரிவுக்கு ஹாவஹமான ஸ்நேஹமானது, (நெய்யாக) மேலேற்றத் தேடுகிற விளக்கை வளர்க்கைக்குறுப்பான நெய்யாகவும், (இன்பு) விஷயப்ரேமஸம்பந்த ஜநிதமான ஆநந்தத்தாலே, (உருகு) த்ரவீபூதமான, (சிந்தை) அந்தப்ரேம த்ரவ்யங்களுக்கு வாய்த்தலையான ஹ்ருதயமானது, (இடு) மேற் சொல்லுகிற ப்ரஜ்ஞாநமாகிற விளக்குக்கிடப்படும், (திரியா) திரியாகவும், (நன்பு) ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் ஜ்ஞாநகுணகமாய் பகவதநந்யார்ஹசேஷமாகையாலே சுத்தஸ்வலக்ஷணமான ஆத்மவஸ்துவானது, (உருகி) பகவத்குணாநுபவத்தாலே த்ரவத்ரவ்யமாயுருகி, (ஞானம்) ப்ரஜ்ஞாநமாகிற, (சுடர்விளக்கு) உஜ்ஜ்வலதீபத்தை, (ஞானம்) பகவத்தத்வயாதாத்ம்ய ஜ்ஞாநஜநகமாய், (தமிழ்) வேதாதிகள்போலே அதிகாரிநியதாதிகாரமன்றிக்கே ஸர்வாதிகாரமான த்ராவிடப்ரபந்தத்தை, (புரிந்த) லோகோபகாரமாகப்பண்ணின, (நான்) நான், (நாரணற்கு) ஸர்வசேஷியான நாராயணனுக்கு, (ஏற்றினேன்) ஸ்வஸ்வரூப ப்ரகாசகமுள்ளபடியே ப்ரகாசிக்கும்படி ஏற்றினேன், பேசவிக்கவொருப்பட்ட விஷயம் ஸாத்ம்யஸங்கோசமாகையாலும் பேசித்தலைக்கட்டியல்லது தரிக்கவொண்ணாத தம் ப்ரக்ருதியாலும் ஸஞ்சரித்துத் தமிழ்புரிந்த வென்கிறார் 'அறைகழல்சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு அவாவாருயிருருகியுக்க நேரியகாதலன்பு' என்றாழ்வாரும் ப்ரபந்தாதிகள் மூன்றும் தமக்குண்டென்றருளிச்செய்கிற, 'சூடுதற்கவாவென்று' ப்ரீதியை முந்துறவருளிச்செய்து, ப்ரஜ்ஞாந மருளிச்செய்கிற விடத்தில் 'அவாவாருயிருருகி யுக்கநேரியகாதலென்று' ப்ர

பக்தியாலே யுருகி யுக்கவாருயிருண்டு- த்ருதவஸ்து, அதினிட
த்திலுண்டான ஸூக்ஷ்மாண்காதலென்று, பரஜ்ஞாநதசை
யிலாத்ரா த்ரவத்ரவ்யமாயுருகுமென்னுமிட மருளிச்செய்தாரிறே!
அந்த ஸ்நேஹகாதலாலேயுண்டான- அன்பென்று. பரபக்தி
யைச்சொல்லுகிறது, 'ஆவலன்புடையார்' என்றும் 'சிரத்தைதத
ன்னுல்வேட்கைமீதூரும்' என்றும் 'ஈரநெல்வித்தி' பேரயர்காத
ல்' என்னும்பரபக்திதனக்கேயிரண்டுமுண்டாக வருளிச்செ
ய்கையாலே அன்பு ஆர்வம் என்று ஓரவஸ்தைதன்னிலுமெ
த்ரை ஸாரவஸ்தைகளைச் சொல்லத்தட்டில்லை. 'ஸங்காத்ஸம்
ஜாயதேகாம:' என்றிறே! கீதாசார்யனருளிச்செய்தது 'கா
மோத்ஸங்கஸ்ய விபாகஶ்ச' என்றிறே யதுக்குஹாஷ்யம்.
'ஸ்நேஹபூர்வம்' 'பக்திஸ்நிக்தாவீர' என்றுனிறே திருவ
டியும், ஆகையாலே பரபக்த்யம் காரணமான வன்பே
தகளியென்றும், அத்தலைக்குப்பரிந்தல்லது நிற்கவொண்ணாத
படி பரவஶமான பரபக்தியை நெய்யென்றும் (நன்புருகி
ஞானச் சுடர்விளக்கென்று) ஆஶ்ரயமான த்ருதவஸ்து உருகி
விழும்படியான பரஜ்ஞாநதசையை விளக்கென்றும் இவ
ருமருளிச்செய்தாராய்த்து 'ஈரநெல்வித்திமுளைத்த நெஞ்சப்பெ
ருஞ்செய்யுள்' என்று ஸத்வகாரமான ஸம்ஜாதஸம்முத
லாக நெஞ்சுதளமாக வுண்டாமதாயிருக்க பரஜ்ஞாநாவ
ஸ்தைக்குக் காரணமாக நெஞ்சைச்சொல்லுகிறது 'உருகுமா
ல்நெஞ்சம், பெருகுமால்வேட்கை' என்று பரபக்த்யவஸ்தையி
ல் காரணமான நெஞ்சமுருகும், பரஜ்ஞாநாவஸ்தையில் கார
ணமான நெஞ்சும் காரணியானவாத்மாவும் உருகுமென்கிறவிஶே
ஷந்தோற்றுகைக்காக. (க)

❁இரண்டாம்பாட்டு.❁

அ—பக்திபரவஶராய்க்கொண்டு க்ருஷ்ணகத் திருநாமங்களைச்
சொல்லிக்கூப்பிடுமவர்களை ஸர்வேஶ்வரன் நித்யஸூரிகளோ
டொத்த தரத்தைக்கொடுத்து ரக்ஷிக்குமென்கிறார்-

மூ — ஞானத்தானன்குணர்ந்து நாரணன்றன்னாமங்க* டானத்தான் மற்றவன்பேர்சாற்றினால்* — வானத்தணியமரராக்குவிக்கு மஃதன்றே* நங்கள் பணியமரர்கோமான்பரிசு. (உ)

(நாரணன்றன்) ஸமஸ்தவிசேஷியான ஸர்வேச்வரனுடைய; (நாமங்கள்) விக்ரஹாதிகளுக்கு வாசகமாய் ஸ்வாஸாதாரணமான திருநாமங்களையும் மற்றும் விபூதியோகத்துக்கு வாசகமான திருநாமங்களையும், (ஞானத்தால்) வேதசாஸ்த்ரமான ஜ்ஞானத்தாலே, (நன்கு) அவனுக்குந் தனக்குமுண்டான சேஷசேஷிபாவமான ஸம்பந்தமளவும் செல்ல, (உணர்ந்து) உள்ளபடியறிந்து, (தானத்தால்) 'பேர்பலசொல்லிப்பிதற்றி' என்கிறபடியே சொல்லியல்லது நிற்கவொண்ணாதபடி தலையண்டைகொண்ட ப்ரேமத்தினுடைய முதிர்ஸ்தானத்திலேநின்று (சாற்றினால்) அடைவுகெடக்கூப்பிட்டால். (வானத்து) பரமாகாசசப்தவாச்யமான பரமபதத்தில், (அணி) ஸ்வஸம்பந்தத்தாலே நிறங்கொடுக்கும்படியான அழகையுடையரான, (அமரர்) ஸூரிகளோடொத்த பெருமையையுடையராம்படி, (ஆக்குவிக்குமஃது) பண்ணுமது, (அன்றே) அன்றோ, (நங்கள்) நமக்கு நிருபாதிக பந்துக்களாய், (பணி) 'நித்யாஞ்ஜலிபுடாஹ்' என்கிறபடியே கையுமஞ்ஜலியுமாய்க்கொண்டு தொழுகையே நித்யயாத்ரையாக வுடையராயிருக்கிற, (அமரர்) அநந்தவைநதேயாதிகளான நித்யஸூரிகளுக்கு, (கோமான்) நிருபாதிகசேஷியானவனுடைய, (பரிசு) ப்ரகாரம், இங்கேயடைவுகெடத் திருநாமஞ்சொன்னவர்களை அங்கேயடைவுகெட்டுக்கூப்பிடும் மோக்ஷத்திலே வைக்குமென்றபடி. (உ)

❀ மூன்றாம்பாட்டு. ❀

அ — அடுத்தணித்தாகத் திருப்பார்க்கடலிலே வந்து கண்வளர்ந்தருளுகிற சீர்மையையுடையவனை ஆச்ரயிக்குமவர்கள் பரமபதத்தைச்சென்று ப்ராபிக்கப்பெறுவரென்கிறார்.

மூ—பரிசுநறுமலரால் பாற்கடலான் பாதம் * புரிவார்புகப் பெறுவர்போலாம் *— புரிவார்கள் தொல்லமரர்கேள்வித் துலங் கொளிசேர் தோற்றத்து * நல்லமரர்கோமா ன்நகர். (௩)

நக ரிழைத்து நித்திலத்து

(பரிசு) செவ்விகுன்றாத, (நறு) அழகிய, (மலரால்) பூக்களைக்கொண்டு, (பாற்கடலான்) ஸம்ஸாரிகளை யக்கரைப்படுத்துகைக்காகத் திருப்பாற்கடலிலே முற்கோலிவந்து கண்வளர்ந்தருளுகிறவனுடைய, (பாதம்) திருவடிகளை, (புரிவார்) ஶாஸ்த்ரமானப்ரகாரத்தால் ஸக்திபரவஶராய்க்கொண்டு ஆஶ்ரயிக்குமவர்கள், (புரிவார்கள்) முழுகுவது மூக்குப்புதைப்பது ஜபிப்பது தொழுவது புகழுவதாய்க்கொண்டு இடைவிடாமல் அவனை யாஶ்ரயித்துக்கொண்டு போரக்கடவர்களாய், (தொல்) ஸம்ஸாரிகளில் பழையரான, (அமரர்) ப்ரஹ்மாதிதேவர்கள், (கேள்வி) காணவொண்ணாதே யென்றுங் கேட்டேபோமித்தனையாய், (துலங்கொளிசேர்) நிரவதிகதேஜஸ்ஸை யுடைத்தாய்க்கொண்டு, (தோற்றத்து) ப்ரகாஶிக்கக்கடவதாயிருந்து, (நல்) பிரியில் யஶிக்கமாட்டாத நன்மையையுடைய, (அமரர்) நித்யஸூரிகளுக்கு, (கோமான்) நாயகனான ஸர்வேஶ்வரனுடைய, (நகர்) வைகுந்தமாநகரத்தை, (புக) ப்ரவேஶிக்க, (பெறுவர்போலாம்) பெறுவராம். (௩)

❁ நாலாம்பாட்டு. ❁

அ—அன்பேதகளியென்றுதொடங்கி தம்முடைய ஸக்த்யவஸ்தாவிஶேஷங்களைத் தகளியும் நெய்யும் விளக்குமாக நிரூபித்தாற்போலே தம்முடைய ஸக்த்யவஸ்தாவிஶேஷங்களை இதழும் அல்லியும் தாதுமாயிருப்பதொரு தாமரைப்பூவாக நிரூபித்துக்கொண்டு அவனையாஶ்ரயிக்கிறார்.

(நகர்) ஸக்த்யுத்பத்திஸ்தாநமான நெஞ்சை ராஜாதிராஜனான ஸர்வேஶ்வரனுக்குத் திருப்படைவீடாக, (இழைத்து) வகுத்து, (ஆங்கே) அந்தத்திருப்படைவீட்டிலே, (நித்திலம்) அன்னெஞ்சிலேயுண்டாய் ஸாத்த்விகமாகிற வழல் தட்டாமையாலே

ழ — நாண்மலர்சொண்டு * ஆங்கே திகழுமணிவயிரஞ் சேர்த்து* — நிகரில்லாப்பைங்கமலமேந்திப் பணிந்தேன்பனிமலராள்* அங்கம் வலங்கொண்டானடி. (௪)

குளிர்ந்து 'ஸௌஹ்ருதம்' என்கிறவிஷயத்தைப்பற்றிக் கிளருகையாலே ப்ரீதிஸஹிதமாய் வெளியிடுகிற ஸ்நேஹமாகிறமுத்தை, (நாள்) செவ்விகுன்றாத, (மலர்) இதழாக, (சொண்டு) வகுத்துக்கொண்டு, (திகழும்) ப்ராப்தியையும் வைலக்ஷண்யத்தையும் விஷயீகரித்து இரண்டுகூறாக வெழுந்திருக்கிற ஸந்நிவேசமாகிற உஜ்ஜ்வலமான, (மணிவயிரம்) மாணிக்யவைரங்களை, (சேர்த்து) அல்லியுந்தாதுமாகச்சேர்த்து, இப்படி வைலக்ஷண்யமான தாமரையிற்காட்டில் வ்யாவ்ருத்தமான விதழையு மல்லியையுந் தாதையுமுடைத்தாகையாலே, (நிகரில்லா) உபமாநரஹிதமான (பை) பக்தியாகிறபெரிய (கமலம்) தாமரைப்பூவை, (ஏந்தி) அழகுபெற தரித்துக்கொண்டு, (பனி) குளிர்ந்த, (மலராள்) தாமரைப்பூவை யிருப்பிடமாக வுடைய ஸௌந்தர்யைகவேஷையான பெரியபிராட்டியாரை, (அங்கம்) திருமேனியில், (வலம்) வலவருகான திருமார்விலே, (கொண்டான்) வைத்துக்கொண்டவனுடைய, (அடி) திருவடிகளிலே, (பணிந்தேன்) நிர்ப்பரனாய்க்கொண்டு விழுந்தாச்ரயித்தேன், நெஞ்சை நகரமாக ரூபிக்கையாலே நகரமாகில் முத்துமாணிக்கம் முதலான விலக்ஷணவஸ்துக்களை யுடைத்தாயிருக்குமென்று ஸத்த்வஸாரமான ஸ்நேஹாதிகளை முத்துமாணிக்யாதிகளாக ரூபிக்கிறது, (பைங்கமலமேந்தியென்று) பக்தியைத்தாமரையாக நிரூபிக்கையாலே யந்த ஸத்த்வஸாரமான ஸ்நேஹாதிகளை அதுக்கிதழு மல்லியுந் தாதுமாக ரூபிக்கிறது, பக்தியினுடைய ஸௌரபாவகாசமும் ஸௌந்தர்யமுந் தோற்றுகைக்காக அத்தைத்தாமரையாக நிரூபிக்கிறது, நெஞ்சை நகரமாக நிரூபிக்கிறது கலங்காப்பெருநகரத்திற் பண்ணும் விருப்பத்தைத் தன்னெஞ்சிலே பண்ணிக்கொண்டு அவன் ஸ்வாதீனமாக வர்த்திக்குமென்று தோற்றுகைக்காக. (௪)

மூ—அடிமூன்றிலிவ்வுலக மன்றளந்தாய்போலும்* அடிமூன்றிரந்தவனிகொண்டாய்*— படிநின்ற நீரோதமேனி நெடுமாலே* நின்னடியை யாரோதவல்லாரறிந்து. (ரு)

---

## ஐந்தாம்பாட்டு.

அ—ஆழ்வீர் 'நீர்நம்மைப்பணிந்தீரோ' என்ன? ஒன்றைச்சொன்னேனித்தனைபோக்கி வாங்மநஸாவிஷயனான வுன்னீர்மை யொருவரால் பரிச்சேதிக்கப்போமோ? வென்கிறார்-

சால ஸுகுமாரசிசுவாய்க்கொண்டு இரண்டடியாலே அளந்து ஓரடிக்குச் சிறையிட்டு வைப்பாயாக மஹாபலி பக்கலிலே மூக்குறச்சென்று, (மூன்றடி) மூன்றடியை, (இரந்து) யாசித்து, (அவனி) பூமியை, (கொண்டாய்) அளந்துகொண்டாய், (அன்று) அளந்துகொண்டிற அக்காலத்திலே, இரண்டடியாலேயளந்துகொண்ட இத்தனைபோக்கி, (மூன்றடியில்) மூன்றடியாலே, (இ) இந்த, (உலகம்) லோகங்களை, (அளந்தாய் போலும்) அளந்துகொண்டாயோதான், (படி) பூமியிலே, (நின்ற) ரக்ஷகனாய்க்கொண்டு செவ்வேவந்த வசித்துநின்ற, (நீர்) நீர்மையையுடையையாய், (ஓதம்) ஜலஸம்ருத்தியை யுடைத்தான கடல்போலே ச்ரமஹரமான. (மேனி) வடிவையுடையையாய் (நெடு) ஸர்வாதிகனை, (மாலே) ஸர்வேச்வரனே? (நின்) இப்படி நீர்மையே வடிவான வுன்னுடைய, (அடியை) திருவடிகளை, என்னைப்போலே யறிவுகெட்டார்பேசிற் பேசுமித்தனை போக்கி (அறிந்து) நேர்கொடுநேரே இவ்வளவென்று அளவிட்டறிந்து, (ஓதவல்லார்) பேசவல்லார், (ஆர்) ஆர். (ரு)

## ஆறாம்பாட்டு.

அ—ஆனால் இப்படியாருமறியாதே யிழந்துபோமித்தனையோ வென்னில்? அதுவேண்டா ஐஹிகவிஷயஸங்கமற்று அவன்றிருநாமங்களைச் சொல்லிப்புகழுமவர்கள் அவன்றிருவடிகளைப் பெறுவரென்கிறார்-

மூ— அறிந்தைந்துமுள்ளடக்கி யாய்மலர்கொண்டு* ஆர்வஞ்செ
றிந்தமனத்தராய்ச் செவ்வே*— யறிந்தவன்றன்பேரோதியேத்து
ம்பெருந்தவத்தோர் காண்பரே * காரோதவண்ணன்கழல். (சு)
கழ லெடுத்து வாய்மடித்துக் கண்

---

(அறிந்து) ஸம்ஸாரலக்ஷணத்தையும் ஐஹிகவிஷயதோ
ஷங்களையும் நன்றாகவறிந்து, ஹேயவிஷயங்களிற் போகாதபடி
(ஐந்தும்) ச்ரோத்ராதிகளான இந்த்ரியங்களைந்தையும், (உள்)
ப்ரத்யக்கான ஸம்வத்விஷயத்திலே, (அடக்கி) ப்ரவணமாம்படி
நியமித்து, (ஆய்) அந்தத்தைக்கு ஸத்ருசமாம்படி கந்த ஸமாய
ப்பட்ட, (மலர்) செவ்விப்பூக்களை, (கொண்டு) ஸம்பாதித்துக்
கொண்டு, (ஆர்வம்) ஸ்நேஹம், (செறிந்த) மிக்க, (மனத்
தராய்) மநஸ்ஸையுடையராய், (செவ்வே) அவன்சேஷீ, நாம்
சேஷபூதர் என்னும்முறையை நன்றாக (அறிந்து) தெறிந்
து, (அவன்பேர்) ஸ்வரூபகுணாதிகளுக்கு வாசகமான அவ
ன்திருநாமங்களை, (ஓதி) இடைவிடாமற் சொல்லிக்கொண்டு,
(ஏத்தும்) ஸ்ரீதிவ்யஸூக்திகளாலே ஸ்தோத்ரம்பண்ணும், (பெரும்)
பெரிய, (தவத்தோர்) ஸாத்விகர்களானவர்கள், (கார்)
கறுத்த, (ஓதம்) கடல்போலே ச்யாமளமான, (வண்ணன்)
வடிவையுடையனானவன், (கழல்) திருவடிகளை, (காண்பர்) கண்
டநுபவிக்கப் பெறுவர்கள். (சு)

### ❁ ஏழாம்பாட்டு. ❁

அ— இப்படி ஸாமக்ரியாதரங்களுமாச்ரயித்துவாழுகிற விஷ
யத்தை ஸ்ரீவைஷ்ணவச்சிஹ்நமாக நெஞ்சே? நீயுமநுஸந்திக்கப்
பாரென்கிறார்.

(கழல்) ஆச்ரிதர்வாழும்படி திருவடிகளை, (எடுத்து) வள
ர்த்து, (மாற்றார்) சத்ருக்களான நமுசிப்ரப்ருதிகள், (அ
ழலெடுத்த) நெருப்புக்கொளுத்தின, (சிந்தையராய்) ஹ்ருதயத்
தையுடையராய்க்கொண்டு, (வாய்மடித்து) பல்லிறுகி நாமடிக்
கொண்டு, (கண்) பார்வையிலே பட்டுவிழும்படி சுடப்பார்க்கிற

மூ—சுழன்று * மாற்றாரழலெடுத்த சிந்தையராய் அஞ்சத் *—
தழலெடுத்த போராழி யேந்தினான் பொன்மலர்ச் சேவடியே *
ஓராழி நெஞ்சே? உகந்து. (எ)

உகந்துன்னை வாங்கி யொளிநிறங்கொள் கொங்கை * அகங்
குளிர வுண்ணென்றாள் ஆவி *— யுகந்து முலையுண்டாய்போலே

கள், (சுழன்று) வரிஹுதித்து, (அஞ்ச) நடுங்கும்படியாக,
(தழலெடுத்த) எதிரிகள்மேலே நெருப்பை யுமிழுகிற, (போர்)
யுத்தோத்யுக்தமான, (ஆழி) திருவாழியை, (ஏந்தினான்) தரித்த
ஸர்வேச்வரனுடைய, (பொன்மலர்) பொன்போலேயும் பூப்
போலேயும் ஸ்ப்ருஹணீயமாய் அதிஸௌகுமார்யமான, (சே) சிவ
ந்த, (அடியே) திருவடிகளையே, (ஆழி) அளவுடைய, (நெஞ்
சே) நெஞ்சே? (உகந்து) தேவையாகவன்றிக்கே ஸ்ரீதியோடே
கூடிக்கொண்டு, (ஓர்) அநுஸந்தி. வாய்மடித்துக்கொண்டு
சுழன்றுகொண்டு மாற்றாரழலெடுத்த சிந்தையராம்படி தழலெடு
த்தபோராழி யென்னவுமாம். (எ)

❀ எட்டாம்பாட்டு. ❀

அ—இப்படி ஆச்ரயிக்குமிடத்தில் விரோதிகளுண்டானா
லோவென்னில்? பூதனையைமுடித்தாற்போலே அவன்தானே அவ
ற்றைப்போக்குமென்கிறார்-

(உகந்து) பூதனையானவள் யசோதைப்பிராட்டி ஸ்நே
ஹிக்குமாப்போலே ஸ்நேஹித்து பரிவுதோற்ற ஓசமுக்காக, (உ
ன்னை) உன்னை, (வாங்கி) உறங்கத்திலேதூக்கியெடுத்து, (ஒளி)
பால்விம்மி யொளிவிடுகிற, (நிறங்கொள்) புகரையுடைத்தான;
(கொங்கை) முலையை, (அகம்) ஹ்ருதயம், (குளிர) குளிரும்ப
டி, (உண்ணென்றாள்) உண்? ணென்றுவாத்ஸல்யமாக முலைதந்தாள்,
(ஆனமையால்) ஆகையாலே, (நீயும்) நீயும், (அன்று) அவள்
முலைதந்தவன்று, (அலை) அலையெறிகிற, (பண்பால்) மனத்
தாலே, (உகந்து) பெருப்பேறுபெற்றாப்போலே யுகந்துகொ
ண்டு, (உண்பாய்போலே) மெய்யே முலையுண்பாரைப்போலே,
(முனிந்து) சீறி, (ஆவியுண்டாய்) உண்டு அவள்ப்ராணனை முடி

மூ—முனிந்துண்டாய் * நீயுமலைபண்பாலானமையாலன்று. (அ)

அன்றதுகண்டஞ்சாத ஆய்ச்சியுனக்கிரங்கி * நின்றுமுலை
தந்த வின்னீர்மைக்கு *— அன்றுவரன் முறையால் நீயளந்த மாகடல்
சூழ்ஞாலம் * பெருமுறையா லெய்துமோ பேர்த்து. (௯)

---

த்துப்போகட்டாய், (அலைபண்பாலென்று) அழிந்த நீர்மையையுடையவளென் றவள்மேலே யேறிடவுமாம், உகந்துன்னை வாங்கி யொளிநிறங்கொள்கொங்கை அகங்குளிரவுண்டென்றுள் ஆனமையால் நீயுமன்றலைபண்பாலுகந்து முலையுண்டாய்போலே முனிந்தாவி யுண்டா யென்றநயம். (அ)

❁ ஒன்பதாம்பாட்டு. ❁

அ—பூதனைபடியை அநுஸந்தித்த நெஞ்சாறல்தீர இவ்விஷயத்தில்நிலைநின்ற வ்யாமோஹமுடைய யஶோதைப்பிராட்டியு மொருத்தியே என்று அவள்ஸ்நேஹத்தைக் கொண்டாடுகிறார்.

(அன்று) அவள்பிணமாய்விழும்படி நீ முலையுண்டுமுடித்தவன்று, (அது) முலைகொடுத்தவள்பட்டது, (கண்டு) நாமுமப்படிச்செய்வதென்னென்று, (அஞ்சாத) பயப்படாத, (ஆய்ச்சி) யஶோதைப்பிராட்டியானவள், (உனக்கு) உனக்கு, (இரங்கி) எது? விளையத்தேடிற்றோ! வென்னும் வயிறெரிச்சலாலே பரிந்து (நின்று) தளராதே தறையிலேகால்பாவும்படி யரித்துநின்று, (முலைதந்த) முலைதந்த, (இந்நீர்மைக்கு) இம்மஹாகுணத்துக்கு, (அன்று) மஹாபலி நீர்வார்த்துத்தந்தவன்று, (வரன்) நீயுடையவனு மிவையுடைமையுமாகிற ஸம்பந்தமான, (முறையால்) உறவாலே, (நீ) ரக்ஷகனானநீ, (அளந்த) அந்யாபிமாநத்தால்வந்த வழல்மாறும்படி குளிரத் திருவடிகளாலே ஸ்பர்ஶித்து அளந்துகொண்ட, (மா) பெரிய, (கடல்) கடலாலே, (சூழ்) சூழப்பட்ட, (ஞாலம்) ஸ்ருஷ்டியானது, (பேர்த்து) மறுத்துப்பார்க்குமிடத்தில், (பெரு) இதில் இதுபெரியதென்று பெருக்கப்பார்க்கும், (முறையால்) க்ரமத்தால், (எய்துமோ) ஒக்குமோ, அதுவும்பெரியசெயல் இதுவும்பெரியசெயல் அந்தஸ்நேஹாதிஶயத்துக்கிது ஒப்பாகப்போருமோவென்றபடி. (௯)

மூ—பேர்த்தனை மாசகடம் பிள்ளையாய்* மண்ணிரந்து காத்தனை
பல்லுயிருங் காவலனே *— யேத்திய நாவுடையேன் பூவுடை
யேனின்னுள்ளி நின்றமையாற்* காவடியேன்பட்ட கடை. (௧௦)

## பத்தாம்பாட்டு.

அ—அவனைப்போலே யெனக்குன்பக்கல் ஸதிரோத்ரவர்ண
மில்லையேயாகிலும் த்ராவண்யஸாந்த்ரஜஹிலுமுண்டே, அது
வேபற்றாசாக அடியேபிடித்துக் கண்டகண்ட தைவதைகள்
காற்கீழே தலைமடுத்துப்பட்ட என்றண்மையைப்போக்கி ரக்ஷிக்
கவேணுமென்கிறார்-

(பிள்ளையாய்) வளர்த்தின தொட்டிலிலே கிடக்கும்படியான
சிறுபிள்ளையாய்க்கொண்டு, (மா) பெரிய, (சகடம்) ஶகடத்
தை; (பேர்த்தனை) கட்டழியும்படி தள்ளிப்போகட்டாய், (கா
வலனே) ஸர்வரக்ஷகனானவனே? அந்த ரக்ஷ்யரக்ஷகஸம்பந்
த்தை வ்யாக்ஷரித்துக்கொண்டு ஆஶ்ரிதனான இந்த்ரனிழவை
பரிஹரிக்கைக்காக- (மண்) பூமியை, (இரந்து) யாசித்
துவாங்கிக்கொண்டு, திருவடிகளாலே குளிரஸ்பர்ஶித்து, (பல்
லுயிரும்) ஸகலாத்மாக்களையும், (காத்தனை) ரக்ஷித்தருளினாய்
(நின்) இப்படி ரக்ஷகனானவுன்னை, (உள்ளி) ஸர்வஸமாஶ்ரய
ணீயனென்று அநுஸந்தித்து, (நின்றமையால்) நிற்கையா
லே, (ஏத்திய) தனக்குத்தானே யேத்தும்படியான, (நா) நாவை
(உடையேன்) உடையேனானேன், (பூ) காயிகமான வடிமைசெய்
கைக் குபகரணமான புஷ்பங்களை, (உடையேன்) உடையேனா
னேன், (அடியேன்) உனக்கு ஶேஷபூதனாகையாலேவந்த தாஸ்
யத்தையுடையனான நான், (பட்ட) அநாதிகாலம் அஸ்வாதீந
மான தைவதைகளின் காற்கீழே தலைமடுத்துப்பட்ட (கடை) தண்
மையை, (கா) இனிவாராதபடி தேவர் காத்தருளவேணும். (௰)

## பதினோராம்பாட்டு.

அ—நாட்டிலுள்ளார் க்ஷுத்ரதைவதைகளை ஆஶ்ரயித்து க்ஷுத்
ரைஶ்வர்யத்தைப் பெற்றுப்போமதொழிய ஸர்வரக்ஷகனான வுன்
னையறிந்து ஆஶ்ரயிக்கவல்லாரார்? என்கிறார்-

மூ—கடைநின் றமரர்கழல் தொழுது * நாளுமிடைநின்ற இன்பத்தராவர்*— புடைநின்ற நீரோதமேனி நெடுமாலே* நின்னடியை யாரோதவல்லாரவர். (கக)

அவ ரிவ ரென்றில்லை யரவணையான் பாதம்*

---

(கடைநின்று) அவ்வவதெய்வங்களின் வாசற்கடைப்பற்றிநின்று, (அமரர்) நம்மிற்காட்டில் நாலுநாளேறவிருந்து சாகக்கடவ க்ஷுத்ரதேவர்களுடைய, (கழல்) கால்களை, உபாஸகரானவர்க ளிரங்கி காரியஞ்செய்யுமளவும், (நாளும்) நெடுங்காலம், (தொழுது) ஆச்ரயித்து, அங்கேவந்துன்னை யநுபவித்தல் இங்கேயிருந்துன்னை யாச்ரயித்தல் செய்கைக்கு யோக்யதையில்லாதபடி, (இடை) நடுவே, (நின்ற) மிடறுபிடியாய்நின்ற, (இன்பத்தராவர்) ஸுகாநுபவத்தைப் பெற்றநுபவிக்கப்பெறுவர், (புடைநின்ற) சுற்றும் சூழ்ந்துகிடக்கிற, (நீர்) ஜலஸம்ருத்தியையுடைய, (ஓதம்) கடல்போலே ச்ரமஹரமான, (மேனி) வடிவையுடைய, (நெடுமாலே) ஸர்வேச்வரனானவனே? (நின்) இப்படி ஸவுலப்யகுணனானவுன்னுடைய, (அடியை) திருவடிகளை, (ஓதவல்லாரவர்) ஸ்தோத்ராதிகளைப்பண்ணி யாச்ரயிக்கவல்லவர், (ஆர்) ஆர்தான், அன்றிக்கே தேவதாந்தரங்களுன்வாசலிலேநின்று உன்திருவடிகளைத்தொழுது உன்னைப்ரயோஜநமாகக்கொள்ளாதே ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு போவரென்றுமாம். (கக)

❀ பன்னிரண்டாம்பாட்டு. ❀

அ—ஆனாலந்த தேவதைகளை ஆச்ரயிக்கவொண்ணாதோ? அவர்களை ஸேவிக்கிற தென்னென்னில்? அவர்கள் தாங்களும் தந்தா ஸ்வாபிமதம்பெறுகைக்கு அவனை யாச்ரயியாநின்றபின்பு நமக்கு மவனை யாச்ரயிக்கையன்றோ வடுப்பதென்கிறார்-

அவர்- ஆச்ரயணீயரான அந்ததேவர்கள், இவர்- அவர்களையாச்ரயிக்கிற விந்த உபாஸகர்கள், என்று- என்ன, இல்லை- ஒருவாசியில்லை, அரவு- திருவனந்தாழ்வானை, அணையான்- படுக்கையாகவுடைய ஸர்வேச்வரனுடைய, பாதம்- திரு

மூ—எவர்வணங்கி யேத்தாதாரெண்ணில்*—
பவருஞ்செழுங்கதிரோ னொண்மலரோன் கண்ணுதலோனன்றே*
தொழுத்தகையார் நாளுந்தொடர்ந்து. (௧௨)

தொடரெடுத்தமால்யானை சூழ்கயம் புக்கஞ்சிப்*
படரெடுத்தபைங்கமலங்கொண்டு*— அன்றிடரடுக்க வாழியான்

---

வடிகளை, வணங்கி- தலையாலேவணங்கி, ஏத்தாதாரெவர்- வாயாலேயேத்தி யெவர்தானாச்ரயியாதவர்கள், எண்ணில்- ஆராய்ந்துபார்க்குமளவில் பவரும்- பரம்பினை, செழும்- அழகிய, கதிரோன்- கிரணங்களையுடையனான வாதித்யனும், ஒண்- அழகிய, மலரோன்- திருநாபீகமலத்தை யிருப்பிடமாகவுடைய ப்ரஹ்மாவும், கண்ணுதலோனன்றே- லலாடநேத்ரனான ருத்ரனுமாகிற, நாட்டுக்காச்ரயணீயராக ப்ரஸித்தரான இவர்களன்றோ? நாளும்- நாடோறும், தொழும்- அவன் புக்கவிடம்புக்கப்பின்பற்றி யாச்ரயிக்கைக்கே, தகையார்- ஸ்வபாவமாகவுடையராயிருக்கிறார்கள். (௧௨)

## பதின்மூன்றாம்பாட்டு.

அ—இப்படி பெரியாராச்ரயிக்கிற வளவன்றிக்கே ஜ்ஞாநவ்ருத்தாதிகளாற் குறைநின்றவர்களுக்கும் கூசப்பறச்சென்றாச்ரயித்து ஜீவிக்கலாமென்கிறார்—

தொடர்- இட்டவிலங்கை, எடுத்த- ஒடித்துக் கையிலேகொண்டு ஸ்வைரமாகத்திரிகிற, மால்யானை- உத்தமஜமானது, சூழ்- தன்னாற் கரைகாணவொண்ணாத பரப்பையுடைத்தான, கயம்- பொய்கையிலே புக்கு- ஸத்ருஹிநிவிஷ்டமாய்ச் சென்றுபுக்கு, படர்- விகஸிதமாய், எடுத்த- ஓங்கியிருந்துள்ள, பை- அழகிய, கமலம்- தாமரைப்பூவை, கொண்டு- ஸாதரமாகப்பிடித்துக்கொண்டு, அன்று- அத்தசையிலே, இடர்- முதலையின்வாயிலே யகப்பட்டுத் தன்னாலும் பிறராலும் பரிஹரிக்கவொண்ணாதபடியான து:கம், அடுக்க- ப்ரஸக்தமாக, அஞ்சி- பதறி, பூச்செவ்வியழிவதற்குமுன்னே திருவடிகளிலே பணிமாறப் பெறுகிறிலோமென்று பயப்பட்டு; அழியான்ற

மூ—டையான் பேரோதிப்பேதைகாள்* தீர்த்தகராமின்திரிந்து,
திரிந்ததுவெஞ்சமத்துத் தேர்கடவி* யன்றுபிரிந்ததுசீதை
யை மான்பின்போய்ப் *— புரிந்ததுவும் கண்பள்ளிகொள்ள

(உடையான்) உடையனான ஸர்வேச்வரனுடைய, (பேர்) ஸ்வரூபாதிகளுக்கு வாசகமான திருநாமங்களை, (ஓதி) இடைவிடாமற் சொல்லிக்கொண்டு, (திரிந்து) நீதில் நன்னெறிகாட்டி யெங்கும் ஸஞ்சரித்து, (தீர்த்தகராமின்) உங்கள் ஸஞ்சாரத்தாலே நாட்டை யிருந்தத்தேகுடியாக பரிசுத்தமாம்படி பண்ணுங்கோள். 'பண்ணுப்பெரும்பதி' என்று முன்பிருந்த ஸம்ஸாரத்தை வஸிப்பித்தென்னுதல், பழையதான ஸம்ஸாரத்தைச் சேர்த்தென்னவுமாம். (கச)

❁ பதினைந்தாம்பாட்டு. ❁

அ—இவர்களிப்படி தங்களுடம்பைப் பேணிப்பேப்களாய்த் திரிய, இவர்களுக்காக க்ருஷ்ணனவது ராமனுவதாய்க்கொண்டு சுகிஸுகுமாரமான திருமேனியோடே அவன்பட்டமிறுக்குக்களை நினைத்துவெறுக்கிறார்-

(வெம்) கொடிதான, (சமத்து) யுத்தத்திலே, எதிரிகள் விடுகிறவம்புகள் தன்மேலேபடும்படி யுடம்புக்கீடாமல் ஸாரதியாய்க்கொண்டு அர்ஜுநன் சொன்னவிடத்திலே, (தேர்) தேரை, (கடவி) நடத்திக்கொண்டு, (திரிந்ததுவும்) திருமேனியலசும்படி இதஸ்தத: ஸஞ்சரித்ததுவும், (அன்று) 'வநவாஸோமஹோதய:' என்றுசொல்லும்படி உகப்புடனே காட்டிலேஸஞ்சரித்துத் திரிகிறவன்று, (மான்) மாயாம்ருகத்தின், (பின்) பின்னே, (போய்) போய், (சீதையை) நித்யாநபாயினியான பிராட்டியை, (பிரிந்ததுவும்) பிரிந்தலைச்சறப்பட்டதுவும், (கண்) சுகிகரமான ஸந்நிதியிடத்திலே, (பள்ளிகொள்ள) பள்ளிகொண்டருள, (புரிந்ததுவும்) ஆசரித்ததுவுமான விவ்விவ செயல்களெல்லாம், (நாகத்தன்) மென்மை-குளிர்த்தி- நாற்றங்களை ப்ரக்ருதியாகவுடைய திருவனந்தாழ்வான்மேலே, (தண்பள்ளிகொள்வான்றனக்கு) குளிரப்பள்ளி

மூ—வழகியதே*நாகத்தின் தண்பள்ளிகொள்வான்றனக்கு.(கரு)

தனக்கடிமைபட்டது தானறியானேனும்* மனத்தடைய
வைப்பதாம்மாலை *— வனத்திடரையேரியாம்வண்ண மியற்று
மிதுவல்லால் * மாரிபார்ப் பெய்கிற்பார் மற்று' (கசு)

கொண்டருளக்கடவ ஸந்நிவேசாகாரனை தனக்கு, (அழகிய) சாலவழகியதாயிருந்தன, என்று வயிறுபிடிக்கிறார், கண்பள்ளி கொள்ளவென்றது- கண்ணென்று இடமாய் தறைக்கிடைக்கிட க்கவென்றபடி. (கரு)

## ❁ பதினாறாம்பாட்டு. ❁

அ— இப்படி நம்மைப்பெறுகைக் கெம்பெருமான் தானேகை தொடாயுநித்து க்ருஷிபண்ணுநிற்க வெதநனைவாசிக் கவனைப் பெறவேணுமென்னும் ருசிமாத்ரமொழிய நாம்பேற்றுக்கு யத்நம்பண்ணவேணுமென்பதொன்றுண்டோ? வென்கிறார்-

'க்ருதஸாஸ்யம்ஸரேஶ்வர்யம் ஸ்ஸாவஜ ஸஹாஸர' என்று எம்பெருமானுக்கு ஶேஷித்வம் கூறுபட்டாப்போலே தனக்கு- தனக்கு, அடிமை- ஶேஷத்வம், பட்டது- கூறுபட்டதென்னுமிடத்தை, ப்ரமாணப்ரஸித்தியாலு மாவாயுக்தசெய்யாலும், தான்- தான், அறியானேலும்- உள்ளபடி யறியமாட்டாதவனாயிருந்தானேயாகிலும், மாலை- 'நம்முடைமையைநாம் பெறவேணும்' என்று மேல்விழுகிற வ்யாமோஹனனவனை, திருவாணையிட்டு புகாதபடி தடுக்கையன்றிக்கே, மனத்து- ஹ்ருதயத்திலே, அடைய- வந்துசேரத்தக்கதாக, வைப்பது- தான்பொருந்தியிடங்கொடுத்து வைத்துக்கொள்ளுவது, இத்தலையிலே இவ்வளவு ருசிமாத்ரமுண்டானால், ஆம்- விரோதியைப்போக்கித் தன்னைத்தருகை யவனுடைய பரமிறே; அதெங்ஙனே யென்னில்? வனம்- காடெழுந்துகிடக்கிற, திடரை- ஸ்திரமானதிடரை, வருகிறவர்ஷஜலம் புறம்புபோகாதே தடையற வந்துபுகும்படி, ஏரியாம்வண்ணம்- ஏரியாம்ப்ரகாரம், இயற்றும்- யத்நித்துவெட்டுவிக்கும், இது- இத்தனை, அல்லால்- ஒழிய, பின்னை, மாரி- வர்ஷத்தை, பெய்கிற்பார்- பெய்விப்பார்,

மூ—மற்றாரியலாவார் வானவர்கோன் பாமலரோன்*

ஆர்- ஆர், அதுக்குக்கடவனான பர்ஜந்யனன்றோ வ்ருஷ்டியைத்தை யுண்டாக்கிக்கொள்ளு மன்றன்றோ ஸம்ருத்தியினு ளுண்டாக்கிக்கொள்ளலாவது, ஆனபின்பித்தலையிலே விலக்காமையே பற்றாசாகத்தானே விரோதியைப்போக்கி ஸம்ருத்தியையும் பண்ணித்தருமென்றபடி. அங்ஙனன்றிக்கே மனத்தடையவைப்பதாம்மாலை- அவன்ஸர்வஶக்தி தான்ஸர்வஜ்ஞம் என்னுமிடத்தைச் சேதநன் தானறியமாட்டானேயாகிலும் 'யஜ்ஞாவாதிஷ்டஃ' என்கிறபடியே தனக்குப்ராப்தியன்றிக்கே யிருக்கச்செய்தேயும் செய்வார்செய்யு முறைபாடுகண்ணாகிலும் ஸர்வேஶ்வரனை ஹ்ருதயத்திலே வைத்துக்கொள்வது, இவ்வளவுகொண்டே யவன்றானே விரோதியையும்போக்கி ஸம்ருத்தியையும்பண்ணிக்கொடுக்குமதுக்கு த்ருஷ்டாந்தஞ்சொல்லுகிறது:— ॥வனத்திடரித்யாதி॥ காட்டுத்திடரை வரியாய்ப்படிசொல்லுகையொழிய மற்றும் மழைபெய்விப்பாராரென்று யோஜிக்கவுமாம், அங்ஙனுமன்றிக்கே மாலைமனத்தடையவைப்பதாம்- ஸர்வேஶ்வரனை ஹ்ருதயத்திலேகொண்டுவந்து ஸமாஶ்ரயிக்கையாமோ? என்று சேஷவும், வனத்திடரைஐத்யாதி ஶேஷாம்ஶத்தை ஶேஷித்துக் கல்லுவிப்பானு மிந்த்ரனையிடுவித்து மழைபெய்விப்பானு மவன்றானேயன்றோ வென்கிறார், அப்படியே வனத்திடரில்- கவிக்க ஶீவாஸநாதிகளைப்போக்கி ப்ராப்தியுண்டாக்குவானும் தன் கல்யாணகுணங்களை வஷிப்பானு மவனேயன்றோ வென்னவுமாம்; முற்பட்டயோஜநை திருமலைநம்பியது, இரண்டாம் யோஜநை ஆழ்வானது. (கசு)

## பதினேழாம்பாட்டு.

அ—இப்படியிருக்கிற வவனையொழிய மற்றாஶ்ரயணீய ரில்லையென்கிறார்—

வானவர்- முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கெல்லாம், கோன்- நிர்வாஹகனான இந்த்ரனும், மா- ஶ்லாக்யமான, மலரோன்- திருநாபீகமலத்தை வாஸஸ்தாநமாகவுடைய ப்ரஹ்மாவும்

மூ—சுற்றும்வணங்குந் தொழிலானை*—யொற்றைப் பிறையிருந்த செஞ்சடையான் பின்சென்று * மாலைக்குறையிருந்துதான் முடித்தான் கொண்டு. (௧௭)

கொண்டதுலகங் குறளுருவாய்க் கோளரியாய்*

சுற்றும்- நேர்கொடுநேரேசென்று கிட்டமாட்டாமல் பாடே பக்கேநின்று, வணங்கும்- திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாய் விழுந்து ஆச்ரயிக்கைக்குறுப்பான, தொழிலானை- ஸௌசீல்யாதி குணசேஷ்டிதங்களாகிற வ்யாபாரங்களையுடையனாய், மாலை- ஸர்வாதிகனானவனை, ஒற்றை- அஸாதாரணமான, பிறை- சந்த்ரனை, இருந்த- தரித்திருக்கிற, செம்- சிவந்த, சடையான்- ஜடையையுடையனான ருத்ரன், பின்சென்று- தன் ஹ்ருதயத்திலே ப்ராவலம்பித்துக்கொண்டிருந்த அபிமானத்தைவிட்டுப் பின்பற்றியநுவர்த்தித்து, சரணம் இரந்து- பல்காட்டி யாசித்து, குறை- தன்னுடைய குறையை, தான்முடித்தான்- தான்தலைக்கட்டிக்கொண்டான், ஆனபின்பு மற்றார்- அவனையொழிய வேறார்தான், இயலாவார்- ஸர்வஸமாச்ரயணீயரா யிருப்பார். (௧௭)

## பதினெட்டாம்பாட்டு.

அ—இப்படி ஸமாச்ரயணீயனாய் ஸர்வாதிகனா யிருந்துவைத்துத் தன்னையொழிய மாறியு மாச்ரிதரைநோக்கும் ஸ்வபாவனென்கிறார்-

வான்கடந்தான்- ஆகாசத்தை யளவிடுவு மளவிடவொண்ணாத பெருமையையுடையனாய், தாமரை- இவனே ஸர்வேச்வரனென்னுமிடத்தைக் கோட்சொல்லித்தருகிற தாமரை போன்ற, கண்- கண்ணழகையுடையனான, மால் ஸர்வேச்வரன் நம்முடைமையை நாமே நம்மையழியமாறி ரக்ஷிக்கை நமக்குஸ்வரூப ப்ராப்தமன்றோவென்று, வழக்கு- ந்யாயமாகச்செய்த செயல்களிருந்தபடி. குறளுருவாய்- ஸ்ரீவாமநனாய்த் தன்னை யழியமாறி யாசித்து, உலகம்- பூமிமுதலான லோகத்தை, கொண்டது- வாங்கிக்கொண்டதும், கோள்- மிடுக்கையுடைத்

மூ—ஒண்டிறலோன்மார்வத்து கிர்வைத்ததும்*— உண்டதுவும்
தான்கடந்தவேழுலகே தாமரைக்கண்மாலொருநாள்*
வான்கடந்தான் செய்தவழக்கு. (௧௮)

வழக்க ன்றுகண்டாய் வலிசகடஞ் செற்றாய் *
வழக்கென்று நீமதிக்கவேண்டா*—

தான, அரியாய்- நாஸிம்ஹரூபியாய்க்கொண்டு, ஒண்- அழகிய, திறலோன்- மிடுக்கையுடையனான ஹிரண்யனுடைய, மார்வத்து- மார்விலே, உகிர்- உகிரை, வைத்தது- நாட்டிப்பிளந்துபுகட்டதும், ஒருநாள்- ஒருநாளிலே, தான்கடந்த- தாளனந்துகொண்ட, ஏழுலகு- ஸப்தலோகங்களை, உண்டது- தாரதம்யாமம் பாராதே திருவயிற்றிலே யெடுத்துவைத்து ரோக்கியும்செய்த செயலிவைகள்கிடீர், வழக்கு- ந்யாயம், யுக்தமென்றபடி. பிறர்க்கொருகாயஞ் செய்தானுயிருக்கையன்றிக்கே தனக்கடைத்தகாயஞ் செய்தானுயிருக்கை, உடையவனுடைமையை ரக்ஷிக்கயுக்தமிறே. (௧௮)

❁ பத்தொன்பதாம்பாட்டு. ❁

அ—நம்மையழியமாறியும் நம்முடைமையை நோக்குகை நமக்குயுக்தமென்று அவன்கினைத்திருக்க இவரவனுடைய ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்து இது அயுக்தமென்று வயிறெரிகிறார்-

திருமாலே- பெரியபிராட்டியா ரென்புகுருகிறதோவென்று வயிறெரிந்து 'ஸம்ஸ்ப்ருஷ்டா' என்று ஸம்ஸ்பர்சம் பண்ணி நோக்கவேண்டும்படி நிரதிசயஸௌகுமார்யனானவனே? இப்படியிருக்கிற நீ சிறுபிள்ளையாய்க்கொண்டு அதிஸௌகுமார்யமான திருவடிகளாலே, வலி- அதிப்ரபலமான, சகடம்- சகடத்தை, செற்றாய்- உதைத்து முறித்து விழவிட்டாய், வழக்கு- பிராப்தியுக்தம், அன்றுகண்டாய்- அன்றுகிடாய், வழக்கென்று- ரக்ஷகனான நமக்கு விரோதிகளைப்போக்கி நோக்குகை யுக்தமன்றோவென்று, நீ- இந்த ஸாஹஸப்ரவ்ருத்தியிலே அநுஸந்தானங்கூட அற்றிருக்கிற நீ, மதிக்கவேண்டா—

மு—குழக்கன்று தீவிளவின்காய்க்கெறிந்த தீமைதிருமாலே*
பார் விளங்கச்செய்தாய் பழி. (௧௯)

பழிபாவம்கையகற்றிப்பல்காலும் நின்னை* வழிவாழ்வார்
வாழ்வராம்மாதோ!*— வழுவின்றிநாரணன்றன்னாமங்கள்
நன்குணர்ந்து நன்கேத்தும்* காரணங்கள் தாம்

ஸாஹஸிபண்ணவேண்டா, அதுக்குமேலே குழக்கன்று- ஸவாஸுரனை குழக்கன்றைக்கொண்டு, தீ- அஸுர வடிவாய்த்தீதான விளவின்- விளாவின், காய்க்கெறிந்த- காய்க்கெறிந்த, இந்தத் தீம்பான செயலானது, பார்- பூமியிலே, விளங்க- ப்ரகாசிக்கும்படி, பழி- தப்பாக, செய்தாய்- செய்தாய், அவன்புகழென்றிருக்க இவர்பழியென்று வயிறுபிடிக்கிறார், விபூதியிலேகதேசத்தை நோக்கப்புக்க உபயவிபூதியையு மழிக்கப் பார்த்தாயென் றின்னாதாகிறார். (௧௯)

## இருபதாம்பாட்டு.

அ— ஸமாச்ரயணத்தில் முதலடியிட்டாரோடு முடியத்தலைக்கட்டப்பெற்றாரோடு வாசியற க்ருதக்ருத்யரென்கிறார்—

பழி- தாங்களறியாதிருக்கப் பிறரறிந்தேறிடும் அவகீர்த்தியையும், பாவம்- அறிந்தநுஷ்டிக்கப்பட்ட ஹிம்ஸாதிரூபமான பாபத்தையும், கையகற்றி- கைகழியவிட்டு பல்காலும்- ஸர்வகாலமும், நின்னை- உன்னை, வழி- ஶாஸ்த்ரங்களிற்சொல்லுகிற கட்டளையிலே வழிப்பட்டுநின்று, வாழ்வார்- போகரூபமாக ஆச்ரயிக்குமவர்களும், நாரணன்றன்- நாராயணஶப்தவாச்யனாகையாலே ஸர்வரக்ஷகனாயிருக்கிறவனுடைய, நாமங்கள்- திருநாமங்களை, வழு- விச்சேதம், இன்றி- இல்லாதபடி, ப்ரேமயுக்தராய்க்கொண்டு நன்கு- அழகிதாக, உணர்ந்து- அறிந்து, ப்ரேமபரவசராய்க்கொண்டு நன்கு- அழகிதாக, ஏத்தும்- ஏத்துமவர்களுக்கு, காரணங்கள்தாம்- ஹேதுக்களானவைதாம், தத்வத்ரயான உபாதாநம், ததீசநமாநஸாக்ஷி, ததீசாநமநஸாக்ஷ்யம், அதுக்கடியானவுன் க்ருபாக்ஷமென்றப்போலே சொல்லுகிறவிவற்றை, தாம்- தாங்கள்,

மூ— உடையார் தாம். (உ0)

தாமுளரே தம்முள்ளமுள்ளுளதே* தாமரையின்பூவுளதே
யேத்தும் பொழுதுண்டே *— வாமன்றிருமருவு தாள்மருவு
சென்னியரே செவ்வே* யருநரகஞ் சேர்வதரிது. (உக)

---

உடையார்- பெற்றுடையாரா யிருக்கிறவர்களுமான இவ்விரண்டதிகாரிகளும், வாழ்வராம்- ஸர்வோத்க்ருஷ்டராய் வாழ்ப்பெறுவர்கள், மாதோ! வென்கிறவிது ஓரவ்யயமாய் இதோ! ஆச்சர்யமிருந்தபடியென்? என்னும் பொருள்பெற்றுக்கிடக்கிறது. (உ0)

❀ இருபத்தோராம்பாட்டு. ❀

அ—எம்பெருமானை ஸஜிக்கைக்கீடான காரணஸம்பத்திற் குறைவற்றிருக்கச் செய்தேயும் ஸம்ஸாரிகள் விலக்கடிதேடிக்கொண்டு போய்ப் புகுகிறபடி எங்ஙனே! யென்று விஸ்மயப்படுகிறார்-

தாம்- க்ருபயினாவகாரணமான கரணகளேபரவிசிஷ்டரான தாங்கள், உளரே- முந்துறமுன்ன முளராயிருந்தார்கள், தம்- ஜ்ஞாநஸம்யாநவரிகாரமான தந்தாமுடைய, உள்ளம்- மநஸ்ஸு, உள்ளுளதே- புறம்பே தேடவேண்டாதபடி யுண்டாயிருந்ததே, தாமரையின்பூ- திருவடிகளிலே பணிமாறுகைக்குறுப்பான கைக்கெட்டின தாமரைப்பூ, உளதே- உண்டாயிருந்ததே, ஏத்தும்- வாய்விட்டுப்புகழுகைக்கீடான பொழுது- காலம், உண்டே- உண்டாயிருந்ததே, வாமன்- தன்னுடைமை பெறுகைக்குத் தன்னை யிரப்பாளனாக்கும் சீர்மையையுடையனான ஸர்வேச்வரனுடைய, திருமருவு- ஸௌந்தர்யத்துக்காச்ரயமாய் ப்ரஜாரவிநாசி ஸித்தமான, தாள்- திருவடிகளிலே, மருவு- ஸம்ச்லேஷாநுகூலமாகச் சேருகைக் கநுகூலமான, சென்னியரே- தலையையுடையரா யிருந்தார்கள், இப்படியிருக்க செவ்வே- நேர்கொடுநேரே, அரு- கொடிதான, நரகம்- ஸம்ஸாரத்தை, சேர்வது- சென்றுகிட்டுகை, அரிது- அரிது, இங்ஙனேயிருந்தபின்பி வர்கள் விலக்கடிதேடிக் கொண்டு திரிகிறபடி எங்ஙனேயோ! வென்று விஸ்மயப்படுகிறார். (உக)

மூ— அரிய தெளிதாகுமாற்றலால்மாற்றிப் * பெருகமுயல்வாரைப்பெற்றால் *— கரியதோர் வெண்கோட்டுமால்யானை வென்று முடித்தன்றே * தண்ண (தோ) கோட்டுமாமலரால் தாழ்ந்து. (உஉ)

## இருபத்திரண்டாம்பாட்டு.

அ— தங்களுக்கொரு வ்யதிரேகமுண்டாகில் யத்நிருந்ததேயாகிலும் அவன்பக்கலிலே ந்யஸ்தபரராயிருப்பார்க்கு எளிதாகக்கூறுமயிக் கலாம்படியன்றோ வவன் நீர்மையிருப்பதென்கிறார்-

(ஆற்றலால்) துஷ்கரமானவை ஸுகரமாக்கவல்ல சக்தியோகத்தாலே, (மாற்றி) உன்பேற்றுக்குறுப்பாக நீ யொன்றும் யத்நித்துச் செய்யவேண்டாமென்று ஸ்வாதந்த்ர்யமாக இவன் பண்ணும் ப்ரவ்ருத்திகளை யடையமாற்றி ஞானம் ப்ரேமம்முதலாக் கைங்கர்ய பர்யந்தமாக விவனுக்குச் செய்யவேண்டும் ஸர்வ கார்யமும் தன்தலையிலே யேறிட்டுக்கொண்டு இவனுக்கு ஹ்ருதயத்திலே அபயமாம்படி தன்பேறாக ஸர்வ ரக்ஷைகளையும் பண்ணுகையிலே, (பெருக) மிகவும், (முயல்வாரைப்பெற்றால்) உத்ஸாஹியாகிற்கும் ஸ்வாமிகளைப் பெற்றால், (அரியது) பெறுதற்கரிதான ஸமஸ்தமும், (எளிதாகும்) எளிதாகாநிற்கும், அதெங்கே கண்டோமென்னில்? (கரியது) கறுத்த நிறத்தையும், (வெண்) வெளுத்த, (கோடு) கொம்பையும், (மால்) பெரிய வடிவையு முடைத்தான, (யானை) ஆனையானது, (வென்று) அடிமைக்குக் காற்கட்டான முதலையை ஜயித்து, (முடித்தன்றே) அழியச்செய்தன்றே, (தண்) குளிர்ந்த, (கோடு) பொய்கைக்கரையிலே, (மா) ஸ்ரேஷ்டமான, (மலரால்) தாமரைப் பூக்களைக்கொண்டு, அரைகுலையத் தலைகுலையவந்து தோன்றி விரோதியைப்போக்கி ரக்ஷித்தருளின அவன்திருவடிகளிலே, (தாழ்ந்து) தாழ்ந்தடிமை செய்யப்பெற்றது (தாழ்ந்து) தாழ்ந்ததென்றபடி. (கோடென்று) கரைக்குப்பேர், தட்டம்— குளிர்த்தி, குளிர்ந்த பொய்கைக்கரையிலே யென்றபடி. 'தண்தோட்டுமாமலர்' என்று பாடமானபோது குளிர்ந்தவிதழையுடைத்தான பெரியவ்ருக்ஷத்திலே யென்று பொருளாகக்கடவது. (உஉ)

மூ—தாழ்ந்துவரங்கொண்டு தக்கவகைகளால் * வாழ்ந்துகழிவாரைவாழ்விக்குந் *— தாழ்ந்தவிளங்கனிக்குக் கன்றெறிந்துவேற்றுருவாய் * ஞாலமளந்த டிக்கீழ் கொண்டவவன். (உங)

---

## இருபத்துமூன்றாம்பாட்டு.

அ—தன்னை யாச்ரயித்தார்களுடைய விரோதிகளைப் போக்கி ஸம்ருத்தியையும் பண்ணிக்கொடுத்து தத்வாதிகாரானுகுணமாக ரக்ஷிக்குமென்கிறார்.

(தாழ்ந்த) கனியப்பழுத்துக் கிடக்கைபாலே கரையளவும் வரத் தாழ்ந்துகிடக்கிற, (விள) அஸுரமயமான விளாவினுடைய, (கனிக்கு) பழங்களுக்கு, (கன்று) அஸுரமயமான கன்றை, (எறிந்து) எறிகோலாக வெடுத்தெறிந்து, (வேற்றுருவாய்) ஸ்ரீயःபதியான தன்னுருவைவிட்டு அர்த்தியான வாமநரூபத்தை யுடையனாய்க்கொண்டு, (ஞாலம்) பூமியை, (அளந்து) அளந்து, (அடிக்கீழ்) தன்காற்கீழே, (கொண்டு) இட்டுக்கொண்டு, (அவன்) அந்தஸர்வேச்வரன், (தாழ்ந்து) 'நநமேயம்' என்கிறஸ்வாதந்த்ர்யத்தைப் புகட்டித் தன்திருவடிகளிலேவணங்கி, எங்களபிமதம் நீயே பண்ணித்தரவேணுமென்று, (வரம்) தன்ப்ரஸாதத்தை, (கொண்டு) கைதொடுமானமாகப்பிடித்துக்கொண்டு (தக்க) தந்தாமுடையவதிகாரங்களுக்குத் தகுதியாயிருந்த, (வகைகளால்) ப்ரகாரங்களாலே. (வாழ்ந்து) ஐச்வர்யம் கைவல்யம் ஸ்வரூபாநுரூபமாகிற ஸ்வஸ்வாபிமதங்களைப் பெற்று, (கழிவாரை) ஸர்வோத்தரராய்த் தலைக்கட்ட வேணுமென்றிருக்குமவ்வதிகாரிகளையும், (வாழ்விக்கும்) அவர்கள் ருசிக்குச்சேரவுபாஸநத்துக்கு மீடான தத்தத்வங்களைக் கொடுத்து ரக்ஷியாநிற்கும். (உங)

## இருபத்துநாலாம்பாட்டு.

அ—இவனுண்டானவன்று இவனபேக்ஷிதங்கொடுத்து ரக்ஷித்தானென்னுமிதோரேற்றமோ அடியேதுடங்கி யிவனுடைய ஸத்தையை நோக்கிக்கொண்டுபோருகிறவனுக்கு என்கிறார்.

மூ — அவன்கண்டாய்நன்னெஞ்சே யாரருளுங்கேடும்* அவன்கண்டாயைம்புலனாய்நின்றான்* — அவன்கண்டாய் காற்றுத்தீநீர்வான் கருவரைமண்காரோதச் * சீற்றத்தீயாவானுஞ்சென்று. (உச)

(நல்) ஹிதவசனங் கேட்டாலுக்கும் நல்ல, (நெஞ்சே) நெஞ்சே, (ஆர்) பரிபூர்ணமான க்ருபையாலே யுண்டாகக்கடவ, (அருளும்) மோக்ஷமும், (கேடும்) நிக்ரஹகார்யமாய் வரக்கடவ ஸம்ஸாரமாகிற அநர்த்தரூபமாகிற இவற்றுக்கு, (அவன்கண்டாய்) நிர்வாஹகனவன் கிடாய், இரண்டுக்கும் பொதுவான ஶரீரத்துக்கு ஆரம்பகமான, (காற்று) வாயு, (தீ) அக்நி, (நீர்) ஜலம், (வான்) ஆகாஶம், (மண்) ப்ருதிவிகளாகிற பூதங்களும், (கரு) த்ருடகாயமான பெரிய, (வரை) பர்வதங்களாகிற இவற்றை யடியிலே யுண்டாக்குவானும், (அவன்கண்டாய்) அவன்கிடாய், (சென்று) ஸம்ஹாரகாலத்திலே இவற்றையழிக்க வொருப்பட்டுத் திருவுள்ளஞ்சென்று அதுக்குபகரணமாய், (கார்) கறுத்த, (ஓதம்) கடலை, (சீற்றம்) சீறிச்சுடக்கடவ, (தீயாவானும்) படபாக்நிக்கு நிர்வாஹகனாயிருப்பானும், (அவன்கண்டாய்) அவன்கிடாய், (ஆக) த்யாஜ்யோபாதேயங்க ளிரண்டுக்கும் நிர்வாஹகனென்றபடி, (அருளென்று) அருளின்கார்யமான மோக்ஷத்தை லக்ஷிக்கிறது, அன்றிக்கே அநுக்ரஹஹேதுவான புண்யத்தையும் நிக்ரஹஹேதுவாய் அநர்த்தரூபமான பாபத்தையுஞ் சொல்லவுமாம். (உச)

## இருபத்தஞ்சாம்பாட்டு.

அ — இப்படி ஸர்வஸாதாரணனாய்நின்று ரக்ஷிக்குமளவன்றிக்கே ஆஶ்ரிதவிஷயத்தில் அஸாதாரணனாய்நின்று பக்ஷபதித்து ரக்ஷிக்கும்படியை யருளிச்செய்கிறார்.

(விண்ணவர்) பரமபதவாஸிகளான நித்யஸூரிகள், (தம்) தங்கள், (வாய்) வாய்விட்டேத்துகைக்கு விஷயமாகையாலே, (ஓங்கு) உத்துங்கமாய், (தொல்) ஸ்வாபாவிகமான, (புகழான்) கல்யாணகுணங்களையுடைய ஸர்வேஶ்வரன், (வந்து)

மூ—சென்றதிலங்கைமேல் செவ்வேதன்சீற்றத்தால் * கொன்ற திராவணனைக்கூறுங்கால்* — நின்றதுவும்வேயோங்குதண்சாரல் வேங்கடமே * விண்ணவர்தம் வாயோங்குதொல்புகழான் வந்து.

வந்தித்தவனை வழிநின்றவைம்பூதம் *
ஐந்துமகத்தடக்கி யார்வமாய்*—

---

அங்குநின்றும் வந்தவதரித்து, (செவ்வே) ஸஜ்ஜுத்தாலன்றிக்கே நேர்கொடுநேரே 'அஹியாதா' வென்னும்படி, (சென்றது) எடுத்துவிட்டுச்சென்றது, (இலங்கைமேல்) ஐந்த்ராதிகள்கேட்கவே வயிறுபிடிக்கும்படியான ஐம்மெகெயிலே, (தன்சீற்றத்தால்) 'வ்ருஹதௌவ' என்கிறபடியே அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே அபெக்ஷிதஸமயத்திலே உதவி ஈவேங்காட்டக்கடவதான கோபத்தாலே, (கொன்றது) கொன்றுவிழவிட்டது, (இராவணனை) அவத்யனாக வரம்பெற்றுடைய ராவணனை, (கூறுங்கால்) அவன்படிகளைச் சொல்லப்புக்கால், (நின்றதுவும்) அவதாரகாலத்தி லிழந்தவர்களிழவைப் பரிஹரிக்கைக்காக வெழுந்தருளிநின்றதுவும், (வேய்) மூங்கில், (ஓங்கு) வளர்ந்திருக்கிற, (தண்) குளிர்ந்த, (சாரல்) பர்வதங்களை யுடைத்தான, (வேங்கடமே) திருமலையிலே, விண்ணவரித்யாதிக்கு ராவண வயவஸாநாகம் ப்ரஹ்மாதிகளாலே ஸ்துதிக்கப்படுகிற புகழை யுடையவனென்று பொருளாகவுமாம். (உரு)

❁ இருபத்தாறும்பாட்டு. ❁

அ—ஸௌலப்யமான திருமலைதான் பின்னையுமிவர்க்காகவுமோக்ஷ ஸமயங்கே திருவுள்ளஞ்சென்று திருமலைக்குள்ள வைலக்ஷண்யத்தைச்சொல்லுகிறார்-

(வந்தித்து) அபிவாதநம்பண்ணிநின்று திருவடிகளிலேதலைமடுத்து, (அவனை) அவனையாச்ரயித்து ஸகலத்ரவ்ய ஸ்வபாவங்களாய்க்கொண்டு, (வழி) நடுவே, (நின்ற) நின்று தகைகிற, (ஐம்பூதமும்) ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களையும், (ஐந்தும்) ச்ரோத்ராதிகளான ஐந்த்ரியபஞ்சகத்தையும், (அகத்தடக்கி) ஸ்வதந்த்ரவ்யவஹாரம்படி நியமித்து, (ஆர்வமாய்)

மூ—உந்திப்படியமரர்வேலையான் பண்டமரர்க் கீந்த * படியமரர் வாழும் பதி.
(உ௬)

பதியமைந்துநாடிப் பருத்தெழுந்தசிந்தை * மதி யுரிஞ்சி வான்முகடுநோக்கிக் *— கதிமிகுத்தங்கோல் தடியோடும்

---

அவன்பக்கலிலே ஆஸ்திக்யத்தை யுடையராய்க்கொண்டு, (உந்தி) ஒருவர்க்கொருவர் முற்கோலிவந்து, (படி) ஆஶ்ரயிக்கும்படி, (அமரர்) ப்ரஹ்மாதிதேவர்களுக்காக, (வேலையான்) திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரன், (பண்டு) 'யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:' என்னும்படி முற்பாடரான, (அமரர்க்கு) நித்யஸூரிகளுக்கு, (ஈந்த) ஸ்வஸ்வரூபதாநம் பண்ணுவாரைப்போலே கொடுத்தருளிற்று, (படியமரர்) பூஸுரரான ஸ்ரீவைஷ்ணவர்கள், (வாழும்) அநுபவித்தடிமை செய்துவாழுகிற, (பதி) திருமலை, (பண்டமரர்க்கு) முன்புநித்யஸூரிகளுக்குக் கொடுத்ததென்றுமாம். (உ௬)

## இருபத்தேழாம்பாட்டு.

அ—இப்படி திருமலையிலே நிலையை ஸநாஸமயித்தவர் அங்கு நினைத்த பரிமாற்றம்பெறுமையாலே நினைத்தபடி பரிமாறலாம் பரமபதத்திலிருக்கிற ஸர்வேஶ்வரனைத் தேடாநின்றது என்னெஞ்சு என்கிறார்.

(பதி) திருமலையாகிற ஸ்தாநத்திலே, (அமைந்து) வேரூன்றிநின்று, (நாடி) ஆஸ்திக்யந்தோற்ற வெங்கேயெங்கேயென்று தேடிக்கொண்டு (பருத்து) ஶதஶாகமாகப்படைத்து, (எழுந்த) கிளம்பின, (சிந்தை) ஜ்ஞாநமயத்தை யுடைத்தாய், (மதி) சந்த்ரபதத்தையும், (உரிஞ்சி) உரோசிக்கொண்டு அவ்வருகுபட்டு, (வான்முகடு) அண்டபித்தியிலேசெல்ல, (நோக்கி) கடாக்ஷித்து, (மால்) ஸர்வலோகஶரண்யனான பரிபூர்ணனைப் க்கொண்டு பரமபதத்திலே தன்மேன்மைதோற்ற வெழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனை, (தேடி) தேடி, (ஓடும்) விட்டவிடத்தில்விடாதே பற்றிச்செல்லுகிற, (மனம்) என்னுடைய நெஞ்சானது, (கதிமிகுத்து) கமநவேகத்தை யுடைத்தாய்

ரூ—கொழுந்தேபோன்றதே* மால்தேடியோடும் மனம். (உஎ)

மனத்துள்ளான்வேங்கடத்தான் மாகடலான் * மற்றுநினைப்பரிய நீளரங்கத்துள்ளான் *— எனைப்பலரும்தேவாதிதேவனெனப்படுவான் * முன்னொருநாள் மாவாய்பிளந்த மகன். (உஅ)

த்கொண்டு, (ஆம்) அழகிய, (கோல்) கொம்பை, (தேடி) தேடி, (ஓடும்) பரந்துசெல்லுகிற, (கொழுந்தேபோன்றது) கொழுந்துபோலேயிராநின்றது, * மாகவைகுந்தம் காண்பதற்கென்மனமேக மெண்ணுமாப்போலே (உஎ)

### இருபத்தெட்டாம்பாட்டு.

அ—தன்திருவுள்ளமிப்படி ஆஸ்ரிதவத்ஸலனாமே யவனு மத்ஸந்நிதிவிஷ்ணுவைக்கொண்டு கோயில் திருமலை முதலான தன்னிருப்பிடங்களை யுபேக்ஷித்துத் தன்திருவுள்ளத்தை வந்து புகுந்தாரென்கிறார்-

(எனைப்பலரும்) அஸம்க்யாதரான வேதவைதிகஸார்வபௌமர்கள்பலரும், (தேவாதிதேவன்) நித்யஸூரிகளுக்குநிர்வாஹகனை பெரியமேன்மையுடையவன், (என்படுவான்) என்றுசொல்லப்படாநிற்பானாய், ஜகத்ரக்ஷணார்த்தமாக அங்குநின்றும்வந்து, (மா) பரப்பையுடைத்தான, (கடலான்) திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டருளாநிற்பானாய், (முன்) முன்பே, (ஒருநாள்) ஒருநாளிலே, க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, (மாவாய்) கேஸிவாயை, (பிளந்த) அநாயாஸேந பிளந்துபொகட்ட, (மகன்) சிறுபிள்ளையாய், (மற்றும்) அதுக்குமேலே, (நினைப்பரிய) நினைக்கவரிதான, நீர்மையேற்றத்தை யுடையனாய்க்கொண்டு, (நீள்) ஸௌலப்யமிக்கிருக்கிற, (அரங்கத்து) கோயிலிலே, (உள்ளான்) ஸம்ஸாரிகளை ரக்ஷித்தல்லது பேரேனென்று கண்வளர்ந்தருளுமவனாய், (வேங்கடத்தான்) திருமலையிலே ஸர்வஸுலபனாய்க்கொண்டு எழுந்தருளிநிற்கிறவன், என்னைப்பெறுகைக்காக முன்புவிரும்பின அவ்வவஸ்தலங்களை யுபேக்ஷித்து இப்போது அத்யந்தநிவிஷ்டனாய்க் கொண்டு, (மனத்து) என்னெஞ்சிலே (உள்ளான்) நித்யவாஸம்பண்ணுகின்றான். (உஅ)

மூ—மகனாகக்கொண்டெடுத்தாம் மாண்பாயகொங்கை *
அகனாரவுண்ப னென்றுண்டு *— மகனைத்தாய்தேறாதவண்ணம்
திருத்தினாய் தென்னிலங்கை * நீறாகவெய்தழித்தாய் நீ. (உகூ)
நீயன்றுலகளந்தாய் நீண்டதிருமாலே *

❁ இருபத்தொன்பதாம்பாட்டு, ❁

அ—'மாவாய்பிளந்தமகன்' என்று ப்ரஸ்துதமான க்ருஷ்ணாவதாரத்திலே கால்தாழ்ந்து சுழியாறுபடுகிறார்-

(தென்) வகூமானதக்ஷிணதிசையிலே கட்டளைப்பட்ட, (இலங்கை) லங்கையை, (நீறாக) பஸ்மமாகும்படியாக, (எய்து) சிறந்தவஸ்த்ரங்களை க்ஷணமான திருவில்லாலே திருச்சரங்களை நடத்தி, (அழித்தாய்) முடித்துப்புகட்டவனே, (நீ) இப்படியிருக்கிற நீ, (மகனாக) பருவம் நிரம்புவதுக்கு முன்னே யசோதைப்பிராட்டியைப் போலே புத்ரனாகவே, (கொண்டு) புரையறவிஸ்வஸித்துக் கொண்டு, (எடுத்தாள்) பரிவுதோற்ற ஓசமுக்காகத் தூக்கியெடுத்த பூதனையுடைய, (மாண்பாய) பாலின்வநத்தாலே விம்மியொளிவிடுகிற, (கொங்கை) அழகியமுலையை, (அகன்) வயிறு (ஆர) நிறையத் தக்கதாக, (உண்பனென்று) உண்பனென்று, (உண்டு) கஷிநிவெரந்தோற்றப் பாலோடே ப்ராணனும்போம்படி யமுதுசெய்து, (மகனை) புத்ரனானவுன்னை, (தாய்) தாயாரான யசோதைப்பிராட்டி, (தேறாதவண்ணம்) விஸ்வஸியாதே துணுக்குத்துணுக்கென்று வயிறுமறுகும்படி, (திருத்தினாய்) ரக்ஷித்துவிட்டாய். (உகூ)

❁ முப்பதாம்பாட்டு ❁

அ—இப்படி க்ருஷ்ணவிஷயமும் ராமவிஷயமும் மநுஸந்தித்து ப்ரஸங்கத்திலே யவற்றோடே சேர்ந்த அவதாரங்களையும் பலசெஷ்டிதங்களையு மநுஸந்தித்துவீடுதராகிறார்-

(பேர்) பெரிய, (ஓதம்) கடல்போலேயிருண்டு குளிர்ந்த, (மேனி) திருமேனியையுடையனாய், (பிரான்) அவ்வழகை முற்றூட்டாக வென்னையநுபவித்த உபகாரகனாய், (நீண்ட) அபரிச்சேத்யவைபவனான், (திருமாலே) ஸ்ரீயஃபதியே? (நீ)

மூ—நீயன்றுல கிடந்தா யென்பரால் * — நீ யன்றுகாரோதம்
முன்கடைந்து பின் னடைத்தாய் மாகடலைப் *
பேரோதமேனிப்பிரான். (௩௰)

பிரா னென்று நாளும்

---

இப்படி ஸர்வாதிகனான நீ, (அன்று) ஆச்ரிதனான இந்த்ரன் ஐச்வர்யத்தையிழந்து கண்ணுங்கண்ணீருமாய்த் திருவடிக ளிலே வந்துவிழுந்தவன்று, மஹாபலிபக்கலிலே அர்த்தியாய்ச் சென்றிரந்து, (உலகு) ஜகத்தை, (அளந்தாய்) திருவடிகளாலே அளந்துகொண்டாயென்றும், (அன்று) ப்ருதிவியானது ப்ரளயத்திலேகரைந்து அண்டபித்தியிலே சென்றொட்டினவன்று, நீருக் கும் சேற்றுக்கு மிறுயாதவடிவைக்கொண்டு, (நீ) ரக்ஷகனான நீ, (உலகு) அந்த ப்ருதிவியை, (இடந்தாய்) ப்ரளயத்திலேமுழுகி இடந்தெடுத்துக்கொண் டேறினையென்றும், (அன்று) தேவாஸுர ஸமாவேசத்தாலே நஷ்டஸ்ரீகராய்க்கொண்டு இந்த்ராதிகள் சரண ம்புக்கவன்று, (நீ) ஸர்வசக்தியான நீ, (கார்) கறுத்தநிறத் தையுடைத்தான, (ஓதம்) கடலை, பிராட்டியை லபிக்கைக்காக, (முன்) முற்பட, (கடைந்து) கடைந்து, (பின்) பின்பொருகா லத்திலே, அவள் முகமலர்ச்சிகாண்கைக்காக, (மா) தத்ஜாதீ யமான பெரிய, (கடலை) கடலை, (அடைத்தாய்) அடைத்தருளி னையென்றும், (என்பர்) உன்படியை யறியக்கடவ ப்ராமாணிக ரான பெளஷிகள் சொல்லாநின்றார்கள், இவை சிலவேஷ்டிதங்களிரு க்கும்படியே என்று விஸ்மயிக்கிறார். (௩௰)

❁ முப்பத்தோராம்பாட்டு. ❁

அ—இப்படி ஸர்வேஶ்வரனை உன்திருவடிகளை ப்ராப்யப்ராபகங்களைக்கொண்டு ஆஶ்ரயிக்குமவர்கள் ஸர்வாங்கஸுந்தரமான அவன்திருமேனியை நித்யாநுபவமாக அநுபவிக்கப்பெ றுவரென்கிறார்.

பிரானென்று— இவ்வாத்மாவுக்கு வகுத்த ஶேஷியானவ னே? யென்று, நாளும்- இதரவிஷயாநுபவத்துக் குறைப்பாய்க் கொண்டு பாழேகழிகிறநாளிலே, பகவதநுபவத்துக்கு யோக்

மூ—பெரும் புலரியென்றுங் * குராநற் செழும் போது கொண்டு *— வராகத்தணியுருவன் பாதம்பணியுமவர்கண்டீர் * மணியுருவங்காண்பார் மகிழ்ந்து. (௩௧)

மகிழ்ந்தது சிந்தை திருமாலே * மற்றும் மகிழ்ந்தது உன் பாதமே போற்றி *— மகிழ்ந்தது அழலாழி சங்கம்

---

மாய்க்கொண்டு ஆடிக்கழிஞ்சுபெற்றுச் சொல்லுகிற 'ஸு ப்ரபாதாவசநிஸா' என்கிறபடியே பெரும்- பெரியதொரு, புலரியென்று- நல்விடிவுண்டாவதேஎன்று கூசரித்துக்கொண்டு, குரா- குராவினுடைய, நல்- அழகிதாய் விலக்ஷணமான, செழும்- செவ்வியையுடைத்தான, போது- பூவை, கொண்டு- ஸம்பாதித்துக்கொண்டு, வராகம்- வராஹ ஸஜாதீயமாய், அணி- அழகுதானொரு வடிவுகொண்டாப்போலே யிருக்கிற உருவன்- திவ்யவிக்ரஹத்தையுடையவன், பாதம்- திருவடிகளை பணியுமவர்கண்டீர்- ஸநாதிஸேநரா யாஸ்ரயிக்குமவர்கள் கிடீர், மணி- நீலரத்நம்போலே யிருண்டுகுளிர்ந்த, உருவம்- வடிவழகை, மகிழ்ந்து- உகந்து, காண்பார்- கண்டநுபவிக்கப் பெறுவர்கள். (௩௧)

## ❁ முப்பத்திரண்டாம்பாட்டு. ❁

அ—இப்படி உபதேசித்தவநந்தரம் தம்முடைய கரணங்கள் உபதேசநிரபேக்ஷமாக வங்கே ப்ரவணமானபடியை யருளிச்செய்கிறார்-

(திருமாலே) இச்சேர்த்தியழகாலே அநுபவித்திவர்களை மகிழ்ப்பண்ணும் ஸ்ரிய:பதியானவனே? (சிந்தை) ப்ரீதிதகவம் புதியதுண்டறியாத வென்னெஞ்சானது, (மகிழ்ந்தது) உன்னை யநுபவித்து ப்ரீதியுக்தமாய்த்து 'நேத்ரேவெஞ்சாவாமுநாஸ:' என்னும்படி (மற்று) அநந்தரமெண்ணப்படும் என்வாகிந்த்ரியமாவது, (உன்) ஸ்ரிய:பதியான உன்னுடைய, (பாதம்) திருவடிகளை, (போற்றி) ஏத்தி, (மகிழ்ந்தது) மகிழ்ப்பெற்றது, (ஆகம்) என்ஹ்ருதயமானது, (அழல்) ப்ரதிபக்ஷத்தின்மேலே யழலையுமிழாநின்றுள்ள, (ஆழி) திருவாழி, (சங்கம்)

மூ—இவைபாடியாடும் * தொழிலாகஞ் சூழ்ந்து அணிந்து. (௩௨)

அணிந்ததுசிந்தைதுழாயலங்கல் * அங்கமணிந்தவன்பேருள்
ளத்துப்பல்கால் *— பணிந்ததுவும்வேய்பிறங்குசாரல்
விரல்வேங்கடவனையே * வாய்திறங்கள்சொல்லும்வகை. (௩௩)

ஸ்ரீராமாநுஜநாமாகிற, (இவை) இவற்றை, (பாடி) பாடி, (ஆடும்) ஆடுகையாகிற, (தொழில்) தொழிலிலே, (சூழ்ந்து) வ்யாபமாய்க்கொண்டு, (அணிந்து) அத்யவஸித்து, (மகிழ்ந்து) உகக்கப்பெற்றது. (௩௨)

## ❁ முப்பத்துமூன்றாம்பாட்டு. ❁

அ—கீழ் ஸமாஸ்ரயத்தால் பிறந்த ஹர்ஷத்தைச் சொல்லிற்று, இதில் அவனை ஸமாஸ்ரயிக்கையாலே கரணங்கள் அத்யவஸித்தபடியை யருளிச்செய்கிறார்—

(துழாயலங்கல்) திருத்துழாய்மாலையாலே, (அணிந்தவன்) அலங்க்ருதனானவனுடைய, (பேர்) ஒப்பனையழகுக்கு வாசகமான திருநாமங்களை, (உள்ளத்து) ஹ்ருதயத்தில், (சிந்தை) மநோரூபமானது, (அணிந்தது) உறுதிப்பாடாக ஸமாஸ்ரயிக்கவேணுமென்று அத்யவஸித்தது; இனி (அங்கம்) ஸரீரமானது, (பல்கால்) ஸர்வகாலமும், (பணிந்தது) வணங்குவது, (வேய்) மூங்கில்கள், (பிறங்கு) மிக்கிருந்துள்ள, (சாரல்) பக்ஷத்தையுடைய திருமலையிலேவர்த்திக்கிற வழகாலே, (விறல்) நம்மையெழுதிக்கொள்ளும் மிடுக்கையுடைய, (வேங்கடவனை) திருவேங்கடமுடையானை, (வாய்) என்னுடைய வாகிந்த்ரியமானது, (திறங்கள்) அவனுடைய கல்யாணகுணாதிகளான ஸ்வபாவங்களை, (சொல்லும்வகை) சொல்லும் ப்ரகாரத்திலே, (அணிந்தது) அத்யவஸித்தது. (௩௩)

## ❁ முப்பத்துநாலாம்பாட்டு, ❁

அ—ஸர்வலோகப்ரியமான விப்பெரியபேறுதான் தேவருடையகடாக்ஷத்தாலே பெற்றேனென்கிறார்—

மூ—வகையாலவனியிரந்தளந்தாய்பாதம் * புகையால்நறுமலரால்
முன்னே *— மிகவாய்ந்தவன்பாக்கியேத்தி யடிமைப்பட்டேனு
னக்கு * என்பாக்கியத்தா லினி. (௯௪)

இனிதென்பர்காம மதனினுமாற்ற * வினிதென்பர்

---

வகையால் - வடிவழகு, ஸௌகுமார்யம், ஸந்நாஹமான ஸ்ரீ வ்யவேஷ்டிதம் துடக்கமான ப்ரகாரங்களாலே, முன்னே - ஆஶ்ரிதனை ஜம்ஹ்ருன் திருவடிகளிலேவந்து விழுந்த முற்காலத்திலே, அவனி - பூமியை, இரந்து - மஹாபலிபக்கலிலே ப்ரியம்வதியான பெருமையை யழியமாறிச் சென்றயாசித்து, அளந்தாய் - அளந்துகொண்டாயான உன்னுடைய, பாதம் - திருவடிகளை புகையால் - தூபத்தால், நறு - செவ்விய, மலரால் - பூமுதலான உபகரணங்களைக்கொண்டு, மிக - மிகவும், வாய்ந்த - செறிந்த அன்பாக்கி - ப்ரேமத்தையுடையனாய், ஏத்த - ஸநந்தநாதியோகிகளுக்குத் தோற்றுஸ்துதித்து, உனக்கு - வகுத்தஶேஷியான தேவர்க்கு, இனி - இனிமேலுள்ளகாலம், என் - தேவரென்பக்கல் பண்ணின, பாக்கியத்தால் - விஶேஷகடாக்ஷமாகிற ஸுக்ருதத்தாலே, அடிமைப்பட்டேன் - அடிமைசெய்யுமவனாய் விட்டேன் என்னுடைய விலக்காமையாகிற ஸுக்ருதத்தாலே யென்னுதல், முன்னே - ஸந்நிதியிலென்றுமாம். (௯௪)

❁ முப்பத்தஞ்சாப்பாட்டு. ❁

அ—இப்படி ஸர்வாநுகூலமும் பற்றாசாகத்தானே மேல்விழுந்து ஸம்ரக்ஷணங்களையும்பண்ணும் உன்னைவிட்டு சேதநர் ஶப்தாதிவிஷயங்களிலே மண்டி க்லேசப்படுவதே! என்று வெறுக்கிறார்.

எந்தாய் - 'எல்லாங்கண்ணன்' என்கிறபடியே பாரலௌகிகஸுகங்களெல்லாம் நீயேயாம்படி என்னைப்புகுராநிறுத்தின வென் ஸ்வாமியானவனே? காமம் - ஸுலபமாய் ஸ்வாதீநமாய் ஸுகரூபமான ஶப்தாதிவிஷயங்களை ஸுகங்களாக ப்ரமித்து, இனிது - இவையினிதாயிருந்ததென்று, என்பர் - விஷயாநுபவத்துக்குப் ப்ரவணராய்ச்செய்திருக்கும் நாட்டார் சொல்லாநின்றார்கள், விரக்தரோடு அவிரக்தரோடு வாசியற ஸர்வரும் விரும்பும்ப

மூ—தண்ணீரு மெந்தாய் *— இனிதென்று காமாநீர் வேளாது
நின்பெருமை வேட்பரேல் * சேம நீராகுஞ் சிறிது. (௩௫)

சிறியார்பெருமைசிறிதின்கணெய்தும் *
அறியாருந்தாமறியாராவர் *— அறியாமை

---

யிருக்கையாலே, அதனிலும்- அந்த விஷயங்களைக்காட்டிலும் ஆற்ற- மிகவும், இனிதென்பர்தண்ணீர்- இனிதென்று தண்ணீரைச் சொல்லாநின்றார்கள், காமம்- பரீக்ஷகர் ஹேயமாகவே அறுதியிட்டிருக்கிற விஷயங்களையும், நீர்- தண்ணீரையும், இனிதென்று- க்ஷுத்த்ருஷ்ணையாலே போக்யமென்று பாவிப்பண்ணி, வேளாது- அவற்றை மேல்விழுந்தாசைப்படாதே, நின்- ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் நிரதிசயபோக்யபூதனான உன்னுடைய, பெருமை- போக்யதாதிசயத்தை, சிறிது- ஏகதேசம், வேட்பரேல்- ஆசைப்படுவார்களாமாகில், அது- சேமம்- ஸர்வதசையிலும் ரக்ஷகமான, நீராகும்- ஸ்வபாவத்தையுடைத்தாகாநிற்கும். (௩௫)

❀ முப்பத்தாறாம்பாட்டு. ❀

அ—நாட்டார் செய்தபடி செய்கிறார்கள், நெஞ்சே? நீ முந்துறமுன்னமவனுடைய வ்யாபாரங்களை யநுஸந்தித்துக்கொண்டு ஸாவதமே யிருக்கப்பார்? என்கிறார்-

சிறியார்- ஸ்வதஸ்ஸௌக்ஷ்ம்யமின்றிக்கே க்ஷுத்ரராயிருக்கிற ஸம்ஸாரிகளுடைய, பெருமை- 'ஸர்வோஹம்' என்றிருக்கும் அபிமானத்தாலேவந்த பெருமையானது, சிறிதின்கண்- ஸ்வதஸ்ஸித்தமான பழையக்ஷுத்ரதையிலே, எய்தும்- சென்று பர்யவஸித்துவிடும், அறியாரும்- ஸ்வதஸ் க்ஷுத்ராக்ஷுத்ர விவேகம்பண்ண க்ஷமரன்றிக்கே யிருக்கிற வறிவுகேடரானவர்களும், தாம்- தங்கள்நினைவாலே ஸர்வஜ்ஞராக அபிமானித்திருந்தார்களாகிலும், அறியாராவர்- பழையவறிவுகேட்டையுடையராயே விடுவர்கள்; என்னெஞ்சே- நானவன்படிகளைச் சொன்னலறிகைக்குப் பாங்கானவென்னெஞ்சே? நீயறிவுகேடரான நாட்டார்படியைக் கைவிட்டு, அறியாமை-

மூ—மண்கொண்டு மண்ணுண்டு மிழ்ந்தமாயனென்று *
எண்கொண் டென்னெஞ்சே? யிரு. (௩௬)

இருந்தண்கமலத்திருமலரினுள்ளே * திருந்துதிசைமுகனை
த்தந்தாய் *— பொருந்தியநின்பாதங்களேத்திப் பணியாவேல்
பல்பிறப்பும் * ஏதங்களெல்லா மெமக்கு. (௩௭)

ஸ்ரீயஃபதியிப்படி இரப்பாளனாய் வந்தானென் றொருவருமறியாதபடிபடி, மண்- பூமியை, கொண்டு- இரந்தளந்துகொண்டு, ப்ரளயத்திலழியாதபடி, மண்- அந்தபூமியை, உண்டு- திருவயிற்றிலே வைத்துநோக்கி, அநந்தரம் மண்- உள்ளேகிடந்துதளராதபடி யந்தபூமியை, உமிழ்ந்த- வெளிநாடுகாணப்புறப்படவிட்டவனாய், இவ்வளவன்றிக்கே மாயனென்று- ஆஸ்ரிதவிஷயத்திற்பண்ணும் ரக்ஷணத்துக்கெல்லை காணவொண்ணாத ஆஸ்சர்யசேஷ்டிதனுமாயிருப்பா னொருத்தனென்று, எண்கொண்டு- அநவரதாநுஸந்தாநமாயித்துக்கொண்டு, இரு- அவனைப்பற்றின நமக்குஇனி ஒருகுறையுண்டோவென்று நிர்ப்பயமாயிரு. (௩௬)

## முப்பத்தேழாம்பாட்டு.

அ—இப்படிப்பட்ட ஸர்வேஸ்வரனை ஆஸ்ரயியாத ஜநங்களெல்லாம் து:க்கிமென்கிறார்—

இரும்- பரந்து, தண்- குளிர்ந்த, கமலத்து- திருநாபீகமலத்தினுடைய, இரு- விஸ்தீர்ணமான, மலரினுள்ளே- பூவினுள்ளே, திருந்து- மறுத்துக் கேள்விகொள்ளாதே சொன்ன கட்டளையிலே ஜகத்தைஸ்ருஷ்டிக்கைக்கு ஸமர்த்தரான, திசைமுகனை- சதுர்முகனை, தந்தாய்- ஸ்ருஷ்டியுபயோஜநமெனக்கேபாம்படி உபகரித்தருளினவனே, பொருந்திய- ஸௌஸீல்யாகல்யாணனாய்க்கொண்டு எல்லாரோடும் பொருந்தியிருக்கிற, நின்- உன்னுடைய, பாதங்கள்- திருவடிகளை, ஏத்தி- வாயாறவேத்தி, பணியாவேல்- தலையாறவணங்கி யாஸ்ரயிக்கைக்குறுப்பல்லவாமாகில், எமக்கு- எங்களுக்கு, பல்பிறப்பும்- ஜந்மாநுஸரணமாக மேலேமேலே யுண்டாய்ச் சொல்லுகிற ஜந்மங்களடங்கலும், ஏதங்கள்- து:க்கங்கள், ஜந்மத்துக்கு

மூ—எமக்கென்றிருநிதியமேமாந்திராதே* தமக்கென்றுஞ்சார்வ மறிந்து *— நமக்கென்றும்மாதவனேயென்னும்மனம்படைத்து* மற்றவன்பேரோதுவதே நாவினாலோத்து. (௩௮)

ப்ரயோஜநம்- உன்னையாஶ்ரயிக்கையிறே; அதுக்குறுப்பல்லாத போது அவையடங்க நிஷ்ப்ரயோஜநமென்கை. (௩௭)

❁ முப்பத்தெட்டாம்பாட்டு. ❁

அ—அநந்யார்ஹமான வஸ்துத்தை ஸ்வார்த்தமென்றிரா தே ஸ்ரீயஃபதியை நினைப்பது எத்துவதாய்க்கொண்டு ஆஶ்ரயி க்கையே ஸர்வருக்கும் கர்த்தவ்யமென்கிறார்-

பிறரிடம்பார்த்தறிந்து விநியோகம் கொள்ளவேணுமென் றுகருதும்படி, இருநிதியும்- தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக் கிற ஸாதநத்தை, எமக்கு- ஸ்வார்த்தமென்கையாலே நமக்குவே ணும், என்று- என்றபிமாநித்துக்கொண்டு, ஏமாந்து- 'நஸீதே த்' என்னும்விஷயத்தைப் பற்றினாப்போலே யறிவுகெட்டு, இரா தே- நிர்ப்பரனாயிராதே, தமக்கு- தந்தாமுக்கு, என்றும்- அறிந்த போதோடு அறியாதபோதோடு வாசியற ஸர்வகாலத்திலும், சா ர்வம்- நித்யமான ஆஶ்ரயமென்று, அறிந்து- ஶாஸ்த்ராசார்ய ஸாதிகளாலே அறிந்து, நமக்கு- இனிநமக்கு, என்றும்- கால தத்வமுள்ளதனையும், மாதவனே- ஸ்ரீயஃபதியானவனே, என் றும்- ஆஶ்ரயணீயனும் ப்ராப்யனுமென்று துணிந்திருக்கும், மனம்படைத்து- உநிஶ்சயமுடையராய், மற்று- அதுக்குமேலே அவன்- அந்தஸ்ரீயஃபதியானவனுடைய, பேர்- அச்சேர்த்திக்கு வாசகமான திருநாமங்களை, ஓதுவதே- சொல்லுகையே, நாவி னால்- வாகிந்த்ரியத்தால், ஓத்து- உச்சரிக்கப்படும். (௩௮)

❁ முப்பத்தொன்பதாம்பாட்டு. ❁

அ—நாவினாலோதுகையாவதுதான் ஏதென்ன? ஸகலவேதஸா ரமான திருமந்த்ரத்தை உச்சரித்துக்கொண்டு வேதாந்தத் திற்சொல்லுகிற உபாஸநையாலே ஸாக்ஷாத்திலேநின்று ஆஶ் ரயியுங்கோளென்றும், அதுமாட்டாதார் அயத்திற்கட்டளையி லே ஸ்ரீயஃபதியானவன் திருநாமத்தைச்சொல்லி ஆஶ்ரயியுங்

மூ—ஓத்தின்பொருண்முடிவுமித்தனையே * உத்தமன்பேரேத்தும் திறமறிமினேழைகாள் *— ஓத்ததனைவல்லீரேல்நன்றதனை மாட்டீரேல் * மாதவன்பேர்சொல்லுவதே யோத்தின்சுருக்கு. (௩௯)

---

கோவென்று மிரண்டுவகைப்பாக ஆஶ்ரயணத்தை ஸ்வீகாராநுஷ்டாநம் விதிக்கிறார்—

ஏழைகாள்- வகுத்தவிஷயத்தை யிகழ்ந்து இதரவிஷயத்திலே ப்ரவணராய்த்திரிகிற சபலர்காள்? ஓத்து- ஸாங்கவேதாத்யயநம்பண்ணி, அதனை- அதிற்சொல்லுகிற அர்த்தங்களையுமறிந்து, வல்லீரேல் அறிந்தபடியே ஸாக்ஷாத்காரரூபமான பக்தியைப் பேற்றுக்கு உபாயமாக அநுஷ்டிக்க வல்லீர்களாகில், உத்தமன்- ஸர்வவ்யாபகனாய் ஸர்வஶக்தியான புருஷோத்தமனுடைய, பேர்- ஸர்வரக்ஷகத்வாதியான ஸகலார்த்தங்களுக்கும் வாசகமான திருமந்த்ரமாகிற திருநாமத்தை, ஏத்தும்- சொல்லிஸ்தோத்ரம்பண்ணும், திறம்- ப்ரகாரமான, இத்தனையே- இத்தனையே, ஓத்தின்- வேதத்திற்சொல்லுகிற, பொருள்- அர்த்தங்களெல்லாவற்றிலும், முடிவு- தாத்பர்யமாக நிர்ணயித்துத் தலைக்கட்டின அம்ஶம், நன்றதனை மாட்டீரேல்- இப்படி நன்றாக அத்தைவறியமாட்டிற்றிலீர்களாகில், மாதவன்- ஸ்ரீய:பதியினுடைய, பேர்- திருநாமத்தை, சொல்லுவதே- சொல்லுகையே, ஓத்தின்- அந்த வேதப்பரப்பெல்லாவற்றுக்குங்கூட, சுருக்கு- ஸங்க்ஷேபித்துத் தலைக்கட்டி, இவ்வர்த்தம்- பகவத்ப்ரஸாதத்தாலே தெளியக்கண்ட நான்சொன்ன வார்த்தையாகையாலே, அறிமின்- இத்தைத்தப்பாதென்று விஶ்வஸித்து அறியுங்கோள், இத்தைச் சுருக்கென்கையாலே கீழ்ச்சொன்னது வேதத்திற்பரக்கச்சொன்ன பொருளென்றுதோற்றுகிறது. (௩௯)

❁ நாற்பதாம்பாட்டு. ❁

அ—இப்படியானபின்பு ஸர்வவேதங்களுக்கும் தாத்பர்யபூமியான ஸர்வேஶ்வரனை ஸ்ரீய:பதியை வாக்கு ஶ்ரமமாவதற்குமுன்னே கடுக ஆஶ்ரயியுங்கோளென்கிறார்—

மூ—சுருக்காகவாங்கிச்சுலாவிநின்று * ஐயார்நெருக்காமுன் நீர் நினைமின்கண்டீர் *— திருப்பொலிந்தவாகத்தான்பாதமறிந்தும் * அறியாதபோகத்தா லில்லைபொருள். (௪௦)

பொருளாலமருலகம் புக்கியலலாகாது * அருளாலறமருளு

---

சுலாவிநின்று- ஶரீரமெங்குமொக்க வ்யாப்தித்து வ்யாபித்துநின்று, ஐயார்- ச்லேஷ்மாவானது, சுருக்காக- ஶரீர விஶ்லேஷஸமயத்திலே கண்டஸ்தானத்தில்வந்து செறிப்பத்தக்கதாகச் சுருங்க, வாங்கி- வலித்திழுத்துக்கொண்டு, நெருக்காமுன்- ஶ்வாஸோச்ச்வாஸப்ரவ்ருத்தியில்லாதபடி மிடற்றையடைத்து மிறுக்குப்படுவதுக்கு முன்னே, திரு- பெரியபிராட்டியாராலே, பொலிந்த- ஸம்ருத்தமாய் விளங்காநின்றுள்ள, ஆகத்தான்- திருமேனியையுடையனான ஸர்வேஶ்வரன், பாதம்- திருவடிகளை; நீர்- நீங்கள், நினைமின்கண்டீர்- அநுஸந்தித்துக்கொண்டு நில்லுங்கிடிகோள், அறிந்தும்- ஸம்ஸாரவிஷயத்தை யறிந்துவைத்தும், அறியாத- அறியாதார் கணக்காம்படி பண்ணக்கடவ, போகத்தால்- ஶப்தாதிபோகங்களால் வரக்கடவ, பொருள்- ப்ரயோஜநம், இல்லை- இல்லை, சுலாவிநின்றையார் சுருக்காகவாங்கி நெருக்காமுன் திருப்பொலிந்தவாகத்தான்பாதம் நீர் நினைமின்கண்டீ ரென்றந்வயம். (௪௦)

## நாற்பத்தோராம்பாட்டு.

அ—நீம் பிறர்க்குத் தாமுபதேஶித்த வுபதேஶமவர்கள் திருந்துகைக்குடலன்றிக்கே தம் தௌர்பல்யத்துக்குடலாய்த் தன் திருவுள்ளத்தைக்குறித்து ப்ராப்யமான ஸர்வேஶ்வரன் திருவடிகளை நீ முந்துறமுன்னம் மறவாதேகிடாய்? யென்கிறார்—

(பொருளால்) ஸாத்யஸாதநமாகையாலே ஶாஸ்த்ரோக்தோபாதி இதுவுமொரு ஸாதநாநுஷ்டாநமன்றோவென்று புத்திபண்ணி (அமருலகம்) ஸ்வர்க்காதிலோகங்களிலே, (புக்கு) புக்கநுபவிக்கவேணுமென்று, (இயலவாகாது) அதுக்கீடாக யத்நிக்கலாகாது, அதுக்கடி (அருளான்) நிரவதிககாருண்யவானான ஸர்வேஶ்வரன், (அறம்) பரமதர்மமான ஸமாஶ்ரயணாதிகளை, (அருளு

மூ—மன்றே*— அருளாலேமாமறையோர்க்கீந்த மணிவண்ணன்
பாதமே * நீமறவேல் நெஞ்சே? நினை. (சக)

நினைப்பன் திரு

மன்றே) தந்தருளுமவனன்றோ, ஆனபின்பு (மாமறையோர்க்கு) ஸம்ஸாரஸாகரங்களில் விரக்தராய்த் தன்னைப்பெற்றநுபவிக்கவேணுமென்று இருக்கும் பரமவைதிகர்களான வைதிகருக்கு, (அருளாலே) 'பரமகாருணிகோ பகவான்' என்னும்படி தன்னுடைய க்ருபையாலே, (ஈந்த) மோக்ஷத்தைக் கொடுத்தருளினவனாய், (மணி) அவர்களுக்கு அநுபாவ்யமாய் நீலரத்நம்போலே ஸுந்தரமான, (வண்ணன்) வடிவையுடைய ஸர்வேச்வரனுடைய, (பாதம்) திருவடிகளையே, (நெஞ்சே) அறிவுக்குப் பிறப்பிடமான நெஞ்சே? (நீ) நீ (மறவேல்) மறவாதேகொள், (நினை) எப்போதும் நினைத்தபடியேயிரு, (அறமென்று) அபேக்ஷையாலே தத்வத்தை நினைக்கிறது அன்றிக்கே ஸ்வரூபத்தை ஸாதநமாக்கிக்கொண்டு, நித்யஸூரிகள் நிரந்தராநுபவம் பண்ணி வாழுகிற பரமபதத்திலேபோய்ப் புகவொண்ணாது ஸம்ஸாரபந்தங்களிரண்டும் தன்க்ருபையாலே கொடுக்கும் ஸர்வேச்வரனை மறவாதேகொள்ளென்றுமாம், இப்போதிவ்வுடம்போடே யவனைமறவாதே யநுபவிக்கப்பெறில் பரமபதம் அநபேக்ஷிதமென்று கருத்து, அன்றிக்கே மாமறையோர்க்கென்று ஸ்ரீதண்டகாரண்யத்தில் ருஷிகளாய் அவர்களுக்கு 'ஏத்ய ரூபவிஸ்வஸ்தா:' என்னும்படி தன் விக்ரஹத்தை அநுபவிப்பித்தவனென்றுமாம், மாமறையோர்க்கென்று க்ருஷ்ணனானபோது ஸாந்தீபனியனுக்கு புத்ரனைக்கொடுத்தபடியைச் சொல்லுகிறது. (சக)

## நாற்பத்திரண்டாம்பாட்டு.

அ—புறம்புள்ள ஸம்ஸாரஸாகரங்களைத் துறந்து அவனை யநுபவிக்குமவர்களிறே! ஜந்துக்களில் ஸ்ரேஷ்டராவாரென்கிறார்-

(திரு) இவ்வாத்மாவுக்கு ஹிதங்கள் தானுமவனுமாய்க்கொண்டு நடத்திக்கொண்டுபோரும் பெரியபிராட்டியாரோடு

மூ—மாலை நீண்டதோள்காண * நினைப்பார் பிறப்பொன்றும்
(பிறப்பொன்றும்) நேரார் * — மனைப்பாற்பிறந்தார் பிறந்தெய்தும்
பேரின்பமெல்லாம் * துறந்தார்தொழுதாரத்தோள். (சஉ)

தோளிரண்டெட்டேழுமூன்றுமுடியனைத்தும் * தாளிரண்டும்

கூடிக்கொண்டிருக்கும், (மாலை) ஸர்வேச்வரனை, (நீண்ட) அவளோட்டைக் கலவியாலே யளவிறந்த வ்யாமோஹத்தையுடைத்தான. (தோள்) திருத்தோள்களை, (காண) கண்டநுபவிக்கைக்காக, (நினைப்பன்) நினையாநின்றேன், (நினைப்பார்) இப்படிநினைக்குமவர்கள், (ஒன்று) இவ்வநுபவத்துக்கிடைச்சுவரானதொரு, (பிறப்பும்) ஜந்மத்தையும், (நேரார்) கிட்டார்கள், (அ) அந்த, (தோள்) அழகியதோளை, (தொழுதார்) தொழுவார்கள், (மனைப்பால்) ஓரோமனையிடத்து, (பிறந்தார்) பிறந்தவர்கள், (பிறந்து) பிறந்து, (எய்தும்) ப்ராபிக்கும், (பேரின்பமெல்லாம்) நிரவதிகஸுகமெல்லாவற்றையும், (துறந்தார்) வர்ஜித்தவர்களானவர்கள் இவர், தோளழகுதானே மற்றுள்ள வின்பங்களைத் துறக்கும்படி பண்ணுமென்கை, பேரின்பமெல்லாம் துறந்தவர்களிறே; அத்தோள்கள் தொழுவாராரென்னவுமாம். அன்றிக்கே ஒருஸ்த்ரீஸ்நேஹமே பற்றாசாக அவன் தானே தன்னைக்கொண்டுவந்து காட்டுமதொழிய ஆர்தானிவற்றைத்துறந்து அத்தோளைத் தொழுவாரென்னுமாம். 'பிறப்பென்றும்நேரார்' என்றுவாபோனபோது எல்லாக்காலத்திலும் ஜந்மத்தைக்கிட்டார்களென்று பொருளாகக்கடவது. (சஉ)

❁ நாற்பத்துமூன்றாம்பாட்டு. ❁

அ—எனக்கவன்தோள் தொழவேண்டா தொழுவார் தொழுவமையும் அத்தோள்தொழுவார்தாளைத் தொழுமித்தனை நாமென்கிறார்-

(தோளிரண்டெட்டேழுமூன்றும்) பிராட்டியைத் தனிச்சிறைவைத்து நலிந்த ராவணனுடைய இருபதுதோள்களும், (அனைத்துமுடியும்) அறுக்கவறுக்க முளைக்கையாலே ஒருவ்யவஸ்தையிலடங்காத தலைகளும், (தாளிரண்டும்) இவையெல்லா

மூ—வீழச்சரந்துரந்தான் *— தாளிரண்டுமார்தொழுவார்பாதம
வைதொழுவதன்றே * என்சீர்செழுதோள்செய்யுஞ்சிறப்பு(௪௩)

சிறந்தார்க்கெழுதுணையாஞ்செங்கண்மால்நாமம் * மறந்தா
ரைமானிடமாவையேன் *— அறம்

---

வற்றுக்கு ஆதாரமான கால்களிரண்டும், (வீழ) அறப்பண்ணும்படிக்கீடாக, (சரம்) திவ்யசரங்களை, (துரந்தான்) ப்ரேரித்துநடத்தின பெருவீரனான சக்ரவர்த்தித் திருமகனுடைய, (தாளிரண்டும்) திருவடிகளிரண்டையும், (தொழுவார்) தொழுமவர்களாய், (ஆர்) அபிஜநஹேதுவல்லாத ஏதேனும் ஜந்ம வ்ருத்தாதிகளை யுடையராயிருக்கும் மஹாபுருஷர்களுடைய, (பாதமவை) பரமபோக்யமாக ப்ராணப்ரஸித்தமான அந்தத் திருவடிகளை, (தொழுவதன்றே) தொழுமதன்றோ, (என்) அவர்களில் வ்யாவ்ருத்தனானவென்னுடைய, (சீர்) ததீயரைத்தொழவென்றால் பல்நேப்பணைக்குமழகு, (செழு) சேர்ந்த, (தோள்) தோள்களானவை, (செய்யும்) எனக்குச்செய்யும், (சிறப்பு) உபகாரம். (௪௩)

## நாற்பத்துநாலாம்பாட்டு.

அ—இப்படி யசல்காக்கும்படி பண்ணவல்லவிஷயத்தை யாஸ்ரயியாதே மறந்திருக்குமவர்கள் சேதநரல்லர் கிடீரென்கிறார்-

(சிறந்தார்க்கு) 'ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்' என்று தானுகக்கும்படி தன்திருவுள்ளத்துக் கநுகூலமாக ஆஸ்ரயித்திருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, (எழு) ஸம்ஸாரஸம்பந்தமறுத்து ஜ்ஞாநவிகாஸத்தை யுடையராய் உஜ்ஜீவிக்கைக்குப் போம், (துணையாம்) அர்ச்சிராதிமார்க்கத்துக்கு ஆதிவாஹிகர் முன்னே, 'நயாமி' என்கிறபடியே துணையாமவனாய், (செம்) அவர்கள்விஷயத்தில் வாத்ஸல்யத்தாலே குதறிச்சிவந்த, (கண்) திருக்கண்களையுடைய, (மால்) வ்யாமோஹனானவனுடைய, (நாமம்) வாத்ஸல்யாதி குணங்களுக்கு வாசகமான திருநாமத்தை, (மறந்தாரை) விஸ்மரித்திருக்குமவர்களை, (மானிடமா) ப்ராக்ருதமநுஷ்யஜந்மத்திலே பிறந்தவர்களாய், (வையேன்) என்மநஸ்ஸிலே நினைக்கிறேன், (அறம்) ஆநருஸம்ஸ்யமாகிற பரமதர்மத்தை,

மூ—தாங்கும்மா தவனேயென்றும் மனைப்படைத்து * மற்றவன் பேரோதுவதே நாவினாலுள்ளு. (சச)

உளதென்றிறுமாவாருண்டில்லையென்று * தளர்தலதனருகுஞ்சாரார் *— அளவரியவேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும் * பாதத்தான் பாதம்பயின்று. (சரு)

(தாங்கும்) தரியாநிற்கும், (மாதவனே) ஸ்ரீயஃபதியானவனே (என்றும்) என்றநுஸந்திக்கும், (மனம்) நெஞ்சினை, (படைத்து) உண்டாக்கிக்கொண்டு, (மற்று) அதுக்குமேலே, (அவன்) அந்தஸ்ரீயஃபதியானவனுக்கு, (பேர்) வாசகமான ஶப்தத்தை (நாவினால்) நாவாலே, (ஓதுவது) சொல்லுகையிலே, (உள்ளு) மநஸ்ஸோடேகூட, மநஸ்ஸிலே ப்ரஹரித்துக்கொள்ளுவது. கீழ் ஸாதநங்களை விரும்பினார், இதிலே ஸாதநங்களை அநுஸந்தித்தார். (சச)

## ❁ நாற்பத்தைந்தாம்பாட்டு. ❁

அ—இப்படி ஸமாஸ்ரயணம்பண்ணியிருக்குமவர்கள் ஐஹிகவிஷயங்களினுடைய ஸம்ஸ்பர்ஶங்களால்வரும் ஹர்ஷஶோகங்களையுடையரல்லர்கிடீரென்கிறார்-

(அளவரிய) ஆர்க்குமளவிடவொண்ணாதபடி அபரிச்சிந்நமான, (வேதத்தான்) வேதங்களாலே ப்ரதிபாத்யனாக ப்ரதிபாதிக்கப்படுமவனுமாய், (வேங்கடத்தான்) இப்படி ஓலைப்புறத்திலே கேட்டுப்போகையன்றிக்கே கண்ணாலே கண்டநுபவிக்கலாம்படி திருமலையிலேவந்து ஸந்நிஹிதனான ஸௌலப்யத்தையுடையனாய், (விண்ணோர்) பரமபதத்திலே பழுத்திருக்கும் பரமைகாந்திகளான நித்யஸூரிகள், அவன்நீர்மைக்குத்தோற்று (முடி) தங்கள்திருமுடியே திருவடிகளிலே மடுக்க, (தோயும்) அத்தாலே ஸ்பர்ஶிக்கப்பட்ட, (பாதத்தான்) திருவடிகளையுடையனான ஸர்வேஶ்வரனுடைய, (பாதம்) திருவடிகளை (பயின்று) இடைவிடாமற் செறிந்துவைத்து, ஜந்மஸந்ததியை த்திரியச்செய்தே, * சருகிலைதிறம்வாய்ப்பாலே * நடுவேவந்த திரண்டயநத்தைக்கண்டு, (உளதென்று) இதுநமக்குண்டாகப்

மூ—பயின்றதரங்கந்திருக்கோட்டி * பன்னாள்பயின்றதுவும்வேங்கடமேபன்னாள் *— பயின்றதணிதிகழுஞ்சோலை யணிநீர்மலையே * மணிதிகழும்வண்தடக்கைமால். (சகூ)

---

பெற்றதென்று, (இறுமாவார்) பிறர்க்கு ஸஹநிக்கவொண்ணாதபடி மஹாத்ருராயிரார்கள், சிலநாள்குறைவற ஜீவித்தபின்பு (உண்டு) வெறுவியரான அன்றைக்கே நமக்கிதுவுண்டாய்த்து, (இல்லையென்று) இன்றிக்கே இல்லையாய்த்தென்று, (தளர்தல்) ஶோகித்துத் தறைப்படுகையாகிற, (அதனருகும்) அதனருகுங்கூட, (சாரார்) கிட்டார்கள். (சரு)

❁ நாற்பத்தாறும்பாட்டு. ❁

அ—இப்படி தன்னை யாஶ்ரயித்தவர்கள் ஐஹிகாமுஷ்மிகங்களின் ஹாஸோல்லாஸங்களால்வரும் விகாரமற்றுத் தன்னைச்செறிந்த ஸுஹவிக்கையாகிற விண்ணினைவு இவர்களுக்குண்டாம்படி பலதிருப்பதிகளிலு மவன்வருந்தி க்ருஷிபண்ணினபடியை யருளிச்செய்கிறார்—

(மணி) நீலமணிபோலே ஶ்யாமளமாய், (திகழும்) ஒளிவிடுகிறவடிவையும், (வண்) அவ்வடிவை ஸம்ஸாரிகளுக்கு வழங்குமுதாரநம்பண்ணுகிற, (தடம்) சுற்றுடைத்தான, (கை) திருக்கைகளையுமுடையனான, (மால்) ஸர்வேஶ்வரன், (பயின்றது) அவதாரங்கள் போலே தீர்க்கப்ரவாஸியாதே நித்யவாஸம் பண்ணியருளிற்று, (அரங்கம்) கோயில், (திருக்கோட்டி) திருக்கோட்டியாகிற திருப்பதிகளிலே, (பன்னாள்) சிரகாலம், (பயின்றதுவும்) செறிந்துவதித்ததுவும், (வேங்கடமே) திருமலையிலே, இப்படியே (பன்னாள்) சிரகாலம், (பயின்றதுவும்) நெருங்கிவர்த்தித்ததுவும், (அணி) அழகு, (திகழும்) விளங்காநின்றுள்ள, (சோலை) சோலைகளையுடைத்தாய், (அணி) ஸம்ஸாரத்துக் காரணமான, (நீர்மலையே) திருநீர்மலையிலே, இப்படியே ஆஶ்ரிதாஶ்ரமாக அவன்விரும்பிவர்த்திக்கிற திருப்பதிகளுக்கோரெல்லையில்லை யென்கை. (சகூ)

மூ—மாலையரியுருவன்பாதமலரணிந்து * காலைதொழுதெழுமின் கைகோலி* ஞாலமளந்திடந்துண்டுமிழ்ந்த வண்ணலைமற்றல்லால்* உளங்கிடந்தவாற்றாலுணர்ந்து. (௪௭)

---

## ❁ நாற்பத்தேழாம்பாட்டு. ❁

அ—அவன் இப்படி யுங்களைப்பெறுகைக்காகப் பலதிருப்பதிகளிலும் புகுந்து செறிந்து க்ருஷிபண்ணும் ஸ்வபாவனானபின்பு எல்லாரும் க்ருதஜ்ஞராயவனை யாச்ரயியுங்கோளென்கிறார்.

(ஞாலம்) ஸப்தத்வீபபரப்படங்கலும், (அளந்து) அநாயாஸேநவளந்து, (இடந்து) அழிந்தஸமயத்திலே யிடந்தெடுத்து (உண்டு) அழிவதற்குமுன்னே திருவயிற்றிலே வைத்துநோக்கி (உமிழ்ந்த) பின்பு வெளிநாடுகாணப்புறப்பட வுமிழ்ந்து, இப்படி ஜகத்தை ஸஹஜமாக ரக்ஷித்தவனாய் இவ்விவசெயல்களாலே, (அண்ணலை) தானே ஸர்வஸ்வாமியென்று தோற்றவிருக்கிறவனை, (அல்லால்) இப்படி பொதுவாகப்பண்ணும் வ்யாபாரங்களொழிய, (மற்று) மற்றும் ஆச்ரிதவிஷயமாகச் செய்தவையாய், அவர்கள் இதொருநீர்மையே; யென்று நெஞ்சுளுக்கும்படி, (உளம்) ஹ்ருதயத்தை, (கிடந்த) பற்றிக்கிடக்கிற, (ஆற்றால்) ப்ரணயித்வவ்யாபாரங்களோடே கூட, (உணர்ந்து) அறிந்தநுஸந்தித்துக்கொண்டு, (அரியுருவன்) ஆச்ரிதனுக்காகத் தன்னை யழியமாறிக்கொண்ட நரஸிம்ஹவேஷத்தையுடையவனுடைய, (பாதமலர்) திருவடித்தாமரைகளிலே, (மாலை) செவ்விமாலைகளை, (அணிந்து) அழகுபெறச்சாத்தி, (காலை) ஸத்வோத்தரமான ப்ராஹ்மமுஹூர்த்தத்திலே, (கை) கையை (கோலி) கூப்பிக்கொண்டு, (தொழுது) ஆச்ரயித்து, (எழுமின்) உஜ்ஜீவியுங்கள். (௪௭)

## ❁ நாற்பத்தெட்டாம்பாட்டு. ❁

அ—'உளங்கிடந்தவாற்றால்' என்று ஆச்ரிதருக்கு மறக்கவொண்ணாதபடியான நான்செய்த செயல்தானேதென்ன அதுக்கோரெல்லையில்லையென்கிறார்.

மூ—உணர்ந்தாய்மறைநான்குமோதினாய்நீதி * மணந்தாய்மலர்ம
கள்தோள்மாலே *— மணந்தாய்போய்வேயிருஞ்சாரல் வியலிரு
ஞாலம்சூழ் * மாலிருஞ்சோலை மலை. (சஅ)

---

(மறைநான்கும்) ப்ரளயதசையிலே ஸம்ஹாரித்து ஸம்ஸ்காரசேஷமாய்க் கிடந்த நாலுவேதங்களையும், (உணர்ந்தாய்) ஸ்வத்ருஷ்டபூர்வ ந்யாயத்தாலே வேதவர்ணாநுபூர்வி விச்சேதப்படாதபடி உணர்ந்தருளிச்செய்தாய், (நீதி) அந்தவேதார்த்தங்களை ஸம்சயவிபர்யயமற நிர்ணயித்து விசதீகரிக்கக்கடவ ஸ்ம்ருத்யாத்யுபப்ருஹ்மணங்களை, (ஓதினாய்) ரிஷிகளான முனிவரை யுண்டாக்கிநின்றருளிச்செய்தாய், அந்த வேதங்களுக்கும் உபப்ருஹ்மணங்களுக்கும் ப்ரதாநப்ரதிபாத்யனாய், (மலர்மகள்) தாமரைப்பூவை இருப்பிடமாக வுடையவளான பெரியபிராட்டியாருடைய, (தோள்) திருத்தோளோடே (மணந்தாய்) 'ஸ்ரீபாஸாயுதம் - ஸ்ருஷ்ட' என்னும்படி ஒருதேசவிசேஷத்திலே நித்யஸம்ஸ்லேஷம்பண்ணிக்கொண்டெழுந்தருளியிருந்தாய், (மாலே) அவள்பக்கலிலே பெரும்பிச்சனானவனே, ஓலைப்புறத்திலே கேட்டுப்போம்படி யெட்டாதநிலத்திலேயவளோடேகலந்து வர்த்திக்கிறவளன்றிக்கே ஸம்ஸாரிகளோடேகலந்து பரிமாறும்படி, (வேய்) மூங்கில்கள், (இரும்) நிறைந்த, (சாரல்) பார்ச்வங்களையுடைத்தான, (வியல்) விஸ்மயநீயமாய், (இரு) பரப்புடைத்தான, (ஞாலம்) ப்ருதிவியிலுள்ளவர்களாலே, (சூழ்) சூழ்ந்தாச்ரயிக்கப்படுமதாய், (மா) உயர்ந்து, (இரும்) பரந்த, (சோலை) சோலைகளையுடைத்தான, (மலை) திருமலையை, (போய்) உகப்புடனேபோய், (மணந்தாய்) கலந்தாய். (சஅ)

### நாற்பத்தொன்பதாம்பாட்டு.

அ—நெஞ்சே? அவன் இப்படி திருமலையிலே ஸந்நிஹிதனான பின்பு நமக்கொரு ப்ரதிபந்தகமுண்டென்றஞ்சாதே ஜமத்தடங்களும் அதிரும்படி யவனைச்சொல்லிக் கூப்பிடுகிறார்—

மூ — மலையேழும் மாநிலங்களேழுமதிரக் * குலைசூழ் குரைகடல்களேழும் * — முலைசூழ்ந்த நஞ்சுரத்துப் பெண்ணை நவின்றுண்ட நாவனென்று * அஞ்சாதென்னெஞ்சே? யழை. (சக)

அழைப்பன் திருமாலை யாங்கள்

---

மலையேழும் - ஸஹ்யாதிக்காயாரங்களான ஸப்தகுலபர்வதங்களும், மா - பரப்பையுடைத்தான, நிலங்களேழும் - ஸப்தத்வீபங்களும், குலை - கரையாலே, சூழ் - சூழப்பட்டு, அத்தைக் கடக்கமுடியாதே யதுக்குள்ளே கிடந்து, குரை - கோஷிக்கிற, கடல்களேழும் - ஸப்தஸமுத்ரங்களும், அதிர - அதிரும்படி, முலை - முலையிலே, சூழ்ந்த - எங்கும் வ்யாபித்த, நஞ்சு - விஷத்தாலுண்டான, உரத்து - மிடுக்கையுடைய, பெண்ணை - பேய்ப்பெண்ணை, முலைதந்த - ஸ்தந்யத்தைத் தோற்ற, நவின்று - நடுவே சில ஸாமஜல்பிதங்களைச் சொல்லிக்கொண்டு, உண்ட - முலையுண்டுமுடித்த, நாவனென்று - நாவையுடையவனென்று, என் - எனக்கு விதேயமான, நெஞ்சே - நெஞ்சே? அஞ்சாது - ப்ரதிபந்தகத்தை நினைத்தஞ்சாதே, அழை - வாய்விட்டுக் கூப்பிடு.

(சக)

## ஐம்பதாம்பாட்டு.

அ — இப்படி நெஞ்சைக்கூப்பிடச்சொல்லி நியமித்தவர் அநந்தரம் திருவாய்ப்பாடியிற் பெண்கள் அவன் திருநாமங்களை வ்யாமோஹத்தால்வந்த தளர்த்தி தோற்றச் சொல்லுமாப்போலே நெஞ்சுக்குமுன்னே தாம் முற்பட்டுக்கூப்பிடுகிறார்.

இழைப்பரிய - ஆர்க்கும் ஸ்வயத்நத்தால் நினைக்கவரியனாய், ஆயவனேயென்றும் - பெண்பிறந்தாரைப் புண்படுத்து மிடையனானவனேயென்றும், யாதவனேயென்றும் - யதுகுலத்திலே ஸ்ரீவஸுதேவர் திருமகனாய்ப் பிறந்தவனேயென்றும், மாயவனேயென்றும் - ஆச்சர்யசேஷ்டிதங்களையுடையனானவனேயென்றும், மதித்து - வாஸிபண்ணிக்கொண்டு, (ஆங்கு) 'நெஞ்சூரத்துப் பெண்ணைநவின்றுண்டநாவன்' என்று ப்ரஸித்தயான வந்தத் திருவாய்ப்பாடியிலுள்ள, அவர்கள் - இடைப்பெண்களானவர்கள்;

ரூ—சொன்ன * பிழைப்பில் பெரும் பெயரேபேசி *—
இழைப்பரிய வாயவனையாகவனே யென்றவனையார் முகப்பும்*
மாயவனேயென்று மதித்து. (௫௦)

மதிக்கண்டாய்நெஞ்சேமணிவண்ணன்பாதம்*
மதிக்கண்டாய்மற்றவன்பேர்தன்னை *—
மதிக்கண்டாய்பேராழிநின்று பெயர்ந்துகடல்

---

சொன்ன- சொன்னதாய், பிழைப்பில்- உள்ளீடான ஜ்ஞா வெஷித ஸாரஸ்யத்தாலே யநுஸந்தித்தார்க்குப் பிழைக்கவொண்ணாதபடி யிருப்பதாய், பெரும்- இரண்டுமூன்றக்ஷர மாயிருக்கச்செய்தே தனர்த்தியின் வநத்தாலே சொல்லிமுடிக்கவொண்ணாத பெருமையையுடைத்தான, பெயர்- திருநாமங்களை, பேசி- சொல்லி, யார்முகப்பும்- உகப்பாரோடு உகப்பாதாரோடு வாசியற வெல்லார்முன்பும், திருமால்- ஸ்ரீயஃபதியான, அவனை- அந்தஸர்வேச்வரனை, அழைப்பன்- அவர்களுக்கிரங்கினுப்போலே நம்பக்கலிலு மிரங்கக்கூடுமென்று கூப்பிடாநின்றேன். (௫௦)

❁ ஐம்பத்தோராம்பாட்டு. ❁

அ—இப்படி அவன்திருநாமத்தைச்சொல்லுகைக்குத் தம்மீடுபாட்டை யநுஸந்தித்தவர் நெஞ்சே நீ முந்துறமுன்ன மென்னைப்போலே கலங்கித்தளராதே யவன் ஸௌந்தர்யாதிகளைத் தனித்தனியே யறிந்துநின்று அநுபவிக்கப்பாரென்கிறார்-

(நெஞ்சே) நெஞ்சே, (மணி) நீலமணிபோலே இருண்டு குளிர்ந்த, (வண்ணன்) வடிவையுடையவன், (பாதம்) திருவடிகளை, (மதிக்கண்டாய்) வாஸிபண்ணுகிடாய், (மற்று) அதுக்குமேலே, (அவன்) அந்தஸர்வேச்வரனுடைய, (பேர்தன்னை) அவ்வடிவழகுக்கு வாசகமான திருநாமங்களை, (மதிக்கண்டாய்) வாஸிபண்ணுகிடாய், (பேர்) தன்படுக்கையான பெரிய, (ஆழிநின்று) திருப்பாற்கடலிலே நின்றும், (பெயர்ந்து) பெயர்ந்தெழுந்திருந்துநின்று, வ்யோஜநாநஙாவோர்க்கு ஸுலெவுஷிதஸம்விபாநம் பண்ணுகைக்காக, (கடல்) அந்தக்கடலை,

ரூ—கடைந்த * நீராழிவண்ணன் னிறம். (௫௧)

நிறங்கரியன்செய்யநெடுமலராளமார்வன் *
அறம்பெரியனாதறிவார் *—
மறம்புரிந்தவாளரக்கன்போல்வானை வானவர்கோன்தானத்து*

(கடைந்த) கடைந்தவனாய், அப்போது ஒருவெண்கடலைக் கருங்கடல் கடைந்தாப்போலே ஆகஷகமாய்த் தோற்றுகிற, (நீர்) நிறைந்தநீரையுடைய, (ஆழி) கடல்போன்ற (வண்ணன்) வடிவையுடையவன், (நிறம்) திருநிறத்தை, தேவர்களைப் போலே உப்புச்சாற்றைநச்சாதே, (மதிக்கண்டாய்) வேண்டிய ண்ணிகநாஸவிக்கப்பார் கடாய். (௫௧)

## ஐம்பத்திரண்டாம்பாட்டு.

அ—திருவுள்ளத்துக் குவமிக்கவல்லரான தம்மைக் கலங்கப் பண்ணின ஸ்ரீயஃபதியுடைய வடிவழகையும் பிராட்டிஸம்பந்தத்தால்வந்த மிக்கசேர்வையையு மநுஸந்தித்து இதுஒருவருக்கும் நிலமல்லவென்கிறார்.

ஆஸ்ரிதருடைய ஸகலஸதாபங்களும் போம்படி (நிறங்கரியன்) ஸ்ரமஹரமான கறுத்தநிறத்தையுடையனாய், (செய்ய) அந்நிறத்துக்கு பரபாகமான சிவந்தநிறத்தை யுடையளாய் (நெடு) பெரிய, (மலராள்) தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடையளான பெரியபிராட்டியாரை, (மார்வன்) திருமார்விலேயுடையனாய், (அறம்பெரியன்) அவளோட்டைத் தோயல்காரியாலே ஆநருஸம்ஸ்யம் மிக்கிருப்பானாய், (மறம்) திருவினைப்பிரிக்கையாகிற க்ரூரமாநசெயலை, (புரிந்த) செய்த, (வாள்) ஸாயுயனை, (அரக்கன்போல்வானை) ராவணனோடொத்திருந்துள்ள ஹாவலியை அழியச்செய்யாமல், ஒளதாயகுணம் பற்றுசாக ராஜ்யஸ்ரீ பெண்ணினவ னிழக்கியது என்னென்று தன்னுடைய ஆநருஸம்ஸ்யத்தாலே, (வானவர்) தேவர்களுக்கு (கோன்) நிவாஹகனான இந்த்ரனுடைய, (தானத்து) ஸ்தமும் போலே விலக்ஷணமாயிருக்கிற, பாதாளலோகத்திலே அவனைப்போலே பதிகொடுத்துக் கண்பிசைபவேண்டாதபடி, (நீளி

மூ—நீளிருக்கைக் குய்த்தான்னெறி, (௫௨)

நெறியார்குழற்கற்றைமுன்னின்றுபின்தாழ்ந்து * அறியாதிளங்கிரியென்றெண்ணி *— பிரியாதுபூங்கொடிக்கள்வைகும்பொருபுனல்குன்றென்னும் * வேங்கடமேயாம்விரும்பும்வெற்பு (௫௩)

ருக்கைக்கு) நெடுங்காலமிருக்கைக்கு, (உய்த்தான்) பண்ணிக்கொடுத்த ஸர்வேச்வரனுடைய, (அந்) அந்த, (நெறி) ஸ்வா உபகாரத்தை, (ஆர்) ஆர்தான், (அறிவார்) அறிவார், ஒருவருமறியப்போகாதென்றுகருத்து. (௫௨)

ஐம்பத்துமூன்றாம்பாட்டு.

அ—இப்படி ஸ்வாப்ரக்ருதிகளளவிலும் ஸதாஹ்ருதஸ்ரீவனானவன் ஸர்வருக்கும் கண்ணாலேகாணலாம்படி வந்து நித்யவாஸம்பண்ணுகிற திருமலைகிடீர் நாங்களாச்ரயிப்பதென்கிறார்—

(நெறியார்) திருமலையாழ்வாரே உபேயமாக வஸம்பித்து மற்றொன்றறியாதே வழிபட நெடுங்காலமாச்ரயிக்கிறவர்களுடைய, (குழற்கற்றை) குழற்கற்றையிலே, (முன்னின்று) முன்னேமுளைத்து, (பின்) பின்னாகவும்வரவளர்ந்து, (தாழ்ந்து) தாழவிழுந்து, மூச்சுவிடுதல் உடம்பசைத்தல் செய்யாதேயிருக்கிற இருப்பைக்கொண்டு, (அறியாது) சிலசேதநரென்றறியாதே, (இளங்கிரியென்று) சிறுமலைகளாயிருக்குமென்று (எண்ணி) வாஸிபண்ணி, (பிரியாது) அவ்விடத்தைவிட்டுநீங்காதே, (பூ) கண்டவிடமெங்கும் பரந்துபூத்த, (கொடிக்கள்) கொடிகளானவை, (வைகும்) நித்யவாஸம்பண்ணும் ஸ்தலமாய் (பொரு) தன்னிற்றான் திரைபொராநின்றுள்ள, (புனல்) ஜலஸம்ருத்தியையுடைத்தாய், (என்னும்) ஸுப்ரஸித்தமான, (வேங்கடக்குன்றே) திருமலையே, (யாம்) நாங்கள், (விரும்பும்) ப்ராப்யமாகப்பற்றியிருக்கும், (வெற்பு) மலை. (௫௩)

ஐம்பத்துநாலாம்பாட்டு.

அ—இப்படி தாம் அவனுகந்துவஸிக்கும் திருமலையளவும் விரும்புகையாலே இவனும் தானுகந்துவர்த்திக்கிற. வாண்டுதிருமலைகளிற்பண்ணும் விருப்பத்தைத் தன்திருவுள்ள மொன்னிலும்

மூ—வெற்பென்றிருஞ்சோலை வேங்கடமென்றிவ்விரண்டும் * நிற்பென்று நீமதிக்கும்நீர்மைபோல் — நிற்பென்றுளங்கோயிலுள்ளம் வைத்துள்ளினேன் * வெள்ளத்திளங்கோயில்கைவிடேலென்று.

என்றும் மறந்தறியேன் ஏழ்பிறப்புமெப்பொழுதும் * நின்று நினைப்பொழியாநீர்மையால் *— வென்றியடலாழிகொண்ட

---

பண்ணிக்கொண்டு மேலே விழுகிறபடியை யருளிச்செய்கிறார்-

சோலையென்னும்- திருமாலிருஞ்சோலை மலையென்றும், வேங்கடமென்றும்- வேங்கடமென்னும் திருநாமத்தையுடைத்தான, இருவெற்பென்று- பெரியதிருமலையென்று சொல்லப்படுகிற, இவ்விரண்டும்- இவ்விரண்டு ஸ்தாநமும், நிற்பென்று- நாமுகந்துவர்த்திக்கிற வாஸஸ்தாநமென்று, நீ- நீ, மதிக்கும்- வாஸிபண்ணியாதரிக்கும், நீர்மைபோல் ஸ்வபாவம்போலே, உளம்- என்னுடைய ஹ்ருதயமென்கிற, கோயில்- வாஸஸ்தாநமும், நிற்பென்று- நீயுகந்து நித்யவாஸம்பண்ணும் ஸ்தாநமென்று, உள்ளம்வைத்து- வாஸிபண்ணி, என்னுடைய ஹ்ருதயத்தில் பண்ணுகிற ஸந்நிவேஸாதிஸய மிருந்தபடியால் அவ்வவதிருமலைகளிலே நிலைநிற்கும்படியு மென்ஹ்ருதயம் திருந்துமளவும் வாஸஸ்தாநமாகக் கற்பித்ததான, வெள்ளம்- திருப்பாற்கடலாகிற, இளங்கோயில்- பாலாலயத்தையும் விடத்தேடுகிறாயோ? வென்றுநினைத்து, என்பக்கல்வருகைக்கு க்ருஷிபண்ணின அவ்விடத்தை க்ருதஜ்ஞதெதோற்றவு மென்னுகப்பைப்பற்றவும், கைவிடேலென்று- பிரானே கைவிடாதொழியவேணுமென்று, உள்ளினேன்- ப்ரார்த்தித்தேன். (௫௪)

## ஐம்பத்தைந்தாம்பாட்டு.

அ—இப்படி தேவரென்பக்கல் விருப்பத்தைப்பண்ணுகையாலே ஜ்ஞாநலாபத்தாற் குறைவற்றேன், தத்வமான ப்ராப்தியால்வரு மநுபவத்தையும் தேவர்தாமே பண்ணித் தந்தருளவேணுமென்கிறார்-

வென்றி- ப்ரபலப்ரதிபந்தகங்களை ஸநாயாஸேந போக்குகையால்வரும் வெற்றிபெற்றுடையனைப், அடல்- யா[illegible]வனை, ஆழி- திருவாழியை, கொண்ட- [illegible]

நிரவஸநக்ஷமிரியாலே எப்போதுங்கையிலே கொண்டிருக்கு மவனும் ஜ்ஞாநாஸக்திகளுக்குக் கொள்கலமான வென்னுமுன் னைப் பெறவொண்ணாது ஜ்ஞாநஸக்திகளாற் குறைவற்றவுன் னாலே வுன்னைப் பெறவேணுமென்னுமிடத்தை, அறிவனே- பத்தும்பத்தாக வறிந்திருக்கும் ஸர்வஜ்ஞனானவனே; நீ- இப் படியிருக்கிற நீ; எழுபிறப்பும்- எல்லாஜந்மங்களிலும், எப்பொழு தும். எல்லாவவஸ்தைகளிலும், நின்று- எதிர்சூழல்புக்கு, நினை ப்பு- இவன்நம்மை மறவாமற்பெற்றிடுவானுக்கென்று நினைக்கும் நினைவு, ஒழியா- ஒருநாளும் யாத்ருச்சிகமாயிருக்கிற, நீர்மையால்- ஸ்வபாவத்தாலே, என்றும் ஸர்வகாலத்திலும், மறந்தறியேன்- தேவரைமறந்தறியேன், இப்படி நீ- பேற்றுக்குறுப்பான ஜ்ஞா நத்திற் கண்ணழிவறுத்துத் தந்த நீ, ஜ்ஞாநபலமாக ஒருதேஸ விஸேஷத்திலேபோந்து பரிபூர்ணமாக வுன்னை யநுபவ வித்துவிளையக்கடவ, இன்பக்கடலாழி- அபரிச்சிந்நமான ஆந ந்தஸாகரத்தை, அருளிக்காண்- தந்தருளவேணுங் காண், கடலென்று மாழியென்றும் பர்யாயச்சொல்லாய்- மிகவும்நிர திஸயாநந்தத்தைச்சொன்னபடி. (௫௫)

❁ ஐம்பத்தாறும்பாட்டு. ❁

அ—இப்படி பேறு அவனாலேயென்று நிஸ்சயித்தபின்பு அருளெ ன்றுகொண்டுவடிம்பிட்டு நிர்பந்திக்கக்கடவதோ வென்ன; ப்ரேம மடியாகவந்த விருட்சியுடையாருக்குப் பற்றுசுமங்கே யுண்டாயி ருக்க அறியிருக்கப்போமோ வென்கிறார்-

காண- காணக்காண, கழி பழையநிலைகழிந்து, காதல்- மேன்மேலென வளர்ந்துவருகிற ப்ரேமமானது, என்னுலைக் கவொண்ணாதபடி கைமிக்குக்காட்டினால்- கைகழிந்துவிட்டால், நாணப்படும்- அவனேவந்து மேல்விழுமளவும் நாம்பதறுகை ஸ்வரூபஹாநியென்று லஜ்ஜித்து ஓரிடத்திலே ஒதுங்கியிருக்கு

றூ—என்றால் நாணுமே *— பேணிக்கருமாலைபொன்மேனி
காட்டாமுன்காட்டும் * திருமாலை நங்கள்திரு. (ருசு)

திருமங்கைநின்றருளும் தெய்வம் நாவாழ்த்தும் *
கருமங்கடைப்படுமின்கண்டீர் *—
உரிமையாலேத்தினேம் பாதமிருந்தடக்கையெந்தை பேர்*

வேணும், என்றால்- என்றுவிசாரித்தால், நாணுமே- அப்படி முறைபார்த்து, 'தத்வஸ்யஸம்ஸ்பர்ஶம்' என்று ஆறியிருக்கப்போமோ, அதுக்குமேலே கரு- ஸ்ரீஹாரமான கறுத்தநிறத்தையுடைய, மால்- ஸர்வாதிகனாய், திருமால்- ஸ்ரியஃபதியானவன், பொன்- ஸ்ப்ருஹணீயமாய் ஸ்ப்ருஹணீயமான, மேனி- வடிவு, காட்டாமுன்- காட்டுவதுக்குமுன்னே, நங்கள்- நமக்கு ஸ்வாமிநியான, திரு- பெரியபிராட்டியார், பேணி- ஆதரித்து, காட்டும்- கொண்டுவந்துகாட்டும், 'நகஶ்சிந்நாபராத்யதி' என்றுமேல்விழுந்து சேர்க்கும் புருஷகாரமுண்டான பின்பு முறைக்குச்சேராது பதறுகையென்று லஜ்ஜித்து ஆறியிருக்கப்போமோ வென்றபடி. கண்டல்லது கழியாத காதலென்னவுமாம். (ருசு)

# ❁ ஐம்பத்தேழாம்பாட்டு. ❁

அ—இப்படி பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவன் கிடீர் ஸர்வஸமாஶ்ரயணீயனென்கிறார்.

திரு- ஸம்ஸ்லேஷத்தாலே அவனுக்கு ஸர்வாதிகத்வத்தையுமுண்டாக்கவல்ல ஸ்வபாவத்தையுடையளாய், மங்கை- ஸௌகுமார்யமான பருவத்தையுமுடையளான பெரியபிராட்டியார், நின்றருளும்- 'இறையுமகலகில்லேன்' என்று இடைவிடாமலுறையும்படியிருக்கிற, தெய்வம்- ஸர்வாதிகனானவனை நா- நாவாலே, வாழ்த்தும்- ஸ்தோத்ரம்பண்ணுகையாகிற, கருமங்கடை- கார்யத்திலே, படுமின்கண்டீர்- ஒருப்படுங்கோள் கிடீகோள், நாம்- முறையறிந்தாரொழிய அவ்விஷயத்தைப்பற்றுகைக்கீடான நன்மைகளொன்றுமற்ற அயோக்யரான நாம், இரும்- படைத்து, தடம்- வளர்ந்த, கை- திருத்தோள்களையுடைய, எந்தை- என்ஸ்வாமியானவனுடைய, பாதம்- திருவடிகளை,

ரூ—நாற்றிசையும் கேட்டீரேநாம். (ருஎ)

நாம்பெற்றநன்மையும்நாமங்கைநன்னெஞ்சத்து * ஓம்பியிருந்தெம்மையோதுவித்து *— வேம்பின்பொருள்நீர்மையாயினும் பொன்னாழிபாடென்று * அருள்நீர்மை தந்தவருள். (ருஅ)

---

உரிமைபால. நமக்குவகுத்த சேஷியன்றோ வென்கிற ப்ராப்தியாலே, பேர்- அவன்திருநாமங்களைக்கொண்டு, ஏத்தினேம்- ஏத்தினேம், இவ்வர்த்தத்தை நால்- நாலுவகைப்பட்ட, திசையும்- திக்கிலுள்ளாரெல்லாரும், கேட்டீரே- கேட்டீர்களே, கடைப்படுமின்கண்டீர்- இத்தை லௌகிகவார்த்தையென்றிராதே வைதிகன்னுங்கோள் கிடீகோளென்னவுமாம். (ருஎ)

❁ ஐம்பத்தெட்டாம்பாட்டு. ❁

அ—நமக்கிந்த நன்மையெல்லாமுண்டாய்த்து ஸர்வேச்வரனுடையகடாக்ஷத்தாலே யென்கிறார்—

வேம்பு- வேம்பாகிற, பொருள்- பதார்த்தத்தினுடைய, நீர்மை- ஸ்வபாவம்போலே, ஆயினும்- இவ்விஷயத்தை யேத்துகையாகிற இது அத்யந்தவிரஸமாயிருந்ததே யாகிலும், பொன்- ஸ்ப்ருஹணீயமான, ஆழி- திருவாழியுங் கையுமான சேர்த்தியழகை, பாடென்று- வீதிக்குப்போக்குவிட்டுப் பாடென்று; நாமங்கை- ஸரஸ்வதியானவள், நமக்கு இருந்து திருந்துகைக்கு நல்லாஸ்யமாயிருந்ததென்று ஆச்ரயிக்கும்படி, நல்- விலக்ஷணமான, நெஞ்சத்து- நெஞ்சிலே, ஊவங்கருக நியதியாமல் நம்மிளைவிலே தன்னையமைத்து, ஓம்பியிருந்து- ராஜபுத்ரர்களைப் பள்ளியோதுவிப்பாரைப்போலே அநுவர்த்தித்துக்கொண்டிருந்து, எம்மை- நம்மை, ஓதுவித்து- சிந்தையிட்டோதுவித்து, நாம்- நாம், பெற்ற- அஸஹ்யாஹமாகப்பெற்ற, நன்மையும்- அநுஹவத்துக்குப் போக்குவீடாகக் கவிபாடுகையாகிற இந்த பரவோபகாரமும், அருள்- அருளுகையே, நீர்மை ஸ்வபாவமாகவுடையனான ஸர்வேச்வரன், தந்த- நிர்ஹேதுகமாக ஸங்கல்பம் பண்ணின, அருள்- ப்ரஸாதமடியாக வந்ததாயிருக்கும். (ருஅ)

மூ—அருள்புரிந்தசிந்தையடியார்மேல்வைத்து* பொருள்தெரிந்து காண்குற்றவப்போது *— இருள்திரிந்துநோக்கினேன்நோக்கிநினைந் தேனதொண்கமலம் * ஓக்கினேனென்னையுமங்கோர்ந்து. (௫௯)

## ஐம்பத்தொன்பதாம்பாட்டு.

அ—இந்த ஜ்ஞாநத்துக்கடியாக அடியிலே அவன் நிர்ஹேதுககடாக்ஷமாகத் தம்மை கடாக்ஷித்தபடி சொல்லுகிறார்.

அருளியல்லது நிற்கவேண்டாதபடி, அருள்புரிந்த- அருளிலேநோக்கான, சிந்தை- தேவருடைய திருவுள்ளத்தை, அடியார்மேல்- அருளுகைக்கடியான ஶேஷத்வஜ்ஞாநத்தையுடையரான எங்கள்மேலே, வைத்து- பரிபூர்ணமாகவைத்து, பொருள்- எங்களைபொருவஸ்துஸத்ராக, தெரிந்து- நிரூபித்து, காண்குற்ற- கடாக்ஷித்தருளுகிற, அப்போது- க்ஷணத்திலே, இருள்- அஜ்ஞாநமாகிற விருளடங்கலும், திரிந்து- போனவழிதெரியாதபடி சிதறிப்போய், நோக்கினேன்- தேவர் ஶேஷீ நாம்ஶேஷம் என்று இருவருடைய ஸ்வரூபத்தையும் தெளியக்கண்டேன், நோக்கி- இப்படி இரண்டு தலையையும் யதாவாகதர்ஶித்து, தேவருடைய, ஒண்- அழகிய, கமலம்- தாமரைபோலே நிரதிஶயபோக்யமான, அது- அந்தத்திருவடிகளை, நினைந்தேன்- ப்ராப்யமென்று அநுஸந்தித்தேன், அங்கு- என்னுடைனக்குரிமையில்லாதபடி தேவர்க்கே அத்யந்தபாரதந்த்ரமாயிருக்கிற படியை, ஓர்ந்து- உள்ளூற நிரூபித்து, என்னையும்- ஸ்வரக்ஷணத்திலிறங்குகைக்கு அநர்ஹனானவென்னையும், ஒக்கினேன்- தன்னைப்பெறுகைக்குத் தானே உபாயமான வந்தத்திருவடிகளிலே நிக்ஷேபித்தேன், உபாயமும் தேவர்திருவடிகளேயென்று அத்யவஸித்தேனென்றபடி. இத்தால் ஸ்வாபேக்ஷிதஹ்ருதயனைக்கொண்டு தம்மை யவன் நிர்ஹேதுகமாக கடாக்ஷித்தபடியும் கடாக்ஷபலமாக ஸ்வரூபப்ராப்யப்ராபகங்களை உணர்த்தி, பதற்றம் துணிவுகள் தமக்குண்டானபடியுஞ் சொல்லித்தாய்த்து. அருளிலேநோக்கான திருவுள்ளத்தை எங்கள்மேலேவைத்து, அத்தாலேநாங்கள் [illegible] வேகம்பண்ணி உஜ்ஜீவிக்கிறபோதென்னவுமாம். (௫௯)

மு—ஓருருவனல்லையொளியுருவனின் னுருவம் * ஈருருவனென்பரி ருநிலத்தோர் *— ஒருருவமாதியாம்வண்ண மறிந்தாரவர்கண் டீர் * நீதியான்மண்காப்பார் நின்று. (சுo(

## அறுபதாம்பாட்டு.

அ—இப்படி ஸவேச்வரன் தன்பெருமைபாராதே எளியனுப் தம்மை விஷயீகரித்த நீர்மையை அநுஸந்திக்கையாலே "நிர ஜ்ஞஸ்வாதந்த்ர்ய மேன்மையன்று அவனுக்கு நிலைநின்ற வேஷம், ஆச்ரிதபாரதந்த்ர்யமே நிலைநின்றவேஷம்" என்றறிந் திருக்குமவர்கள் ஜகத்தை ஸர்வகாலமும் ரக்ஷிக்குமவர்களெ ன்கிறார்-

உன்படிபார்த்தால், (ஓர்) என்றுமொருபடிப்படி ஸ்வதந் த்ரமாயிருப்பதொரு, (உருவனல்லை) ஸ்வரூபத்தை யுடையை யல்லை 'ஸத்யகாமஸத்யஸங்கல்ப' என்கிறபடியே உன்னை ஆச்ரிதரிட்டவழக்காக்கி, (ஒளி) அத்தாலே புகர்பெற்று உஜ்ஜ்வ லமாயிருக்கிற, (உருவம்) ஸ்வரூபம், (நின்) உனக்கு, (உரு வம்) நிலைநின்றஸ்வரூபம், இப்படியிருக்கிற வுன்னை (இருநில த்தோர்) இந்த ஆச்ரிதபாரதந்த்ர்யத்தி னேற்றமறியாத ஸம்ஸா ரவ்ருத்தியிலுள்ள ஆப்தரையரானவர்கள், (ஈர்) நிரங்குசஸ்வா தந்த்ர்யமாகிற பெரிய, (உருவன்) ஸ்வரூபத்தை யுடையவன், (என்பர்) என்று இத்தைப் பெரியவேற்றமாகச் சொல்லாநின்று ர்கள், 'வ்யக்தபாரதந்த்ர்ய ...' என்னும்படி, (ஓர்) ஆச்ரிதபாரதந்த்ர்யமாகிற ஒருபடிப்பட்ட, (உருவம்) ஸ்வரூ பமே, (ஆதி) ஸர்வஸத்தாஹேதுவாய்க்கொண்டு, (ஆம்) ஆச்ரிதர்க்கு ஜீவநஹேதுவாயிருக்கும், (வண்ணம்) ப்ரகார த்தை, (அறிந்தார்) உள்ளபடியறிந்திருக்கும், (அவர்கண்டீர்) ஸாத்தாக்களான அவர்களிடீர், ஸம்ஸாரமறியனென்று ஜகத் தை வழியடித்துண்கிற வாய் கரையரைப்போலன்றிக்கே அவன் நீர்மையினேற்றத்தைச் சொல்லி, நீதியால் எல்லாரையும் ஸந் வஸ்வ்யவஹாரம்படி திருத்துகிற ந்யாயத்தாலே, (நின்று) உரு வநின்று, (மண்) ஜகத்தை, (காப்பார்) தனிரும்முறியுமாம்படி.

மூ—நின்றதோர்பாதநிலம்புதைப்ப * நீண்டதோள்சென்றளந்த
தென்பர் திசையெல்லாம் *— அன்றுகருமாணியாயிரந்த

ரக்ஷிக்கிறவர்கள், அன்றிக்கே 'பஹுதா விஜாயதே' என்கிற
படியே ஆச்ரிதார்த்தமாக அவதரித்தவிடங்களிலே அநேகம்
திருமேனியை யுடையையாகையாலே ஒருபடிப்பட்டதொரு
விக்ரஹத்தையுடையையல்லை, * ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமா
ந: * இப்படி பலவடிவெடுத்துக் கொண்டு பிறந்த விடத்திலும்
ஸாத்விக * மேயமாய்க்கொண்டு நிரவதிக தேஜோரூபமாயி
ருக்கும் உன்திருமேனி, இப்படி அஸாதாரணவிக்ரஹமும் அவ
தாரவிக்ரஹமுமாகிற இரண்டுவிக்ரஹத்தையு முடையையா
யிருப்புதி! என்று உன்னை நாட்டிலறிவுடையார் சொல்லாநின்று
ர்கள், ஐதரஸஜாதீயமா யவதரித்த அந்த அவதாரவிக்ர
ஹமொன்றுமே 'க்ருஷ்ணவஹ்நிலோகாநாம் உத்பத்திரபி சாவ்ய
யம்' என்கிறபடியே ஜகத்காரணமாயிருக்கிற ப்ரகாரத்தை
யறிந்தவர்கள் ஜகத்தை எப்போதும் ரக்ஷிக்குமவர்க ளென்
றுமாம். (௬௦)

அறுபத்தோராம்பாட்டு.

அ—கீழ்ச்சொன்ன ஆச்ரிதவாத்ஸல்யம்தன்னை அநுபவித்
துக்காட்டினபடியைச்சொல்லுகிறார்-

ஒருநினைவற்றிருக்கச்செய்தே, (நின்றதோர்) நின்றதொரு
(பாதம்) திருவடிகள், (நிலம்) பூமிப்பரப்பையடங்கலும்,
(புதைப்ப) புறம்தோற்றாதே தன்கீழேயடங்கும்படி அளந்துகொ
ள்ள, (நீண்ட) அபிவ்ருத்திபெற்ற, ஊர்த்வகக்ஷைத்த மேலே மூசிவற
வளர்ந்த, (தோள்) திருத்தோளானது, (திசையெல்லாம்) திக்
குக்களெல்லாவற்றையும், (சென்று) சென்று, (அளந்து) அள
ந்துகொண்டது, (என்பர்) என்றுவிவக்ஷிதர் சொல்லாநின்றார்
கள், (அன்று) இந்த்ரன் கண்ணுங்கண்ணீருமாய்க்கொண்டு திரு
வடிகளிலே வந்து விழுந்தவன்று, (கரு) ச்ரேஷ்டமான கறுத்த
நிறத்தையும், (மாணியாய்) இரப்பிலேதகணேறின ப்ரஹ்மசாரி
வேஷத்தையு முடையனாய்க்கொண்டு, (இருந்த) ஔதார்யத்தை

மூ—கள்வனே* யுன்னைப்பிரமாணித்தார்பெற்ற பேறு. (௬௧)

பேறொன்றுமுன்னறியேன் பற்றிறியேன் பேதைமையால்*
மாறென்றுசொல்லிவணங்கினேன் *— ஏறின்பெருத்தெருத்தம்
கோடொசிய ப்பெண்நசைபின்பின்போய் *
எருத்திறுத்தநல்லாயரேறு. (௬௨)

---

யை ஸர்வஸ்வாபஹாரம்பண்ணின, (கள்வனே) க்ருத்ரிமனே? உன்னையழியமாறி ஈஹாவஷிபக்கற்கிடந்த ஜீவிஜியை மீட்டுக் கொடுத்தவிது, உன்பக்கலிலே தங்கள்பாரத்தைப்புகட்டு, (உன்னை) உன்னை, (பிரமாணித்தார்) விஶ்வஸித்திருந்த வாஶ்ரிதரானவர்கள், (பெற்ற) நிர்ப்பரராய் மார்விலே கைவைத்துறங்கும்படி பெற்றதொரு, (பேறு) பேறன்றோ, அவர்களுக்குவைத்த தண்ணீர்ப்பந்தலன்றோ வென்றபடி. (௬௧)

## அறுபத்திரண்டாம்பாட்டு.

அ—இப்படி ஆஶ்ரிதவாத்ஸல்யனானவனே என் விரோதிவர்க்கங்களைப்போக்கி அபேக்ஷிதத்தையும் தருவானென்று அவனைப்பற்றினேனென்கிறார்.

(ஏறின்) ரிஷபங்களுடைய, (பெருத்த) வளர்ந்த, (எருத்தம்) ஸ்கந்தங்களும், (கோடு) கொம்புகளும், (ஒசிய) முறியும்படிக்கீடாக, (பெண்) நப்பின்னைப்பிராட்டிபக்கலுண்டான, (நசையின்) ஆசையை, (பின்போய்) பின்சென்று, (எருத்து) அந்தரிஷபங்களுடைய கழுத்தை, (இறுத்த) திருகிப்புகட்டவனாய், (நல்) தன்னோடொத்த நல்லபருவத்தையுடைய, (ஆயர்) இடைப்பிள்ளைகளுக்கெல்லாம், (ஏறு) தலைவனாகையால் வந்த செருக்கையுடையனான க்ருஷ்ணன், (மாறென்றுசொல்லி) நம்முடைய ப்ராப்திவிரோதிவர்க்கமான ஸம்ஸ்காரங்களுக்கு ஶத்ருவாயிருக்குமவனென்று, (வணங்கினேன்) ஆஶ்ரயித்தேன், (முன்) இதுக்குமுன்பு, (ஒன்று) இப்படியிருப்பதொரு, (பேறு) பகவத்ஸாக்ஷாத்காரமென்று, (அறியேன்) அறியவும்பெற்றிலேன், (பெற்றறியேன்) அத்தாலே இப்பகவத்ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றநுபவிக்கப்பெறாமல் இழந்துபோனேன், இதுக்கடி (பேதைமை) என்னறிவுகேடு, (ஆல்) ஐயா, அறிவுகேடு என்படுத்தாதுதான். (௬௨)

மூ—ஏறேழும்வென்றடர்த்தவெந்தை * பெரியுருவத்தேறேறிப
ட்டவிடுசாபம் *— பாறேறியுண்டதலைவாய்நிறையக் கோட்டங்
கைபொண்குருதி * கண்டபொருள்சொல்லில் கதை. (சுங)

❁ அறுபத்துமூன்றாம்பாட்டு. ❁

அ—அவிரோதியான ருத்ரனுடைய பாவத்தைப் போக்குகைக்கு முமவனே சூரணியனென்கிறார்-

(ஏறேழும்) ரிஷபங்களேழையும், (வென்று) ஜயித்து, (அடர்த்த) திருகிப்புகட்ட, (எந்தை) என்ஸ்வாமியான க்ருஷ்ணன், (எரி) நெருப்புப்போலே யெறிட்டுப் பார்க்கவொண்ணாத, (உருவத்து) வடிவையுடையனுப் செருக்குக்குப் போக்குவீடாக, (ஏறு) ரிஷபத்தை, (ஏறி) மேற்கொண்டு நடத்தக்கடவனுயான ருத்ரன், முன்பு தலையறுக்கிறவிடத்தில் நோதிபண்ணியிருந்து பின்பு சாவிதனுப்கொண்டு, (விடு) ப்ரஹ்மா 'கபாலீ கைலஸ விஷ்யஸி' என்றுசபிக்க, (பட்ட) ஸாவொபஹதனுய்க் கையுந்தலையோடுமாய்க் கொண்டிரந்து திரியும்படி மறுபாடுரு வப்பட்ட, (சாபம்) வந்தேறியானபாவத்தை, (பாறு) கழுகும் பருந்தும் பாறுஎன்கிற விசேஷமுடையானவிவை, (ஏறி) மேல் விழுந்து, (உண்ட) ஜீவித்த, (தலை) தலையோடு, (வாய்) வாய ளவும், (நிறைய) நிறைந்து, 'ஸஹஸ்ரதா வேஹாயா யாதம்' என்னும்படி சில்லுச்சில்லாக வெடித்துப்போம்படி, (கோடு) குவித்த, (ஒண்) அழகிய, (கை) திருக்கையாலே, திருமேனி யிலொருவாஸத்தைக் கீறிவாங்கித்தெறித்த, (அம்) அழகிய (குருதி) ரத்தத்தாலே, (கண்ட) கையில்நின்றும் தவிழ்ந்துபோம்படிகண்ட, (பொருள்) இவ்வருத்தத்தை, (சொல்லில்) சொல் வழியில், (கதை) ஒருமஹாபாரதத்தோடொக்கும், ஸம்ஸார ஞகவும்வேண்டா பாதகியாகவும்வேண்டா அங்கைகென்றது பாதகத்தைப் போக்கவல்ல வழகியகைகென்றபடி. ஒண்குருதி யென்றது அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே அப்ராக்ருதமான திருமேனியிலேநின்று முண்டானதாகையாலே யடிக்கழுஞ்சுபெ ற்ற குருதியென்றபடி. (சுங.)

மூ — கதையும்பெரும்பொருளும்கண்ணாநின்பேரே * இதயமிருந்தவையேயேத்தில் * — கதையும்திருமொழியாய்நின்றதிருமாலே * உன்னைப்பருமொழியாற்காணப் பணி. (சுச)

### அறுபத்துநாலாம்பாட்டு.

அ — இப்படி ஸம்ஸாரிகளுக்கும் காரியஞ்செய்யக்கடவ நீ உன்னாலல்லது செல்லாத நானுன்திருநாமங்களைச் சொல்லி முழுமிடறுசெய்து அநுபவிக்கும்படி பண்ணியருள வேணுமென்கிறார்-

(கண்ணா) ஸர்வஸுலபனான க்ருஷ்ணனே? (கதையும்) ஸ்வசேஷ்டிதத்தை கவியோலே வகையிட்டுப் பரக்கச்சொல்லுகிற, (பொருளும்) அர்த்தங்களும், (இதயம்) அந்த இதிஹாஸங்களின் தாத்பர்யமும், (இருந்தவையே) இருந்தபடியே (ஏத்தில்) அறிந்துகொண்டு ஸ்துதிக்கில், (நின்) உன்னுடைய, (பேரே) குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களேயாயிருக்கும், (கதையும்) உபநிஷத்ஸித்தமான வித்யாவிசேஷங்களில் கவியோலேயுன்குணசேஷ்டிதங்களை விஸ்தரித்துச்சொல்லுகிற, (திரு) அழகிய, (மொழியாய்நின்ற) சப்தங்களுக்குள்ளீடான பொருளாய்க்கொண்டு நின்ற, (திருமாலே) ஸ்ரீயஃபதியானவனே? (உன்னை) இப்படி ப்ரதிபாத்ய வ்யூஹங்களாலே ப்ரதிபாதிக்கப்பட்ட ஸ்ரீயஃபதியானவுன்னை, இப்படி சப்தமாத்ர காண்கையன்றிக்கே ஒருதேசவிசேஷத்திலே வந்து பரிபூர்ணமாக, "ஸதாபச்யந்தி" என்றநுபவித்து அநுபவஜநிதப்ரீதிக்குப் போக்குவிட்டு 'ஹாவுஹாவுஹாவு' என்று முழுமிடறுசெய்து பேசுகிற, (பருமொழியால்) பரிபூர்ணசப்தங்களாலே, (காண) கண்டநுபவிக்கும்படி, (பணி) திருவுள்ளமாயருளவேணும். கதையும்திருமொழியாய்நின்ற வென்கிறவிடத்திலே கதையென்று இதிஹாஸாதிகளையே சொல்லிற்றாகவுமாம். (சுச)

### அறுபத்தைந்தாம்பாட்டு

அ — இப்போதுமக்குச் செய்யவேண்டுவதொன்றுண்டோ? நீர்

மூ — பணிந்தேன் திருமேனி பைங்கமலங் கையால் * அணிந்தேனுன் சேவடிமேலன்பாய் *— துணிந்தேன் புரிந்தேத்தியுன்னைப் புகலிடம்பார்த்து * ஆங்கேயிருந்தேத்தி வாழுமிது. (௬௫)

---

எல்லாம்பெற்றீரேகாணுமென்ன; அந்தவர்த்தத்தை யநுஸந்தித்து தந்நாஸ்யமாகப் பரிமாறுகிறார்—

'நநமேயம்' என்னும்படி ஸ்வாதந்த்ர்யத்தாலே தலைவணக்கமற்ற நான், (திரு) உன்னுடைய அழகிய, (மேனி) திருமேனியை, (பணிந்தேன்) கண்டு ஆழங்கால்பட்டு வேரற்றமரம்போலே ஸாஷ்டாங்கமாக விழுந்தேன், அடிமைசெய்யாவிடில் தரிக்கவொண்ணாத வேகத்தையுடையனாய்க்கொண்டு, (உன்) வகுத்தசேஷியான வுன்னுடைய, (சே) சிவந்த, (அடிமேல்) திருவடிகளின்மேலே, (கையால்) எடுத்துக் கைநீட்டக்கண்ட கையாலே, (பை) அழகிய, (கமலம்) தாமரைப்பூக்களை, (அணிந்தேன்) அழகுபெறச்சாத்தினேன், எழுந்தருளாநின்றால் (புரிந்து) முன்னே சேவித்துப்புரிந்து முன்புள்ளவழகைக் கண்டு களித்து, (உன்னை) உன்னை, (ஏத்தி) ஸ்தோத்ரம்பண்ணி, (புகலிடம்) புக்கருளுகிறவிடத்திலே, (பார்த்து) பின்புள்ளவழகைக் கண்டு, கால்வாங்கமாட்டாதே (ஆங்கே) அவ்விடந்தன்னிலே (இருந்து) இருந்து, (ஏத்தி) சேவநடையழகு இப்படியாறே செல்லவேணுமென்று புகழ்ந்து, (வாழும்) மங்களாசாஸநம்பண்ணி இப்படி அநுஸந்தித்து வாழுகையாகிற, (இது) இப்புருஷார்த்தத்திலே, (துணிந்தேன்) வ்யவஸிதனானேன், அங்ஙனன்றிக்கே புகலிடமென்கிறது ஸ்வதாமஸந்நிதியில்போய் புக்கருளும் ஸ்ரீவைகுண்டத்தையாய், ஆங்கே 'சூழ்ந்திருந்தேத்துவர்' என்கிறபடியே அவர்கள் நடுவேபுக்கிருந்து ஏத்திவாழ வேணுமென்னுமதிலே அத்யவஸித்தேனென்னவுமாம், இது திருமலைநம்பி நிர்வாஹம். (௬௫)

## அறுபத்தாறும்பாட்டு.

அ — ஸர்வைச்வர்யம்பெற்ற வளவமையும் அநர்த்தாவஹமான விஷயங்களின் தோஷத்தையநுஸந்தித்து ஸாராவிபிறக்கையே வேண்டுவதென்கிறார்-

மூ— இது கண்டாய் நன்னெஞ்சே பிறவியாவது * இது கண்டாய் எல்லாம் நாமுற்றது * — இது கண்டாய் நாரணன் பேரோதி நரகத்து அருகணையாக் * காரணமும் வல்லையேல் காண். (௬௬)

கண்டேன் திருமேனியான்கனவில் *

---

ஸம்ஸாரம் பொல்லாதென்றால் (நல்) அதுக்கிசைந்து என்னோடே ஒருமிடறானநல்ல, (நெஞ்சே) நெஞ்சே? இது நிலைநிற்கும் போக்யமாயிருக்குமென்று நாட்டார் ப்ரமிக்கிற ஆகாரமன்றிக்கே ஸஹவாஸத்தாலே உபலக்ஷிக்குமளவில், (இ) ஸுதுஷ்டதோஷதுஷ்டமான விந்த, (பிறவியாவது) ஸம்ஸாரமாகிறது, (இது கண்டாய்) ஸுக்ராவஸ்ராவாதி தோஷதூஷிதமான இவ்வாகாரத்தோடே கூடினவிதுவே கிடாய், (எல்லாம்) முன்பநாதியானகாலமெல்லாம், நன்றாய்த்தோற்றுகிற வாகாரத்தாலே, (நாம்) நாம், (உற்றது) மறுபாடுருவ அநுபவம்பண்ணிப்போந்தது, (இது கண்டாய்) இதுகிடாய், (நாரணன்) வகுத்த சேஷியான நாராயணனுடைய, (பேர்) குணாதிகளுக்கு வாசகமான திருநாமங்களை, (ஓதி) நிரந்தரமாகச் சொல்லி, (நரகம்) ஸம்ஸாரமாகிற நரகத்தினுடைய, (அருகு) ஸமீபத்திலும், (அணையா) ப்ரவேசியாமைக்கு, (காரணமும்) காரணமும், (இது கண்டாய்) ஸுக்ராவாதிதோஷங்களாலே த்யாஜ்யமென்னுமாகாரம் ப்ரத்யக்ஷிக்கலாம்படியிருக்கிற விஜ்ஞானம் வையம்கிடாய் மேலெழத் தோற்றுகின்ற நன்மையிற்பசையில்லை, தோஷமேவேஷமென்று இத்தைத்தப்பாதபடி, (வல்லையேல்) காணவல்லையாகில், (காண்) நாம்சொன்ன தொக்குமென்னுமிடத்தைக் கண்டுகொள்ளு. (௬௭)

## அறுபத்தேழாம்பாட்டு.

அ— இவர் திருவுள்ளத்தைக்குறித்து ஸம்ஸாரதோஷத்தைக் காணென்ற அநந்தரம் அவன் நிர்ஹேதுகமாகத் தன்னைக்கொண்டுவந்துகாட்ட அதில் தாம்கண்ட ஸம்ப்ரமத்தை யருளிச்செய்கிறார்.

(யான்) நிர்ஹேதுகமாக அவனாலே ஸம்ஸ்க்ருதனான நான், (கனவில்) இந்த்ரியவ்யாபாரவிட்டு நீட்டிக்காண்கையன்றிக்கே

மூ—ஆங்கவன் கைக்கண்டேன் கனலுஞ்சுடராழி கண்டேன் *—
உறுநோய்வினையிரண்டு மோட்டிவித்துப் *
பின்னுமறுநோய்செறுவான் வலி. (கள)

வலிமிக்கவாளெயிற்று வாளவுணர்மாள * வலிமிக்கவாள்
வரை மத்தாக *— வலிமிக்கவாணாகஞ்சுற்றி

---

ஸௌகுமார்யமாய் அதிலும் விலக்ஷணமான ஸந்நிவேசமுடைமை யிலே, (திரு) அழகிய, (மேனி) திருமேனியை, (கண்டேன்) கண்டநுபவிக்கப் பெற்றேன், (அவன்) அப்படிப்பட்ட அழகையுடையவன், (கை) திருக்கையிலே, (கனலும்) ஶத்ரு வக்ஷத்தின்மேலே சீறுபாறென்னாநின்றுள்ள, (சுடர்) தேஜோ ரூபமான, (ஆழி) திருவாழியை, (கண்டேன்) கண்டேன்; (உறு) துறக்கவொண்ணாதபடி ஆத்மாவோடேகூடி, (நோய்) து:கஹேதுவான, வினை- புண்யபாபரூப கர்மங்கள், இரண்டும்- இரண்டையும், ஓட்டிவித்து- துரத்திவிட்டு, பின்னும்- பின்னையும், மறு- மறுகிளைகிளர்ந்து வரக்கடவதாய், நோய்- து:கஹேதுவான வாஸநாருசிகளையும், செறுவான்- செறுத்துமுடிக்குமவன், வலி- மிடுக்கையும், கண்டேன்- காணப்பெற்றேன். (கள)

## ❁ அறுபத்தெட்டாம்பாட்டு. ❁

அ—ப்ரயோஜநாந்தரபரரே யாகிலும் தன்னை வந்தடுத்தால் வருந்தியு மவர்களபேக்ஷிதஸம்விதாநம் பண்ணுமென்கிறார்—

வலிமிக்க- பெருமிடுக்கராய், வாள்- ஒளிவிடுகிற, எயிறு- எயிற்றையுடையருமாய், வாள்- ஸாயுதருமான, அவுணர்- அஸுரஜாதிகள், மாள- நசிக்கும்படியாகவும், தான் நெருக்கினவிடத்திலும் பிரிந்துபோகாதபடி, வலிமிக்க- கடி னதரமாய், வாள்- ஒளிவிடுகிற, வரை- மந்த்ரபர்வதம், மத்தாக- மத்தாகவும், வலிமிக்க- நெடும்போது இடவாய் வலவாய்ச்சுற்றிக்கிடக்கிற வளவிலும் அற்றுப்போகாதபடியான மிடுக்கையும், வாள்- மலையோடே தேய்ப்புண்கையாலே வந்தவொளியையுமுடைய, நாகம்- வாஸுகியாகிற பாம்பை, சுற்றி

ரு—மறுகக்கடல்கடைந்தான் * கோளுகங்கொம்பொசித்த கோர்*, கோவாகிமாகிலங்காத்து * நங்கண் முகப்பேமாவேகிச்செல் கின்றமன்னவரும் *— பூமேவுஞ்செங்கமலநாபியான் சேவடிக்கே யேழ்பிறப்பும் * தண்கமலமேய்ந்தார் தமர். (௬௮)

---

கடைகயிறுகச்சுற்றி, மறுக- கீழ்மண்கொண்டு மேல்மண்ணெறியும்படி, கடல்- கடலை; கடைந்தான்- கடைந்தருளினவன், கோள்- ஸவஜ்ரருக்கும் வேர்பற்றுன தன்திறத்திலே நலியவந்த மிடுக்கையுடைய, நாகம்- குவலயாபீடத்தின், கொம்பு - கொம்பை ஒசித்த- அநாயாஸேந முறித்துப்புகட்ட, கோ- ஸவஜ்ஞேஸ்வரிகிடைர், இத்தால் தம்விரோயியைப்போக்கித் தம்மையெழுதிக்கொண்டபடி சொல்லுகிறது. (௬௮)

❁ அறுபத்தொன்பதாம்பாட்டு. ❁

அ—ஸமஷ்டத்தில் தேவர்களிவனைப்பற்றித் தங்கள் ப்ரயோஜநம் பெற்றவளவன்றிக்கே ஸம்ஸாரகத்தில் ராஜாக்களு மிவனைப்பற்றித் தந்தாம்பதம்பெற்றுப் போகாநினைருர்கள் கிடைரென்கிருர்—

(கோவாகி) ஸவஜ்த்துக்கும் ஸ்வாமிகளாகமுடிசூடி, (மா) பரப்பையுடைத்தான, (நிலம்) ஸம்ஷியை, (காத்து) சிறியதை ப்பெரியது நலியாதபடி ரக்ஷித்து, (நங்கண்முகப்பே) நங்கண் வட்டத்திலே, (மா) குதிரைமுதுகை, (ஏகி) படைவீடாகநடத்தி, (செல்கின்ற) செல்கின்ற, (மன்னவரும்) ராஜாக்களும், (பூ) ஹைமுலேதீ, (மேவும்) பொருந்தியிருந்துள்ள, (செம்) சிவந்த, (கமலம்) தாமரைப்பூவை, (நாபியான்) திருநாபியிலேயுடையனுப் அத்தாலே ஸவஜ்காரணஸம்ஷிதனை ஸவேஸ்வரனுடைய, (சே) சிவந்த, (அடிக்கே) திருவடிகளிலே, (ஏழ்பிறப்பும்) ஜந்மங்கள்தோறும், (தண்) குளிர்ந்த, (கமலம்) தாமரைப்பூமுதலான புஷ்பங்களை, (ஏய்ந்தார்) சாத்தி ஆராயித்த, (தமர்) ஆஸ்ரிதர்கிடைர், ஏய்ந்தாருடைய தமர்கிடைர்என்னுதல், செங்கமலப்பூமேவும் நாபியானென்னவுமாம், 'பூவேகும் செங்கமலநாபியான்' என்று பாடமானபோது பூக்கள் தள்ளும்படியான செவ்வியையுடைய கமலத்தை நாபியிலேயுடையவனென்று பொருளாகக்கடவது. (௬௯)

மூ—தமருள்ளம்தஞ்சைதலையரங்கந்தண்கால் * தமருள்ளுந்தண் பொருப்புவேலை *— தமருள்ளுமாமல்லைகோவல்மதிட்குடந்தை யென்பரே * ஏவல்லவெந்தைக்கிடம். (௭௦)

## எழுபதாம்பாட்டு.

அ—இப்படி ப்ரயோஜநாந்தரபரராய் ஆஶ்ரயிக்கையன்றிக்கே அநந்யப்ரயோஜநராய்த் தன்னை ஆஶ்ரயித்தவர்களுடைய திருவுள்ளத்தை உகந்தருளின திருப்பதிகளெல்லா மொருதட்டும் இதொருதட்டுமென்னும்படி ஒக்கவிரும்பி அவன்பரிமாறும்படியை யருளிச்செய்கிறார்.

(தமருள்ளம்) மேற்சொல்லுகிற திருப்பதிகளெல்லாவற்றிலும் ப்ரபோக்யமான ஆஶ்ரிதருடைய ஹ்ருதயங்கள், (தஞ்சை) தஞ்சைமாமணிக்கோயில், (தலை) திருப்பதிகளெல்லாவற்றிலும் ப்ரதாநமான, (அரங்கம்) பரமபதத்தோடே கூட வெண்ணலாம்படியான கோயில், (தண்கால்) திருத்தண்கால் (தமர்) ஸ்ரீவைஷ்ணவர்கள், (உள்ளும்) தங்களுக்கு ஸர்வஸ்வமாக அநுஸந்தித்திருக்கும், (தண்) ஶீதளமான, (பொருப்பு) திருமலை, (வேலை) எல்லாவற்றுக்குமடியான திருப்பாற்கடல், (தமர்) ஆஶ்ரிதரான பரமைகாந்திகள், (உள்ளும்) தங்களுக்குபோக்யமாக அநுஸந்தித்திருக்கும், துறைக்கிடைகிடக்கும் (மா மல்லை) திருக்கடல்மல்லை (கோவல்) எங்கள்மூவரோடு ஒக்கநெருக்கின திருக்கோவலூர், (மதிள்) அரணான மதிள்களையுடைத்தாய், (குடந்தை) திருமழிசைப் பிரானுகந்த திருக்குடந்தையாகிற இவ்விவ திவ்யதேஶங்களெல்லாம், (ஏவல்ல) ப்ரதிபக்ஷத்தையெய்து விழவிடவல்ல, (எந்தைக்கு) என்ஸ்வாமியான தஶரதாத்மஜனுக்கு, (இடம்) வாஸஸ்தாநமாக, (என்பர்) அறிவுடையார் சொல்லாநின்றார்கள், (ஏவல்லவெந்தை) எய்கைக்குவல்லனான என்ஸ்வாமியென்றபடி. (௭௦)

## எழுபத்தோராம்பாட்டு.

அ—ஸர்வேஶ்வரன் ஆஶ்ரிதார்த்தமாகத் திருவுலகளந்தருளின தேஶயிலே அநுஸந்தித்து நித்யஸூரிகள் ஸ்வாரஸ்ய ஸம்ஶ்லேஷம்பண்ணிப் படும்பாடுசொல்லுகிறார்—

மூ—இடங்கைவலம்புரிநின்றார்ப்ப * எரிகான்றடங்கா ரொடுங் குவித்ததாழி *—விடங்காலுந்தீவாயரவணைமேற்றோன்றல்திசை யளப்பான் * பூவாரடிநிமிர்த்த போது. (எக)

போதறிந்துவானரங்கள்பூஞ்சுனைபுக்கு * ஆங்கலர்ந்த

---

பரிவின்வுநத்தாலே ப்ரதிகூலர்மேலே, (விடம்) விஷயத்தை, (காலும்) உமிழாநின்றுள்ள, (தீ) பயங்கரமான, (வாய்) வாயையுடைய, (அரவணைமேல்) திருவனந்தாழ்வான் மேலே சாய்ந்தருளக்கடவ, (தோன்றல்) ஸௌசீல்யத்தில் ப்ரதாநனானவன், (திசை) காடுமோடையான திக்குக்களோடேகூடின பூமியை, (அளப்பான்) அளக்கைக்காக, (பூவார்) புஷ்பஹாஸஸௌகுமார்யமான, (அடி) திருவடிகளை, (நிமிர்ந்த) வளர்த்தருளின, (போது) காலத்தில், (இடங்கை) இடத்திருக்கையிலே, (வலம்புரி) ஸ்ரீபாஞ்சஜந்யமானது, (நின்ற) அப்போதப்போதுபிறந்த விஜயத்தை யநுஸந்தித்த ஹர்ஷத்தாலே ப்ரதிகூலர் மண்ணுண்ணவும் அநுகூலர் கொந்தளிக்கவும், (நின்று) ஒருபடிப்பட்டுநின்று, (ஆர்ப்ப) முழங்க, (ஆழி) திருவாழியானது, அஞ்சார்த்துக்கொள்ள அவஸரமற்று (எரி) நெருப்பை, (கான்று) உமிழாநின்றுகொண்டு, (அடங்கார்) சத்ருக்களான நமுசிப்ரப்ருதிகளை, (ஒடுங்குவித்தது) வாய் வாரென்று முடங்கப்பண்ணிற்று. (எக)

## எழுபத்திரண்டாம்பாட்டு.

அ—அளவுடையரான நித்யஸூரிகளும் இப்படிபடுகிற விஷயத்தை நமக்குச்சென்றாஶ்ரயிக்கப்போமோவென்று பிற்காலிக்கிற திருவுள்ளத்தைக்குறித்து திர்யக்குக்களுக்கு ஆஶ்ரயிக்கலாம்படி ஸுலபனானபின்பு நீயுமதிலே யொருப்படென்கிறார்—

வானரங்கள்— குரங்குகளானவை, போதறிந்து- ரிஷிகள் ப்ராஹ்மமுஹூர்த்தத்திலே யுணருமாப்போலே காலமறிந்துணர்ந்துபோய், பூ- பரப்புமாறப்பூத்த, சுனை-சுனைகளிலே, புக்கு- ரிஷிகள் அவகாஹனம் பண்ணும்போலே சென்றுபுக்கு, ஆங்கு- அவ்விடத்தில், அலர்ந்த- கழியவலருதல், கடுமொட்டாதன்றிக்கே

மூ—போதரிந்துகொண்டேத்தும் போதுள்ளம் *—
போதுமணிவேங்கடவன் மலரடிக்கேசெல்ல *
அணிவேங்கடவன்பே ராய்ந்து. (௭௨)

ஆய்ந்துரைப்பனாயிரம்பே ராதிநடுவந்திவாய் * வாய்ந்த

அப்போதலர்ந்த, போது- செவ்விப்பூக்களை, அரிந்துகொண்டு- பறித்துக்கொண்டு, ஏத்தும்- ஜாத்யுசிதமான ஏதேனுமொன்றைச்சொல்லி ஸ்துதித்துகொண் டாஶ்ரயியா நிற்கும், உள்ளம்- நெஞ்சே? போது- நீயும்பிற்காலியாதே போது, போந்த வநந்தரம், வேங்கடவன்- திருவேங்கடமுடையானுடைய, பேர்- ஶௌர்யாதிகுணங்களுக்கு வாசகமான திருநாமங்களை, ஆய்ந்து- அநுஸந்தித்துக்கொண்டு, மணி- நீலரத்நம்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையனை, வேங்கடவன்- திருவேங்கடமுடையானுடைய, மலர்- பூப்போலே ஸுகுமாரமான அடிக்கே- திருவடிகளுக்கே, செல்ல- சென்றுகிட்டும்படி, போது- செவ்விப்பூக்களை அழகுபெறச்சாத்தி, அடி- ஆஶ்ரயிக்கப்பார், அன்றிக்கே ஸம்ஹாரத்துக்காரணமான திருவேங்கடமுடையானென்றுப் வேங்கடவன் மலரடிக்கே செல்லப்போது போதுமடியென்றுமாம். (௭௨)

❁ எழுபத்துமூன்றாம்பாட்டு. ❁

அ—ஸர்வஸமாஶ்ரயணீயனானவன் ஶீலத்தை அநுஸந்தித்து அவன் திருவடிகளிலே தாம் நித்யகைங்கர்யம் பண்ணுவதாக அத்யவஸித்தபடியை யருளிச்செய்கிறார்—

பிறை- பிறையோடு, ஏய்ந்த- ஒத்திருந்துள்ள, கோடு- கொம்புகளையும், செம்- அழகிய, கண்- கண்களையுமுடைத்தான, கரி- ஸ்ரீகஜேந்த்ராழ்வானை, விடுத்த- தரையிலொரு பூவிழாதபடி முதலைவாயில்நின்று மொள்ளவிடுவித்தருளின, பெம்மான்- ஸர்வேஶ்வரனை, இறைக்கு- என்நாயனுக்கு, ஆள்பட- அடிமைசெய்கையிலே, துணிந்த- அத்யவஸித்த, நான்- நான், ஆதி- முதலும், நடு- நடுவும், அந்திவாய்- அந்தியுமான, வைகலும்- ஸர்வகாலங்களிலும், வாய்ந்த- ஏதேனுமாகக்கட்டின,

ழூ — மலர்தூவிவைகலும் * — ஏய்ந்தபிறைக்கோட்டுச்செங்கண்
கரிவிடுத்தபெம்மான் * இறைக்காட்படத்துணிந்தயான். (எங)

யானேதவஞ்செய்தேனேழ்பிறப்பு மெப்பொழுதும் *
யானேதவமுடையேனெம்பெருமான் * — யானேயிருந்தமிழ்நன்
மாலையிணையடிக்கேசொன்னேன் * பெருந்தமிழன்

---

மலர் - பூக்களை, தூவி - அடைவுகெடப்பணிமாறி, இன்னதிருநாமமென்றொரு நியதியற, ஆயிரம்பேர் - குணசேஷ்டிதாதிகளுக்கு வாசகமான ஆயிரம் திருநாமத்தையும், ஆய்ந்து - அநுஸந்தித்துக்கொண்டு, உரைப்பன் - சொல்லிநிற்பன், ஆன்றிக்கே சேர்ந்தபிறைபோலே யிருந்துள்ள கொம்புகளையும் சிவந்தகண்களையு முடைத்தான குவலயாபீடத்தை நிரஸித்தபடியாகவுமாம், அப்போது தம்விரோதியை நிரஸித்தபடிக்கு த்ருஷ்டாந்தம், மற்றப்போது மற்றுள்ள ஆஸ்ரிதவிஷயத்தில் வத்ஸலனைப் அவர்களாபத்தை நீக்கும்படிக்கு த்ருஷ்டாந்தம். (எங)

❁ எழுபத்துநாலாம்பாட்டு. ❁

அ — இப்படி கைங்கர்யம்பண்ணுகையால் வந்த ஹர்ஷத்தாலே யவனுக்கு ஸத்ருஶமாகக் கவிபாடும்படியான ஸுக்ருதம்பண்ணினேன்நானேயென்கிறார் —

எம்பெருமான் - இவ்வாத்மாவை ஸ்வாபாவிகமாகத் திருவடிகளிலே அடிமைகொள்ளுகைக்குரிய வென்னுடைய நிருபாதிகஶேஷியானவனே? ஏழ்பிறப்பும் - ஸகலஜந்மங்களிலும், எப்பொழுதும் - அதுதன்னில் எல்லாவவஸ்தைகளிலும், தவம் - உன்திருவடிகளிலே வாசிககைங்கர்யம் பண்ணுகையாகிற விப்பேற்றுக்கடியான தபஸ்ஸை, செய்தேன் - பண்ணினேன், யானே - நானே, அந்த தபஃபலமாகவந்த, இரும் - லக்ஷணலக்ஷ்யங்களிற் குறைவற்றிருக்கும் பெருமையையுடைத்தாய், நல் - ஸர்வாதிகாரமாய் ஸத்ருஶலக்ஷணமான, தமிழ்மாலை - த்ராவிடஸந்தர்ப்பங்களை, இணை - சேர்த்தியழகையுடைத்தான, அடிக்கே - தேவர்திருவடிகளுக்கே, சொன்னேன் - சொல்லப்பெற்றேன், யானே - நானே, பெருந்தமிழன் - த்ராவிடபாஷா

பெருகுமதவேழம் மாப்பிடிக்குமுன்னின்று*
இருகணிளமூங்கில்வாங்கி *— யருகிருந்ததேன்கலந்துநீட்டும்
திருவேங்கடங்கண்டீர் * வான்கலந்த

---

த்திலென்றனை சுவமாஹித்தாரில்லையென்னுமப்படி அதில் சேஷி கனுயிருப்பானொருத்தன், அவ்வளவன்றிக்கே 'ஹாதஸாசமாய ஊாஹெஷு' என்று பாங்கானநிலத்திலேயிருந்து பாடியாடி யடிமை செய்யக்கடவ நித்யஸூரிகளைப்போலன்றிக்கே இங்கேயிருந்து கவிபாடப் பெறுகையாலே அவர்களிலும், பெருகு- மிகவும், நல்லேன்- நல்லனாயிருப்பானொருத்தன். (எச)

❁ எழுபத்தைந்தாம்பாட்டு. ❁

அ—பெருகுநல்லேனென்று கொண்டாடிச் சொன்னீர், இப்படி பெருமதிப்பராயிருக்கிற நீர்தாமொருகவிசொல்லிக் காணீரென்ன, அப்போது விண்ணப்பஞ்செய்த கவிதன்னைச்சொல்லுகிறார்—

பெருகு- திருமலையிற்றிருவருவிகள் பெருக்கெடுக்குமாப்போலே மேன்மேலெனப் பெருகாநின்றுள்ள, மதம்- மதத்தையுடைத்தான, வேழம்- ஆனையானது, எல்லாவளவிலும் தன்னையேவிக் காயடுங்கொள்ளவல்ல, மா- ஸ்ரூாவ்யமான, பிடிக்கு- பிடிக்கு, நான் இக்குத்தைக்குச் செய்யக்கடவ பணிவிடைகளை கற்பிக்கலாகாதோவென்று, முன்நின்று— விநயந்தோற்ற முன்னேவந்துநின்று, இரு- இரண்டு, கண்- கண்ணேறி, அதுக்குத் தக்கமூற்றினவுமின்றிக்கே, இளம்- இளையதாயிருக்கிற, மூங்கில்- மூங்கில்குருத்தை, வாங்கி- செவ்விகுன்றுதபடி ஸாவதானமாக வாங்கி, அருகு— அருகில், இருந்த- மலை முழைஞ்சுகளிற்கூட்டிலே நிறைந்திருக்கிற, தேன்- தேனிலே, கலந்து- மூங்கில்குருத்தும் தேனும் தன்னிலேபொன்றி ஒருநீராம்படி தோய்த்து, உனக்கு வேண்டுவார்க்குக் கொடாயென்று அது சுநாசுரித்து நிற்க, நீட்டும்- இத்தனையு ஸமீகரிக்கவேணுமென்று ஸாசுரமாகக்கொடுக்கும், திரு- சிறப்பையுடைத்தான, வேங்கடங்கண்டீர்- திருவேங்கடங்கிடீர், வான்— ஜேவத்தோடு, கலந்த

ரு — வண்ணன் வரை. (எரு)

வரைச்சந்தனக்குழம்பும் வான்கலனும்பட்டும் * விரைப்பொலிந்தவெண்மல்லிகையும் * — நிரைத்துக்கொண்டாதிக்கணிந்தவறிவனடியிணையே * யோதிப்பணிவதுறும். (எசா)

ஸஜாஸமாய்ச்சேர்ந்த, வண்ணான் — வடிவையுடையவன்வர்த்திக்கிற, வரை — மலை. (எரு)

❁ எழுபத்தாறும்பாட்டு. ❁

அ — இப்படி வாசிகமாக கவிபாடி யுகப்பித்த வளவன்றிக்கே அடிமைக்கீடான உபகரணங்களைத் தேடிக்கொண்டு வகுத்த சேஷியான அவன் திருவடிகளிலே அடிமைசெய்யுமதுவே இவ்வாத்மாவுக்கு ஹிதமென்கிறார்.

வரை — நல்ல ஆகரத்திலுண்டான, சந்தனக்குழம்பும் — சந்தனக் குழம்பும், அங்குத்தைக்கு ஸஜாஸமாம்படி யடைவேயெடுத்து, வான் — பெருவிலையனான, கலனும் — ஆபரணங்களும், பட்டும் — திருவரைக்குத்தகுதிடான நல்லபரிவட்டங்களும் விரை — பரிமளம், பொலிந்த — மிக்கிருப்பதாய், வெண் — கண்ணுக்காகர்ஷகமான வெளுத்தநிறத்தை யுடைத்தான, மல்லிகையும் — மல்லிகையுமாகிற விவற்றை, நிரைத்துக்கொண்டு — ஸ்பர்ஹணீயமாம்படி வரைய அடைவேயெடுத்துக்கொண்டு, ஆதிக்கண் — இவையழிந்துகிடக்கிற ஆதிகாலத்திலே, நின்ற — காரணமாய்க்கொண்டு நின்றவனைப், அறிவன் — தன்பக்கல் இவன் பண்ணின ஸுக்ருதத்தை ஸர்வகாலம் நினைத்திருக்கும் ஸர்வஜ்ஞனானவனுடைய, இணை — ஒன்றுக்கொன்று ஒப்பான, அடியே — திருவடிகளையே, ஓதி — வாயாறஸ்தோத்ரம்பண்ணி, பணிவது — தலையாரவணங்குவது, உறும் — இவ்வாத்மாவுக்கு மிகவும் சீரியது. (எசா)

❁ எழுபத்தேழாம்பாட்டு. ❁

அ — இப்படி ஆஸ்ரயணத்திலே ஒருப்பட்டவர் அதுதமக்கினிதாயிருக்கையாலே ஸ்வர்க்கஸெய்திற் காட்டிலும் ஸாயுஜ்யஸெய்திற்சிறக்கும் ஸேவையே யமையுங்காய்நெஞ்சே? யென்கிறார்.

மூ—உறுங்கண்டாய்நன்னெஞ்சேயுத்தமன்நற்பாதம்* உறுங்கண் டாயொண்கமலந்தன்னால் *— உறுங்கண்டாயேத்திப்பணிந்தவன் பேரீரைஞ்ஞூறெப்பொழுதும் * சாற்றியுரைத்தல் தவம். (எஎ)

தவஞ்செய்து நான்முகனேபெற்றான் *
தரணிநிவர்ந்தளப்ப நீட்டியபொற்பாதம் *—
சிவந்ததன்கைபனைத்து மாரக்கழுவினான் * கங்கை நீர்

நல்- எனக்குமுன்னே பதறிவிழுகிநல்ல, நெஞ்சே- நெஞ் சே? நாம் விஜாவஜாநமெஸெயிலும் நம்மைநோக்கி இப்போது தன்னதுபேருக வடிமைகொள்ளக்கடவ, உத்தமன்- வடாா ஷொதஜனுடைய, நல்- யொஜ்ாயொஜ்ரென்று தரம்வையா தே எல்லாருக்கும் பற்றலாம்படியான நன்மையையுடைய, பா தம்- திருவடிகள், உறுங்கண்டாய்- சாலச்சிரியதொன்றுகிடாய் இப்படியிருக்கிற வவனுடைய திருவடிகளை, ஒண்- அழகிய, கமலந்தன்னால்- தாமரைப்பூவாலே, உறுங்கண்டாய்- வருத்த மறக்கிட்டி சூஶ்ரூஷிக்கலாம்கிடாய், ஏத்தி- வாயாலேஸூ்திக்து, பணிந்து- தலையாலேவணங்கி, அவன்- அவனுடைய, ஈரைஞ்ஞூ றுபேர்- ருணசெஷி்தாதிகளுக்கு வாசகமான ஆயிரம்திரு நாமங்களையும், எப்பொழுதும்- ஸவ்வகாலத்திலும், சாற்றி- எங்கும்வ்யாபிக்குமாம்படி, உரைத்தல்- சொல்லுகையாகிற, தவம்- தவஸ, ஸவஸவலங்கா' என்னும்படி கடுஷவா ஸமாயிருப்பதொன்றுகையாலே, உறுங்கண்டாய்- மிகவும்சீரிய துகிடாய், திருநாமஞ்சொல்லுகையை தவமென்கிறது ஸாஸ்ரான் கருத்தாலே. (எஎ)

❁ எழுபத்தெட்டாம்பாட்டு. ❁

அ—இப்படியிருக்கிற தவஸெ அநுஷ்டித்து ஸவெஸ்ரான் திருவடிகளை வருத்தமற ஸேவிக்கப்பெற்றான் ஒதாஜாவெனொ ருவனுமேகிடீரென்கிறார்-

தரணி- ஷூமியை, நிவர்ந்து- வளர்ந்து, அளப்ப- அளக் கைக்காக, நீட்டிய- நீட்டின, பொன்- ஸூாவுமான, பாதம்- திருவடிகளை. கங்கைநீர்- ஸூவீஸாயஜெவாநீயம்' என்கிற

மூ — பெய்தனைத்துப்பேர்மொழிந்துபின். (எஅ)

பின்னின்றுதாயிரப்பக் கேளான் *

பெரும்பணைத்தோள்முன்னின்றுதானிரப்பாள்

---

படியே ஸமவஸ்திதியாலே யருகிலிருந்த யசேஷமான ஸாம்ராஜ்யத்தை, பெய்து- பணிமாறி, அனைத்து பேர்- அவனுடைய வெல்லாத்திருநாமங்களையும், மொழிந்து- வாய்படைத்த ப்ரயோஜநம்பெறச்சொல்லி, தன்- தன்னுடைய, சிவந்த- சிவந்தழகிய, கை- கைகள், அனைத்தும்- அடங்கலும், ஆர- உதகித்வப்ரயோஜநம்பெற்று வணடுமாம்படியாக, கழுவினான்- விளக்கினான், திருவடிகளை விளக்கப்பெற்றபின்பு ஸமவஸ்நாநஸங்கீதமாகிற இனிய தவஸ்ஸைக் குறைவறவநுஷ்டித்து வஸுதேவனொருவனுமே யதுஸமத்தோடே ப்ரவ்ருத்தமாகப்பெற்றான் இவன் இனியதுசெய்ய அவன்தவமென்றிருக்கும் 'வணக்குடைத்தவனெறி' என்னக்கடவதிறே. (எஅ)

## ❁ எழுபத்தொன்பதாம்பாட்டு. ❁

அ — ஜகத்தையளந்துகொண்டு செயலையுடையனான ஸ்ரீவாமநனுடைய வ்ருத்தாந்தமானது தாயாரபேக்ஷிக்க மறுத்துக்காட்டேறப்போன சக்ரவர்த்தித் திருமகனுடைய இத்தன்மைக்கொக்குமென்கிறார்-

(தாய்) தாயாரான ஸ்ரீகௌஸல்யையார், (பின்நின்று) பின்றொடர்ந்துநின்று, (இரப்ப) வாத்ஸல்யைகபாத்ரையான நானுன்னைப்பிரிந்தால் தரித்திருக்கவல்லேனே! நீ காட்டுக்குப் போகவேண்டா? வென்றபேக்ஷிக்க, (கேளான்) அத்தைக் கேளானுமாய், அதுக்குமேலே (பெரும்) நீண்டு, (பணை) சுற்றுடைத்தான, (தோள்) தோளையுடையளாய், (மொய்) அழகிய, (மலராள்) பூவையிருப்பிடமாகவுடையளாகையாலே நிரதிசயஸௌகுமார்யையான பிராட்டியானவள், (தான்) தான், (முன்நின்று) 'அக்ரதஸ்தே கமிஷ்யாமி' என்கிறபடியே முற்பட்டுநின்று, (இரப்பாள்) கருமுகைமாலையைச் செவ்விபெறுத்தவென்று நெருப்பிலே யிடுமாப்போலே இந்த ஸௌகுமார்யமான திருமேனி

மூ—மொப்மலராள் *— சொல்கின்றதோள்நலந்தான் நேரில்லாத் தோன்றல் * அவனளந்தநீணிலந்தா னத்தனைக்கும் நேர். (எக)

கொண்டேகாட்டேறப்போகிறவின்று உம்மைப் பிரிந்திருக்கமாட்டேன், உமக்குமுன்னே போகக்கடவேனென்று வ்யாமிழ்யாகிற்க அத்தையும் கேளாதவனாய் தானோ? வென்றால் சொல்—ஸ்ரீராமாயணம்' என்கிற வ்யவஸாயத்துக்கு, (நின்று) நேரேவ்யதிவாஷ்யமாய்க்கொண்டு நின்று, (தோள்) தோளையுடையனாய், (நலம்) ஸௌந்தர்யத்தில் வந்தால் (நேரில்லா) தன்னையெண்ணினால், பின்னை இரண்டாம்விரலுக்காளில்லாதபடி வ்யாநனுமாயிருக்க, இவையித்தனையும் பாராமல் காட்டில் மிருக்கையுங்கடைக்கணியாமல், (தோன்றல்) காட்டேறப்போன வகுவதிற்றிருமகனுடைய, (அத்தனைக்கும்) அந்தஸூஸாவமெல்லாவற்றுக்கும், (அவன்) ஸ்ரீவாமனவவன், (அளந்த) தானளந்துகொண்ட, (நீள்) பரப்பையுடைத்தான, (நிலம்) ஸூமி, (நேர்) ஒப்பாகப்போரும், அதாவது வாத்ஸல்யத்தை மறுத்து பிராட்டிபிரப்பைத் திரஸ்கரித்து, தன் ஸௌந்தர்யத்தைப் புரிந்துபாராமல் போகிறகாட்டில் மிருக்கைக் கடைக்கணியாமல் விருத்தவசனத்தையே வ்யவஹரித்து, மன்னும் வளநாடுகைவிட்டுக் காட்டையுகந்த வகுவதிற்றிருமகன் செயல்களுக்கு 'இடங்கை வலம்புரிநின்றார்ப்ப' உதாஹரிப்படியே ஸந்தோஷோஷரான ஸூரிகள் வயிறெரிச்சலையும் தன்றிருவடிகள் ஸௌந்தர்யத்தையும் காடுமேடையுமான அளக்கிற ஸூமியினுடைய கொடுமையையும் ஸுகுமாரர்களான நம்போன்றவர்களின் எச்சலையும் பாராமல் ஆச்ரிதனான இந்த்ரன் வ்யஸநத்தைத் தலைக்கட்டுகைக்காகக் கல்லுங்கரடுமான வன்பாவையத்தை யளந்துகொண்ட ஸ்ரீவாமநனுடைய செயலானது ஸத்ருசமாமித்தனையென்கை. (எக)

❋ எண்பதாம்பாட்டு. ❋

அ—இப்படிப்பட்டுள்ள வவன்திருவடிகளி லடிமை ஸேவித்து ஸ்ருதிவாக்யத்தாலே நானங்கே வ்யவஸாயபடிகண்டால் பண்டு

மூ—நேர்ந்தேனடிமை நினைந்தேனதொண்கமலம் * ஆர்ந்தேனுன் சேவடிமேலன்பாய் *— ஆர்ந்தவடிக்கோலங்கண்டவர்க்கென்கொலோ * முன்னைப்படிக்கோலங் கண்டபகல். (அ0)

---

இவன் வடிவழகைக்கொண்டநுபவிக்கப் பெற்றவர்கள் அப்போது என்பட்டார்களோவென்கிறார்-

(அடிமை) தேவர் திருவடிகளிலே ஸாங்கோபாங்கமாகப் பண்ணக்கடவ கைங்கர்யத்திலே, (நேர்ந்தேன்) ஸுவ்யவஸாயவ்யவஸாயமாக நேர்பட்டேன், அந்த கைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்பந்தியாய், (ஒண்) அழகிய, (கமலம்) தாமரைப்பூப்போலே நிரதிசயபோக்யமாயிருக்கிற, (அது) அந்தத்திருவடிகளை, (நினைந்தேன்) நெஞ்சாலேயநுஸந்தித்தேன், (அன்பாய்) நினைத்தமாத்ரத்திலே பெருகிவருகிற ப்ரேமத்தையுடையேனாய், (உன்) வகுத்தசேஷியான தேவருடைய, (சே) சிவந்த, (அடிமேல்) திருவடிகளின்மேலே, (ஆர்ந்தேன்) பிரிக்கவொண்ணாதபடி பொருந்தினேன், (ஆர்ந்த) பூர்ணமான, (அடி) திருவடிகளின், (கோலம்) அழகிய, (கண்டவர்க்கு) கண்டநுபவித்தவர்களுக்கு, (முன்னை) இதுக்குமடியான, (படிக்கோலம்) வடிவழகை, (கண்ட) ஒன்றொழியாதபடி முழுநோக்குச்செய்து அநுபவிக்கப்பெற்ற, (பகல்) போது, (என்கொலோ) என்னாய்த்தோ, என்பட்டார்களோ! வென்கை. அன்றிக்கே ஆர்ந்தவடிக்கோலங்கண்டவராகிறார் ஶேஷபூதரானதாமாய், நான் திருவடிகளினழகைக் கண்டுபட்டபடி கண்டால் முன்பு இவ்வடிவழகைக் கண்டநுபவிக்கப்பெற்றவர்கள் என்பட்டார்களோவென்றுமாம், ஆர்ந்தவடிக்கோலமித்யாதி திருவுலகளந்தருளின திருவடிகளைக்கண்டவர்களுக்கு முன்பு ஸாஹஸிகமான வொப்பனைகண்ட காலமன்றோவென்னுமாம், ஆர்ந்தேனுன்சேவடிமேலன்பாயென்று திருவடிகளிலே ஸ்நேஹத்தையுடையேனாய் அத்தாலே பரிபூர்ணனானேனென்னவுமாம்,

❀ எண்பத்தோராம்பாட்டு. ❀

அ—பண்டு அவனைக்கண்டநுபவிக்கப் பெற்றவர்களென்பட்

மூ— பகல்கண்டேன் நாரணனைக் கண்டேன் * கனவில் மிகக்கண் டேன் மீண்டவனை மெய்யே மிகக் கண்டேன் *— ஊன்திகழு நேமி ஒளிதிகழும் சேவடியான் * வான்திகழும் சோதிவடிவு. (௮௧)

---

டார்களென்று பழங்கிணறுவாநுகிறதென்? இப்போது அவனைக் கண்டு நான்றான்படுகிற பாட்டைப் பார்க்கமாட்டார்களோ வென்கிறார்-

இது நெடுங்காலம் பகல்விரவாத ஸம்ஸாரகாளராத்ரியிலே கண்கெட்டு முன்னடிதோற்றாதே திரிந்தநான் இப்போது 'ஸூர்ய ஸாதாவதேதிஸர' என்னும்படி, (பகற்கண்டேன்) இரவுவிரவாத பகலாய்ச் செல்லும்படியானதொரு நல்விடிவைக் கண்டேன்,, ஸம்வத்ஸரத்துக்கு ஸயப்பட்டு பூப்பதுவிடத்திலே போவதுவருவதாய்த் திரிகிற ஸூர்யனைஷஸிகளை வாதித்யனன்றிக்கே ஒருகாலத்திலும் போக்குவரத்தன்றிக்கே 'ஸாஸ்ஸாஜநாநாம்' என்னும்படி ஸ்வத்தைத்தையும் நியமித்துக்கொண்டு, (நாரணனை) உஸயவிஸூதியாகளுக்குளையாலே ஸ்வதிகளை நாராயணனாகிற வாதித்யனை, (கண்டேன்) கண்டேன், இந்த்ரியங்கள் துணைசெய்யக்காண்கிற காட்சியன்றிக்கே (கனவில்) 'ஸ்வப்நாயிமஹீயம்' என்னும்படி நேர்கொடுநேரே நெஞ்சாலேகாணப்படும் ஸ்வப்நாவஸ்தையிலுங்காட்டில், (மிக) விஶதமாய், (மெய்யே) ஸாக்ஷாத்காரமான ஞானஸாக்ஷாத்காரத்தாலே, (மீண்டு) இந்த்ரியங்களால் கலக்கவொண்ணாதபடி அழகியதாக மீண்டு, (அவனை) அவனை, (கண்டேன்) கண்டேன், (ஊன்) வடிவழகு, (திகழும்) விளங்காநின்றுள்ள, (சே) சிவந்த, (அடியான்) திருவடிகளையுடைய ஸர்வேஶ்வரனுடைய, (வான்) பரமாகாச ஸ்வரூபமான பரமபதத்திலே, (திகழும்) விளங்காநின்றுள்ள, (சோதி) தேஜஸ்ஸையுடைத்தான, (வடிவு) வடிவழகை (கண்டேன்) ஸாக்ஷாத்காரம்பண்ணும்படி யழகிதாகக் கண்டேன், வான்திகழுமென்றது ஆகாசத்தோடொக்க விளங்காநின்றுள்ள திருவாழி யென்னவுமாம், ஸமுத்ரஶரீரத்திலே விளங்குமென்னுதல். (௮௧)

மூ—வடிக்கோலவாள் நெடுங்கண் மாமலராள் * செவ்விப்படிக் கோலங்கண் டகலாள்பன்னாள்*—அடிக்கோ லிஞாலத்தாள்பின்னும் நலம்புரிந்ததென்கொலோ * கோலத்தாலில்லை குறை. (அஉ)

❀ எண்பத்திரண்டாம்பாட்டு. ❀

அ—வெறும் நாராயணனைக் கண்டதன்றிக்கே ஸ்ரீமானான நாராயணனைக் காணப்பெற்றேனென்கிறார்-

நாட்டிலழகடங்கலும் கோதாம்படி யழகுபடைத்த அவனை யநுபவிக்கிற கோதுகலவாத, (வடி) வடித்த, (கோலம்) அழகையும் வடிவிலேவடிவாய், (வாள்) ஒளிபெற்று, (நெடும்) ஸௌந்தர்யத்துக்களவிட வொண்ணாத மிக்க ஸௌந்தர்யத்தையுடைத்தான, (கண்) திருக்கண்களையுமுடையளாய், (மா) ஸ்ரீமானான, (மலராள்) தாமரைப்பூவைப் பிறப்பிடமாக வுடையளாகையாலே ஸௌகுமார்ய ஸௌகந்த்யங்களைக் குறைவற வுடையளுமான பெரியபிராட்டியாரும், (செவ்வி) 'பிணையலரை' என்கிறபடியே செவ்வியே ஸ்வபாவமான, (படிக்கோலம்) அவன் வடிவழகை, (கண்டு) கண்டநுபவித்து, கண்ணைமாறவைத்தல் கால்வாங்குதல் செய்யமாட்டாதே யவ்வழகுவெள்ளத்திலே யாழங்காற்பட்டு, (பன்னாள்) 'இறையுமகலகில்லேன்' என்னும்படி காலதத்வமுள்ளதனையும், (அகலாள்) க்ஷணகாலமும் விஸ்லேஷிக்க க்ஷமையன்றிக்கே யிராநின்றாள், (ஞாலத்தாள்) க்ஷமையேவடிவான ஸ்ரீபூமிப்பிராட்டியானவள், (பின்னும்) தலைநீர்பாட்டிலே அநுபவிக்க இட்டுப்பிறந்த பேறளவுடையளான அவள் ஆழங்காற்பட் டழுந்துகிற படியைக் கண்டிருக்கச்செய்தேயும் அவளுமவனுமான சேர்த்தியைக் கண்ணழிவற அநுபவிக்கைக்கு அநுகுணமாக, (அடிக்கோலி) இலையகலப்படுத்துப் பாரித்து, (நலம்புரிந்தது) ஆசையைப்பண்ணிக்கொண்டு செல்லுகிறவிது, (என்கொலோ) ஏதாயிருக்கிறதோ, இதுக்கடி யிருவர்க்கும் பற்றம்பொறாமல் சேறுபாறு என்னவேண்டும்படி ஸௌந்தர்யமளவுபட்டிருக்கிற க்ஷுத்ரவிஷயங்கள் போலன்றிக்கே திரள்திரளாக விழுந்தாலும் குமிழ்நீருண்ணும்படி, (கோலத்தால்) அழகால், (குறை) குறைவு, (இல்லை) அற்றிருக்கையிறே (அஉ)

மூ—குறைபாகவெஞ்சொற்கள் கூறினேன்கூறி *
மறையாங்கெனவுரைத்தமாலை *—
இறையேனுமீயுங்கொலென்றேயிருந்தேனெனைப்பகலும் *

---

## ❋ எண்பத்துமூன்றாம்பாட்டு. ❋

அ—'பெருந்தமிழனல்லேன்பெருகு' என்று அவனுக்குக் கவி பாடப்பெற்ற பெருமதிப்பாலே முன்புசெருக்கி வார்த்தை சொன்னவர் இப்போது நாய்ச்சிமாருந்தானும் சேர்ந்திருக்கிற பெரியமேன்மையைக் கண்டுகூசி நாமிவ்விஷயத்தையோ கவிபாடப் பெருமதிப்பாலே யழிந்தது என்னஸாஹஸிகனே!யென்று கீழ்ச்செய்தசெயலுக்கு அநுதபிக்கிறார்-

(மறை) அவன்படிகளையுள்ளபடி தறைகண்டு பேசவொருப்பட்ட வேதங்களானவை, (ஆங்கென) அதுவென்றுசொல்லுமித்தனைபோக்கி, (உரைத்த) இதமித்தமென்று பரிச்சேதித்து சொல்லமாட்டாத, (மாலை) பெருமையையுடைய ஸர்வேச்வரனை (குறையாக) அவாங்மனஸகோசரமாம்படியாக, ச்ரோத்ரம்வழிந்து செவிக்கினிய செஞ்சொலன்றிக்கே (வெம்) கேட்டார் செவிவெடிக்கும்படியிருக்கிற வெட்டிய (சொற்கள்) சொற்களாலே, (கூறினேன்) சொன்னேன், (கூறி) இப்படிச்சொல்லி, விஷயவைபவத்தைப் பார்த்தும் சொற்களின் வெம்மையைப் பார்த்தும் அநுதபிக்க வேண்டியிருக்க அது செய்யாத வளவன்றிக்கே (மாயன்கண்) ஆச்சர்யமான குணசேஷ்டிதங்களையுடையவனவனிடத்தில்நின்றும், (சென்று) உண்டாய்வரக்கடவதான, (வரம்) ப்ரஸாதமானது, (கருதி) பண்டு கவிபாடினவர்களுக்கு அவன் கொடுத்துப்போரும்படியை நினைத்து நான்பாடின கவிக்குப்பரிசிலாக, (இறையேனும்) ஏதேனும் சிறிதாகிலும், (ஈயுங்கொலென்று) தாராதோவென்று, (எனைப்பகலும்) ஸர்வகாலமெல்லாம், (இருந்தேன்) ப்ரத்யுபகாரத்தை நிரீக்ஷித்துக் கொண்டேயிருந்தேன், விஷயகௌரவத்தையும் சொல்லிப் பொல்லாங்கையும் பச்சையைநச்ச விருந்தபடியையும் நினைத்து என்ன ஸாஹஸிகனே! என்று அநுதபிக்கிறார், பின்னை இவ

மூ—மாயன் கண் சென்றவாம். (அங)

வரங்கருதித் தன்னைவணங்காத வன்மை * யுரங்கருதிமூக்கத் தவனை *— நரங்கலந்தசிங்கமாய்க்கீண்ட திருவடி

ரொருவ்யொஜநத்துக்குக் கவிபாடினவரோ வென்னில்? இக் கவிபாட்டுக்காக அவனொருக்காலே றிட்டுகூடாக்ஷிக்குமாகில் அது வும் ஸுரெவத்துக்குச்சேர்ந்த பெரியபேறென்றிருப்பா ரொரு த்தரிறே; அத்தாலே குறையில்லை. (சென்றவரம்) அவன்பக்கல் சென்றுபிறக்கக்கடவ வார்த்தை, அவனிறையேனும் ஈயுங்கொ லென்று இருந்தேனென்றுமாம், (மறைபாங்கென வுரைத்தமா லை) 'வாயிவ்-தாஹுவெஃ' என்கிறபடியே சொல்லும்வார்த் தைபெல்லாம் மறையென்னலாம்படி சொல்லுமவ னென்னவு மாம்; இத்தால் அகஞ்செறிவில்பொல்லாங்கறியாதா னொருவனைச் சொல்லப் பெற்றதோ ஸவஜ்ஞனையிறே நான் மருட்டிச்சொல் விற்றென்கை. (அங)

## ❁ எண்பத்துநாலாம்பாட்டு. ❁

அ—விஷயவெஹவஞ் சொல்லில் பொல்லாங்கு முதலானவை யெல்லாங்கிடக்கிடீர் விஷயத்தினுடைய ஙவெதைப்பார்த் தால் சொல்லியல்லது நீக்கப்போமோ!வென்கிறார்-

(வரம்) தேவர்கள்பக்கல் பெற்றவரத்தை, (கருதி) தனக் கறுதியாகநினைத்து, (தன்னை) அந்த தேவர்களுக்கு மடியான பெருமையையுடையனான தன்னை, (வணங்காத) 'நநமெயம்' என்னும்படி வணங்காதே போந்தவனாய், (வன்மை) அந்ததே வர்கள்வரத்தால்வந்த மிடுக்கையும், (உரம்) தன்தோளாலேயெ றிந்துகொண்ட மிடுக்கையும், (கருதி) தனக்குவேகாணமாக வுண்டென்றுகருதி, (மூக்கத்தவனை) அத்தால்வந்த மேனாணிப் பையுடையனான ஹிரண்யனை, (நரங்கலந்தசிங்கமாய்) சோரச் சேர்த்தியான நாகஸிஂஹங்களோடே கூடின வடிவையுடை யனைக்கொண்டு, (கீண்ட) கிழித்துப் புகட்டவனாய், வாஹா விரஜமான விரண்டுவடிவை யெடுத்துக்கொண்டவளவிற் பொ ல்லாதாயிருக்கை யன்றிக்கே (திருவன்) சேர்பாலும்கண்ட

மூ—பிணையே * அங்கண் மாஞாலத்தமுது. (௮௪)

அமுதென்றும் தேனென்றுமாழியானென்றும்*
அமுதன்று கொண்டுகந்தானென்றும் *— அமுதன்னம்

---

சர்க்கரையும் கலந்தாப்போலே ஸ்வாத்யரஸாவஹமான வழகை யுடையவனுடைய, (இணை) சேர்த்திபழகை யுடைத்தான, (அடியே) திருவடிகளே, லோகத்தில் போக்யமான அம்ருதம் போலன்றிக்கே, (அம்) அழகிய, (கண்) இடமுடைத்தான, (மாஞாலத்து) மஹாப்ருதிவியிலே, (அமுது) அநந்யப்ரயோஜநர்க்கு ஸேவிக்கலாம்படி நிரதிசயபோக்யமான அம்ருதம் 'மூர்க்கத்தவனை' என்று வாமனனபோது உபேந்த்ரனை ஹிரண்யனையென்றபடி. (௮௪)

## ❁ எண்பத்தைந்தாம்பாட்டு. ❁

அ—அவனுடைய போக்யதையை அநுஸந்தித்தவாறே 'அமுதன்ன சொன்மாலையேத்தித் தொழுதேன்' என்கிறார்—

(அமுதென்றும்) நித்யபோக்யமான அம்ருதமென்றும், (தேனென்றும்) ஸர்வரஸஸமவாயமான தேனென்றும், (ஆழியானென்றும்) நிரதிசயபோக்யமான திருவாழியை யுடையனென்றும், (அன்று) அஸாரஸயஜீவராய் தேவர்கள் சரணம்புக்கவன்று, (அமுது) கடலில் ஸாரமான அம்ருதத்தை, (கொண்டு) அந்தக்கடலைக்கடைந்து வாங்கிக்கொண்டுகொடுத்து (உகந்தானென்றும்) இதுக்காகவாகிலும் நம்மைவந்து ஆச்ரயிக்கப்பெற்றோமே என்று ப்ரீதனானனென்றும், (நல்) 'ரஸோ வை ஸ:' 'ஸர்வரஸ:' 'ஸ்வாது:' 'அம்ருதஸம்பவ:' என்கிற ச்ருதிசாஸ்த்ரங்களாலே சொல்லப்பட்ட விலக்ஷணனை, (மாலை) ஸர்வேச்வரனை, (ஏத்தி) ஆதராதிசயந் தோற்றப்புகழ்ந்து, (நவின்று) சொல்லி, எல்லாபோக்யதையும் தன் போக்யதையிலே பொதிந்திருக்கையாலே அமுதென்றுசொல்லப்படுகிற வவனையும் பொதிந்துகொண்டிருக்கையாலே, (அமுதன்ன) அம்ருதம்போலே நிரதிசயபோக்யமா யிருந்துள்ள,

மூ—சொன்மாலையேத் தித்தொழுதேன் சொலப்பட்ட *
நன்மாலையேத்தி நவின்று. (அரு)

நவின்றுரைத்தநாவலர்கள் நாண்மலர்கொண்டு*
ஆங்கேபயின்றதனாற்பெற்ற. பயனென்கொல் *—
பயின்றார்தம்மெய்த்தவத்தால் காண்பரியமேகமணி
வண்ணனை * யானெத்தவத்தால்காண்பன் கொலின்று. (அசு)

---

(சொன்மாலை) ஸூக்தங்களாலே, (ஏத்தி) புகழ்ந்து, (தொழுதேன்) திருவடிகளில் நிர்மமனாய்விழுந்தேன். (அரு)

❁ எண்பத்தாறும்பாட்டு. ❁

அ—அவன்தானே காட்டக்கண்ட வென்றொப்பர்களை ஸாக்ஷாத்கரித்துச் கண்டவர்களென்கிறார்—

(நவின்றுரைத்த) அவன்றிருநாமங்களை யாவர்ந்தோற்றப் பலகாலுஞ்சொல்லிக்கொண்டு, (நாவலர்கள்) ஸகலஶாஸ்த்ரமறிந்து கவிபாடவல்ல ப்ரயோஜநாந்தரபரரான கவிகள், (நாண்மலர்) செவ்விப்பூக்களை, (கொண்டு) ஸம்பாதித்துக்கொண்டு, (ஆங்கே) அந்த ஸர்வேஶ்வரனிடத்திலே, (பயின்று) நெருங்கியாஶ்ரயிக்க, (அதனால்) அத்தால், (பெற்ற) பெற்ற, (பயன்) ப்ரயோஜநம், (என்கொல்) ஏதோ, (பயின்றார்தம்) இப்படிநெருங்கி ஸாக்ஷாத்கரணம் பண்ணினருடைய, (மெய்) ஶரீரத்தை பொறுத்துப்பண்ணின, (தவத்தால்) தவஸ்ஸால், (காண்பரிய) காணவரியனாய், (மேகம்) மேகம்போலேயும், (மணி) நீலமணிபோலேயும் ஶ்யாமமான, (வண்ணனை) வடிவையுடையனுமான ஸர்வேஶ்வரனை, (யான்) அகிஞ்சனனான நான், (இன்று) இன்று, (எ) எந்த, (தவத்தால்) தவஸ்ஸாலே, (காண்பன்) கண்டநுபவிக்கப்பெற்றேன், அவன் காட்டக்கண்டேனித்தனையிறே யென்று கருத்து. (அசு)

❁ எண்பத்தேழாம்பாட்டு. ❁

அ—உம்முடைய பேற்றுக்கேற்றமென்னென்னில் நான் மஹாஜ்ஞானான காலமேதுடங்கி அடிமைச்சுவட்டோடுகூட வவன்படிகளை யநுபவிக்கப்பெற்றவனன்றோ வென்கிறார்—

மூ—இன்றுவறிகின்றேனல்லேன் * இருநிலத்தைச்சென்றாங்களந்ததிருவடியை *— அன்றுகருக்கோட்டியுள்கிடந்துகைதொழுதேன்கண்டேன் * திருக்கோட்டியெந்தைதிறம். (அஎ)

திறம்பிற்றினியறிந்தேன் தென்னரங்கத்தெந்தை *
திறம்பாவழிசென்றார்க்

---

(அன்று) ஒருஸாயநத்தை யறிந்து அநுஷ்டிக்கைக்கு யொரு செயுங்கூட வில்லாதவன்று, (கருக்கோட்டியுள்) மாதாவினுடைய கர்ப்பஸ்தானத்துக்குளளே, (கிடந்து) கிடந்து, (திருக்கோட்டி) நீர்மைக்கெல்லை நிலமான திருக்கோட்டியூரிலே ஸந்நிஹிதனாய், ஸர்வஜ்ஞனை வென்னுடைய ஜ்யநீயஸ்ஸைக்கொண்டு நிர்ஹேதுகமாக விஷயீகரித்த, (எந்தை) என்ஸ்வாமியுடைய (திறம்) குணசேஷ்டிதாதிகளாகிற ப்ரகாரத்தை, (கண்டேன்) கண்டநுபவிக்கப்பெற்றேன்; (கைதொழுதேன்) அநுபவத்துக்குப் போக்குவீடாகக் கைதொழுகைமுதலான அடிமைத்தொழிலிலு மந்விக்கப்பெற்றேன்; ஆனபின்பு, (இரு) பரப்பையுடைத்தான, (நிலத்தை) ஸூமியை, ஒருவரிரக்கவன்றிக்கே, (ஆங்கு) அங்கே, (சென்று) தானேசென்று, (அளந்த) அளந்துகொண்ட, (திருவடியை) திருவடியை, (இன்று) இன்றாக, (அறிகின்றேனல்லேன்) அறிகிறேனல்லேன். (அஎ)

❁ எண்பத்தெட்டாம்பாட்டு. ❁

அ—அவன்றானே விஷயீகரித்தார்க்கு அவனைக்கிடைக்குமித்தனை வேறுசிலர்க்குக் கிடையாதென்கிறார்-

திருத்தேர்த்தட்டிலே அர்ஜுநனொருவனுக்கு மொருகால் 'மாமேகம்' என்றுசொன்ன தம்முடைய நிரபேக்ஷோபாயபாவத்தை ஸர்வகாலத்திலும் ஸர்வருக்கும் ப்ரகாசிக்கும்படிக் கொண்டு, (தென்) அழகிய, (அரங்கத்து) கோயிலிலே, (எந்தை) அவதாரவிசேஷம் போலன்றிக்கே ஸர்வஸுலபனாய்க்கொண்டு பள்ளிகொண்டருளுகிற வென்ஸ்வாமியான பெரியபெருமாளுடைய, (திறம்பா) மற்றொன்றால் வமிப்பிக்கவொண்ணாத, (வழி) நிரபேக்ஷோபாயமாகிற உபாயமார்க்கத்தைப்பற்றி, (சென்றார்க்கு)நடக்கு

ழை—கல்லால் *— திறம்பாச் செடிநரகை நீக்கித்தான் செல்வதன்முன் * வானோர்கடிநகரவாசற் கதவு. (அஅ)

கதவிக்கதஞ்சிறந்தகஞ்சனை முன்காய்ந்து *
அதவிப்போர்யானையொசித்து *— பதவியாய்ப்

மவர்களுக்கு, (அல்லால்) ஒழிய, (திறம்பா) அநாதிவத் தாலும் தொலைக்கவொண்ணாதபடி அவிநாஶ்யமாய், (செடி) அடி தலைகண்டறுக்க வொண்ணாதபடி தூறுமண்டிக்கிடக்கிற, (நரகை) ஸம்ஸாரமாகிற நரகத்தை, (நீக்கி) தங்கள் ஸாதநாநுஷ்டா நத்தாலே போக்கி, (தாம்) தாங்கள், (செல்வதன்முன்) செ ன்றுகிட்டுவதுக்கு முன்னே, (வானோர்) நித்யஸூரிகள் நித்யா நுபவம்பண்ணி வாழுகிற வைகுண்டமாம், (கடி) ஸ்வயத்நஸாத்யமல்லாத அரணுபுடையத்தான, (நகரம்) கலங்காப்பெருநகரின், (வாசற்கதவு) வாசலிற்கதவு, (திறம்பிற்று) தப்பிற்று, (இனி) இப்போது, (அறிந்தேன்) இத்தை நிரூபித்தறிந்தேன், (கடி யென்று) வாசிகையாய், ஹோதுமிகவிஞ்சின நாகமென் றுமாம், இத்தால் ஸம்ஸாரநிவ்ருத்திஸாத்யம் பரமபதம், ஸ்வயத்ந ஸாத்யமன்றென்றபடி. (அஅ)

❁ எண்பத்தொன்பதாம்பாட்டு. ❁

அ—நீர் இப்படி சொல்லுகைக்கு நம்மைப்பற்றினார்க்கு நாமென் செய்தவக்கண்டீரென்ன விரோதியைப் போக்கியும் விரகாலே ஆஶ்ரிதர் கார்யஞ்செய்யும்படியும் சொல்லி இதுவன்றோ வுன் படியென்கிறார்-

(சிறந்த) மிக்க, (கதம்) சீற்றத்தையுடையனான, (கஞ்சனை) கம்ஸனை, (கதவி) சீறி, (முன்) அவன் ஸந்நிதியிலே, (காய்ந்து) தன்கொலைதானே காணும்படிமுடித்து, (அதவி) தப்பிப்பிழைக்க விடமறும்படி யடர்த்து, (போர்) யுத்தோத்ஸவமான, (யானை) குவலயாபீடத்தை, (ஒசித்து) அநாயாஸேந முறித்து விழவிட்டு, இப்படி மிடுக்குக்கொண்டு வ்யாவ்ருத்திக்க வொண்ணாதபடி ஒளதார்யமென்பதொரு மூணமெல்லாங்கிடக் கைகையாலே, (பதவியாய்) நீர்மையை யுடையையாய்க்கொண்டு,

மு—வானவனைப் * விண்ணுலகம் தன்னகத்துமேவேனே *—
நண்ணித்திருமாலைச்செங்கணெடியானை *
எங்கள்பெருமானைக் கைதொழுத பின். (௯௦)

பின்னாலருநரகம் சேராமல்பேதுறுவீர் * முன்னால்வணங்க
முயல்மினோ *— பன்னூலளந்தானைக்கார்க்கடல்சூழ்ஞாலத்தை*
எல்லாம் அளந்தானவன் சேவடி. (௯௧)

---

களுக்கும் அவ்வருகான, வானவனை- பெருமையையுடைய
னாய்க்கொண்டு, விண்ணுலகத்து- பரமபதத்திலே, மேவே
னே- காலதத்வமுள்ளதனையும் ஸஹவாஸனைப் பொருந்தி
யிரேனோ உன்னளவில் ஸ்நேஹாதிஶயம்பண்ணினால் மண்ணோ
டேவிண்ணுமாறுகை பெரியபணிபோவென்றபடி. (௯௦)

தொண்ணூற்றோராம்பாட்டு.

அ—ப்ரக்ருதிவஶ்யரானபின்பு ஶரீரவிஶ்லேஷ ஸமநந்தரம்
நரகமொருவகைத்தப்பாது ஆனபின்பு அவன்றிருவடிகளைவண
ங்கப்பாருங்கோளென்கிறார்-

பல்- ஶ்ருதிஸ்ம்ருத்யாதிகளான பலவகைப்பட்ட, நூல்-
ஶாஸ்த்ரங்களாலும், அளந்தான்- யதாவாக அறுதியிடப்பட்டிருக்
குமவனை, கார்- கறுத்த, கடல்- கடலாலே, சூழ்- சூழப்பட்
டிருக்கிற, இ- இந்த, ஞாலத்தையெல்லாம்- ஸ்ருஷ்டியையெல்லாம்,
அளந்தானவன்- அளந்துகொண்ட ஸௌலப்யத்தை யுடையனா
னவனுடைய, சே- சிவந்த, அடி- திருவடிகளை, பின்னால்- ஶரீ
ரவிஶ்லேஷத்துக்குப்பின்பு- அரு- பொறுக்கவொண்ணாத, நர
கம்- நரகங்களில், சேராமல்- சென்றுகிட்டாதபடியாக ஘ோ
ரமான நரகம் வரிச்செய்வதென்னென்று அஞ்சி, பேது
றுவீர்- அறிவுகலங்குகிறீர்கள், பின்னைச்செய்கிறோமென்றாறி
யிராமல், முன்னால்- ஒருக்ஷணமாகிலும் முற்பட, வணங்க-
ஆஶ்ரயிக்க, முயன்மின்- உத்ஸாஹியுங்கோள். (௯௧)

தொண்ணூற்றிரண்டாம்பாட்டு.

அ—அவனையாஶ்ரயிக்க வுங்களுக்கபேக்ஷிதமான புருஷா
ர்த்தங்களெல்லாங்கிடைக்கும் ஆஶ்ரயியுங்கோளென்கிறார்-

ளும் — அடியால் முன்கஞ்சனைச்செற்று * அமரரேத்தும் படியான்
கொடிமேல்புள்கொண்டான் * — நெடியான்றன் நாமமேயேத்து
மின்களேத்தினால் * தாம்வேண்டுங்காமமேகாட்டுங்கடிது. (கூஉ)
கடிதுகொடுநரகம்பிற்காலும் செய்கை *

---

அடியால்— 'பாதபங்கயமே தலைக்கணியாய்' என்று என் போல்வார் ஆச்ரயித்துக்கிடக்குமதாய் நிரதிசயபோக்யமான திருவடிகளாலே அவன்நினைத்தவஞ்சனமவனோடே யாம்படி, முன்— ஏற்கவே, கஞ்சனை— கம்ஸனை, செற்று— உதைத்துமுடித்து, அந்தஸௌலப்யத்துக்குத் தோற்று, அமரர்— ப்ரஹ்மாதிதேவர்கள், ஏத்தும்— தேவராலே எங்கள்குடியிருப்புப்பெற்றோம் என்று வாய்விட்டுப்புகழும்படியான, படியான்— ஸ்வபாவத்தையுடையனாய், கொடிமேல்— ரக்ஷணத்துக்குக் கட்டின கொடிமேலே, புள்கொண்டான்— கருடத்வஜன் என்னும்படி யெடுக்கப்பட்ட பெரியதிருவடியை யுடையனாய், நெடியான்றன்— தன்பக்கலிலே ரதிவர நின்றவர்களை நெடுகநினைத்துக்கொண்டிருக்கும் ஸ்வபாவனானவனுடைய, நாமமே— திருநாமங்களையே, ஏத்துமின்கள்— சொல்லிவாய்விட்டுப் புகழுங்கோள், ஏத்தினால்— இப்படி புகழ்ந்தால், தாம்— தந்தாமுக்கு, வேண்டும்— அபேக்ஷிதமான, காமம்— ஐச்வர்ய கைவல்ய பகவத்ப்ராப்திகளாகிற ஸகலபுருஷார்த்தங்களையும் ஏத்தின வாய்மூடுவதுக்குமுன்னே, கடிது— சீக்ரமாக, காட்டும்— கைப்படும்படி காட்டித்தரும், கடிதேத்துமினென்றுமாம். (கூஉ)

## தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு.

அ — க்ரூரமான நரகம் வந்துகிட்டுவதுக்குமுன்னே நிரதிசயஸௌஹார்தனாய் ஸ்ருதிகஸௌஹார்தனானவனை விரும்பி யேத்துங்கோளென்கிறார் —

கொடு— க்ரூரமான, நரகம்— நரகம், கடிது— முதவிலேகண்கொண்டு காணவொண்ணாதபடி சாலவெவ்வியதாயிருக்கும், பிற்காலும்— பின்னும், செய்கை— கர்மாநுகுணமாக, 'சேவதக்குவார்போலப்புகுந்து' என்கிறபடியே யமபடர் பண்ணக்

ழூ—கொடிதென்றது கூடாமுன்னம் *—
வடிசங்கம்கொண்டானைக் கூந்தல்வாய்கீண்டானை *
கொங்கைநஞ்சுண்டானையேத்துமினோ வுற்று. (௯௩)

உற்றுவணங்கித்தொழுமின் *
உலகேழும்முற்றும் விழுங்கும் முகில்வண்ணன் *—
பற்றிப்பொருந்தாதான் மார்விடந்தபூம் பாடகத்துள்

---

நடுவநலிவுகள், கொடிதென்று- மிகவும் உக்ரமாயிருக்குமென்று அவற்றையநுஸந்தித்து, அது- நரகதுஃக்கமும் அவர்கள்பண்ணும் நலிவும், கூடாமுன்னம்- வந்துகிட்டுவதுக்குமுன்னே எதிரிகளைமுடிக்கும், வடி- கூர்மையுடைய, சங்கம்- ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, கொண்டானை- உடையனாய், கூந்தல்- கேசியினுடைய, வாய்- வாயை, கீண்டானை- கிழித்துப்பொகட்டவனாய், கொங்கை- பூதனையினுடையமுலையில், நஞ்சு- நச்சுப்பாலை, உண்டானை- உண்டு அவளை முடித்துப்பொகட்டவனை, உற்று- மேலெழுவன்றிக்கே ஸஹ்ருதயராக வுறைத்துநின்று, ஏத்துமின்- ஸ்தோத்ரம்பண்ணுங்கோள், வடிசங்கம்- அழகியஶங்கமென்னவுமாம். (௯௩)

தொண்ணூற்றுநாலாம்பாட்டு.

அ—என்னுடைய நெஞ்சுகண்டீர்களே ஏத்துகிறபடி அப்படியே நீங்களும் ஜகத்ரக்ஷணஶீலனாய் நிரதிஶயபோக்யனானவனை ஏத்துங்கோளென்கிறார்-

உலகேழும்- ஸப்தத்வீபாதிகளான ஸகலலோகங்களையும், முற்றும்- ஒன்றும் பிரிகதிற்படாதபடி, விழுங்கும்- திருவயிற்றிலே வைத்துநோக்கும் ஶீலனாய், அத்தால்வந்த ஹர்ஷமும் நிழலிட்டுத்தோற்றும்படியிருக்கிற, முகில்வண்ணன்- வர்ஷுகவலாஹகம்போன்ற வடிவையுடையனாய், பற்றி- பிடித்தபிடியே பிணமாம்படிபிடித்து, பொருந்தாதான்- தன்னுடன் பொருந்தாத ஹிரண்யனுடைய, மார்வு- மார்வை, இடந்து- இரண்டு கூறாகப் பிளந்துபொகட்டு, பின்னுமாஶ்ரிதவிரோதிகளைப் போக்குகைக்காக, பூ- நிரதிஶயபோக்யமான, பாடகத்துள்- திருப்

மூ—இருந்தானை * எத்துமென் னெஞ்சு. (கூச)

என்னெஞ்சமேயானென்சென்னியான் *

தானவனைவன்னெஞ்சங்கீண்டமணி

---

பாடகத்திலே, சிறுக்கனுக்கு உதவினபடியை யெல்லாருங்கா ணவேணுமென்று, இருந்தானை— எழுந்தருளியிருந்த ஸர்வேச்வரனை, என்— என்னுடைய, நெஞ்சு— நெஞ்சானது, எத்தும்— இவ்விவஹாரங்களைச் சொல்லிப் புகழாநிற்கும், இப்படியே நீங்களும் நீங்கள் ஸௌலப்யத்தை நினைத்து பிற்காலியாதே, உற்று— கிட்டிநின்று, வணங்கி— ஸாஷ்டாங்கப்ரணாமம் பண்ணி திருவடிகளி லேவிழுந்து, தொழுமின்— அஞ்ஜலியைப் பண்ணி யாச்ரயி யுங்கோள். (கூச)

❁ தொண்ணூற்றைந்தாம்பாட்டு ❁

அ—ஜகத்காரணபூதனுப் ஸர்வேச்வரனானவன் திரு வத்தியூரிலே நின்றருளி என்னுடைய ஸர்வாவயவங்களிலும் வந்துபுகுந்தானென்கிறார்—

முன்ம்— 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்' என்கிறபடியே ஸ்ருஷ்டேः பூர்வகாலத்திலே அழிந்தஜகத்தை ஸ்ருஷ்டிக்கைக் காக, சேயூழியான்— காலோபலக்ஷிதமான ஸமஸ்தவஸ்து க்களை சரீரமாகக்கொண்டு நின்றவனாய், இப்படி ஸ்ரு ஷ்டித்தவளவில் தன்னைவழிபடாதே இவை அஸந்ந்யாயமான வாறே காலசேஷமாம்படி, ஊழிபேர்த்தான்— இவற்றை ஸம் ஹரித்தவனாய் ஸ்ருஷ்டமானஜகத்தை ரக்ஷிக்கைக்காக, உலகு— லோகத்திலுள்ளவர்கள், எத்தும்— இருந்ததேகுடியாக ஏத்தி ஆச்ரயிக்கும்படி, ஆழியான்— திருப்பாற்கடலிலே க்ஷீராப்தி சாயியாய்க்கொண்டு கணவளர்ந்தருளினவனாய், அங்குநின் றும் நரஸிம்ஹாவதாரமாய் வந்தவதரித்து, தானவனை— அஸுரஜாதியான ஹிரண்யனுடைய, வன்— தன்உருவான வடிவைக்கொண்டு மிளகாதபடி கடினமான, நெஞ்சம்— ஹ்ருத யத்தை, கீண்ட— கிழித்துப்புகட்டவனாய், சிறுக்கன் விரோதி போகப்பெறுகையாலே, மணி— நீலமணிபோலே யிருண்டு

ரா—வண்ணன் *— முன்னம் சேயூழியானூழி பெயர்த்தான் * உலகேத்தும் ஆழியானத்தியூரான். (௯௫)

அத்தியூரான்புள்ளையூர்வான் * அணிமணியின் துத்திசேர்நாகத்தின்மேல் துயில்வான் *— மூத்திமறையாவான் மாகடல்நஞ்சுண்டான்றனக்கும் * இறையாவான்

---

குளிர்ந்த, வண்ணன்- வடிவையுடையனாய், அத்தியூரான்- அக்காலத்தில் பிற்பட்டாருடைய ரக்ஷிக்கைக்காகத் திருவத்தியூரிலேவந்து நின்றருளின நீர்மையிலேற்றத்தையுடையவன், 'இடவகைகளிகழ்ந்திட்டு' என்கிறபடியே இந்தத் திருப்பாற்கடலில் திருவத்தியூரான இடங்களையுபேக்ஷித்து ஸஸாஹஸிரோமா ஸய்யமாகப் பலவடிவெடுத்தாப்போலே என்னை ரக்ஷிக்கைக்காகப் பலவடிவெடுத்துக்கொண்டு 'நிலைபேராதென்னெஞ்சத்து' என்னும்படி, என்- என்னுடைய, நெஞ்சம்- ஹ்ருதயத்திலே, மேயான்- பொருந்தி நித்யவாஸம்பண்ணாநின்றான், 'தலைமேல தாளிணைகள்' என்னும்படி, என்- என்னுடைய, சென்னியான்- உத்தமாங்கத்திலும் விரும்பி வர்த்தியாநின்றான், ஒருவனுடைய ஸம்ருத்திருக்கும்படியே யென்று விஸ்மிதராகிறார்- (௯௫)

❁ தொண்ணூற்றாறாம்பாட்டு ❁

அ—உபயவிபூதியுக்தனான பெரியமேன்மையையுடையவன் என்னையிப்படி விரும்புகிறானென்கிறார்-

(புள்ளை) பெரியதிருவடியை, (ஊர்வான்) மேற்கொண்டு நடத்துமவனாய், (அணி) அணியப்பட்ட, (மணி) மாணிக்கங்களும், (இன்) அழகிய, (துத்தி) பொறிகளும். (சேர்) சேர்ந்திருக்கிற (நாகத்தின்மேல்) திருவனந்தாழ்வான்மேலே, (துயில்வான்) பள்ளிகொண்டருளுமவனாய், (மூத்தி) மோக்ஷப்ரதிபாதகங்களான, (மறையாவான்) வேதாந்தவாக்யங்களாலே ப்ரதிபாதிக்கப்படுமவனாய், (மா) பெரிய, (கடல்) கடலிற்பிறந்த, (நஞ்சு) விஷத்தை, (உண்டான்றனக்கும்) போஜனம்பண்ணி அந்த ஸாமர்த்யத்தாலே தன்னை ஸர்வேஸ்வரனாக அபிமானித்திருக்கிற ருத்ரனுக்கும், (இறையாவான்) ஸர்வேஸ்வரனானவெம்பெருமான்

மூ—எங்கள் பிரான். (௯௬)

எங்கள்பெருமானிமையோர்தலைமகன்நீ * செய்யகணெடுமால் திருமார்பா *— பொங்குபடமூக்கிலாயிரவாய்ப்பாம்பணைமேல் சேர்ந்தாய் * குடமூக்கில்கோயிலாக்கொண்டு. (௯௭)

---

இப்படி உபாஸநவிஷயத்தை வேதாந்தவேத்யனை தன்பெருமைபாராதே, (எங்கள்) எங்களுக்கு, (பிரான்) உபகாரம் பண்ணுமவனைக்கொண்டு, (அத்தியூரான்) திருவத்தியூரிலே வந்தருளினவன் ஸூரிகளிற்றலைவரான திருவடி, திருவனந்தாழ்வானைச் சொல்லுகையாலே நித்யவிபூதியோகம் சொல்லிற்று, ஸம்ஸாரிகளிற்றலைவரான ராமனைச் சொல்லுகையாலே லீலாவிபூதியோகம் சொல்லிற்றென்கை, 'முத்தீமறையாவான்' என்று வாமனபோது வேதாநீதியை வேதிவாதிக்கிற வேதத்தாலே ஸாராயதயா வேதிவாதிக்கப்படுமவனென்று பொருளாகக்கடவது. (௯௬)

❁ தொண்ணூற்றேழாம்பாட்டு. ❁

அ—என்னைவிஷயீகரிக்கைக்காகத் திருக்குடந்தையிலே ஸாவதானப்வந்து பள்ளிகொண்டருளினானென்கிறார்—

(திரு) எங்களை அடிமைகொள்ளுகைக்கடியான பெரியபிராட்டியாரை, (மார்பா) திருமார்பிலேயுடையவனே, (இமையோர்தலைமகன்) அயர்வறுமமரர்களதிபதியாய், (செம்) அவர்களுக்கு போக்யமான சிவந்த (கண்) திருக்கண்களையுடைய, (நெடு) ஸர்வாதிகனான, (மால்) ஸர்வேச்வரனாய், (எங்கள்) சுஜிதரான வெங்களுக்கு, (பெருமான்) ஸ்வாமியான, (நீ) நீ, எங்களை ஸம்ச்ரிக்கைக்காக, (குடமூக்கு) திருக்குடந்தையை, (கோயிலாக்கொண்டு) கோயிலாகக்கொண்டு, (பொங்கு) திருமேனிஸம்ஸ்பர்சத்தாலே விகஸிதமான, (படம்) பணங்களையும், (மூக்கின்) திருமூக்கையுமுடையனாய், சுகந்தவஜநிதகஷத்துக்குப்போக்குவிட்டிடத்துகைக்கு, (ஆயிரவாய்) ஆயிரம்வாயையுடையனுமான, (பாம்பு) திருவனந்தாழ்வானாகிற. (அணைமேல்) படுக்கையின்மேலே, (சேர்ந்தாய்) பள்ளிகொண்டருளினாய். (௯௭)

மூ—கொண்டு வளர்க்கக் குழவியாய்த் தான் வளர்ந்தது * உண்டது
லகேழு முள்ளொடுங்க * — கொண்டு குடமாடிக் கோவலனாய் மேவி *
என்னெஞ்சம் இடமாகக் கொண்ட இறை. (௯௮)

இறையெம்பெருமானருளென்று *

---

❁ தொண்ணூற்றெட்டாம் பாட்டு. ❁

அ—தம்மை விஷயீகரித்த ஸர்வேச்வரனுடைய சைசவ நாவஸாநஜ்யமும் குடக்கூத்தாடுகை முதலான திவ்யசேஷ்டிதங்களையநுஸந்திக்கிறார் -

(கோவலனாய்) இடையனாய் வந்து பிறந்த நளி, (குடங்கொண்டாடி) ஜாத்யுசிதமாக ஐச்வர்யச்செருக்காலே குடமெடுத்துக்கூத்தாடி, (மேவி) அந்தக் குடக்கூத்தாடின சுவட்டோடே இடைவெளியிற் பொருந்திக்கொண்டு, (என்) என், (நெஞ்சம்) ஹ்ருதயத்தை, (இடமாகக்கொண்ட) தனக்கிருப்பிடமாகக்கொண்ட, (இறை) ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரன், (கொண்டு) கிலெடுத்துக்கொண்டு, (வளர்க்க) பிராட்டி வளர்க்கவேண்டியிருக்கிற, (குழவியாய்) சைசவமான வடிவையுடையனாய்க் கொண்டு, (தான்) தான், (வளர்ந்து) வளர்ந்து, (அது) அத்தசையிலே, (உள்ளொடுங்க) திருவயிற்றுக்குள்ளே ஒருபுடையிலே அடங்கும்படி, (உண்டது) அமுதுசெய்தது, (உலகேழும்) ஸகலலோகங்களையும், கொண்டவடிவின் சிறுமையையு முண்டலோகத்தின் பெருமையையு மதுதான் திருவயிற்றிலொருபுடையிலே யடங்கினபடியையு மிகவாச்சர்யமாயிருக்கும்படியேயென்று விஸ்மிதராய் அநுஸந்திக்கிறார். (௯௮)

❁ தொண்ணூற்றொன்பதாம் பாட்டு. ❁

அ—ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களுக்கு காரியஞ்செய்யும்படி சொல்லுகிறார் -

(இமையோர்) 'ஸர்வோஹம்' என்று காளமூதித்திரிகிற ஈச்வராநிகளான ப்ரஹ்மாதிதேவர்கள், தங்கள் ஈச்வராநத்தை யுமூதின காளத்தையும்புகட்டு, (எம்பெருமான்) எங்களுக்குவகுத்தஸ்வாமியான, (இறை) ஸர்வேச்வரனை, (அருளென்று)

மூ—இமையோர் முறைநின்று மொய்மலர்கள் தூவ *—
அறைகழல்சேவடியான் செங்கணெடியான் *
குறளுருவாய்மாவ்டிவில்மண் கொண்டான் மால். (௯௯)
மாலேநெடியோனேகண்ணனே * விண்ணவர்க்குமேலாவியன்

---

எங்கள்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணுமென்று ஸ்துதித்துக்கொண்டு, (முறைநின்று) அவன்சேஷியும் தாங்கள்சேஷபூதருமாகிற முறையிலேநின்று, (மொய்) அழகிய, (மலர்கள்) புஷ்பங்களை, (தூவ) ஸக்ரமமாகப் பணிமாறிக்கொண்டாஸ்ரயிக்க, (அறை) த்வநியாநின்றுள்ள, (கழல்) வீரக்கழலையுடைத்தான, (சே) சிவந்த, (அடியான்) திருவடிகளை யுடையனாய், (செம்) வாத்ஸல்யப்ரகாசகமான சிவந்த, (கண்) திருக்கண்களையுடைய, (நெடியான்) ஸர்வாதிகனான ஸர்வேஸ்வரன், (மால்) அந்த தேவர்கள்விஷயத்திலே மதகுதிறந்து பாய்கிற வ்யாமோஹத்தை யுடையனாய்க்கொண்டு, (குறளுருவாய்) ஸ்ரீவாமநாவதாரியாய்வந்து திருவவதரித்தருளி லோகமடங்கவிழுங்கும்படி, (மா) மூசிவறவளர்ந்த, (வடிவின்) வடிவையுடையனாய்க்கொண்டு, (மண்) பூமியை, (கொண்டான்) அளந்துகொண்டான், (முறைநின்று) யதாந்யாயமாக நின்றென்னவுமாம்.

❁ நூறாம்பாட்டு. ❁

அ—ப்ரயோஜநாந்தரபரர் நம்மை யாஸ்ரயிக்கும்படி சொன்னீர் உமக்குச்செய்யவேண்டுவது சொல்லீரென்ன, சொன்கொம்புமூடப்படர்ந்த வன்மை யாஸ்ரயித்தளவாக்கித் தரவேணுமென்கிறார்—

(மாலே) ஸௌசீல்யஸௌலப்யாதிகுணங்களால்வந்த பெருமையையுடையனாய், (நெடியானே) விபூதியோகத்தால் வந்த வைபவத்தை யுடையனாய், (கண்ணனே) ஸ்வவ்யதிரிக்தஸமஸ்த வஸ்துக்களுக்கும் நிர்வாஹகனாய், (விண்ணவர்க்கு) பரமபதவாஸிகளான நித்யஸூரிகளுக்கு, (மேலா) அவ்வருகு பட்டி... னாய், அவர்களுக்கும்படி, (வியன்) ஆஸ்சர்ய

௱ — துழாய்க்கண்ணியனே * — மேலாய்விளவின்காய் கன்றினால்
வீழ்த்தவனே * என்றன் அளவன்றால்யானுடையவன்பு. (௧00)

பொய்கையாழ்வார்திருவடிகளே சரணம்.

யடிமான, (துழாய்க்கண்ணியனே) திருத்துழாய்மாலையாலே யழகுபெற வொப்பித்துக்கொண்டிருக்குமவனாய், இப்படியிருந் தானைத்து, (மேலாய்) க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, (விளவின்) வத்ஸாஸுராவிஷ்டமாய் நின்ற விளாவின், (காய்) காயை, (கன்றினால்) வத்ஸரூபமான கன்றாலே, (வீழ்த்தனே) விழவிட்டவனே, (யானுடைய) உன்பக்கல் நானுடையேனான, (அன்பு) ப்ரேமம், (என்றனளவு) அல்பஜ்ஞனான வென்னளவிலே, (அன்று) அடங்கிநிற்பதொன்றன்று, பரிச்சேதிக்கவொண்ணாதபடி யத்தை யகஞ்சுரிப்பச்செய்தித் தந்தருளவேணும், ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் அந்த வ்யாமோஹத்துக் கெல்லையில்லாதபடி யிருக்குமவனாய் அந்த வ்யாமோஹம் ப்ரகாசிக்க க்ருஷ்ணனாய்வந்தவதரித்து ஆச்ரிதருக்கு ஸுலபனாயிருக்குமவனாய், இன்னிலையிலே நித்யஸூரிகளுக்கு மவ்வருகான பெருமையை யுடையனாய், ஸௌந்தர்யஸூசகமான திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனாய், விளாவாய்நின்ற அஸுரனைக்கன்றாய் நின்ற அஸுரனாலே எறிந்துவிழவிட்டு இரண்டையும் முறித்துப் புகட்டாற்போலே என்விரோதியிடைப் போக்கினவனே, எனக்குன்பக்கல் ப்ரேமம் என்னளவன்று இத்தை யமைத்தருளவேணு மென்கிறார் ஆயிற்றாம். (௧00)

பூதத்தாழ்வார்திருவடிகளே சரணம்.

ஜீயர்திருவடிகளே சரணம்.

இரண்டாந்திருவந்தாதி மூலமும் உரையும்

ஸம்பூர்ணம்.